*தன்னுயிர் தான்அறப் பெற்றானை ஏனைய*
*மன்னுயிர் எல்லாம் தொழும்.*

தெய்வப் புலவர் திருவள்ளுவர்

---

# ஞான வாசிட்டம்

## வசனம் - முதல் பாகம்

(வசிட்டர் சொன்ன தத்துவக் கதைகள்)

---

*சுத்த அறிவே சிவம் என்று ஓதும்*
*சுருதிகள் கேளீரோ!*

மகாகவி சுப்பிரமணிய பாரதியார்

*அறிவொன்றே கடவுளாம் - உள்*
*அன்பினால் வணங்குவோம்*

கவியோகி சுத்தானந்த பாரதியார்

# A Mine of Knowledge



*A person of true Vairagya, should he wish to have not only some hints cast on the nature of the cosmos, Manas (mind) and the Universal Spirit from the idealistic standpoint, but also have some rules for guidance in his daily, practical life with the proper illustrations leading towards occult knowledge, will here find, a mine of knowledge to cogitate upon.*

**- K. Narayanaswami Aiyer**

'Laghu Yoga Vasistha (1896)



***Jnana Vasistha (Yoga Vasistha** in Sanskrit) is a popular text on Advaita Vedanta, 'Puranic in form and philosopical in content'.*



*It is in the form of replies given by Vasistha to Sri Rama regarding philosophic problems of life and death, and human suffering, and treats the essentials of Advaita Vedanta.*

# ஞான வாசிட்டம்

## வசனம்

### முதல் பாகம்

**வீரை ஆளவந்தார்**
அழகுத் தமிழ்ப் பா வடிவில் தந்த
ஆன்ம சுகம் அளிக்கும்
அத்துவைத வேதாந்த
**ஞான வாசிட்டம்** நூலுக்கு
இனிய உரைநடைத் தெள்ளமுது

**டாக்டர் இரா. இராசகோபாலன்**

THIS BOOK IS PUBLISHED
WITH THE FINANCIAL ASSISTANCE OF
**TIRUMALA TIRUPATI DEVASTHANAMS**
UNDER THEIR SCHEME AID TO PUBLISH RELIGIOUS BOOK



**ஞான வாசிட்டம் வசனம்**
முதல் புத்தகம்
முதல் பதிப்பு 1999
ரூ. : **60/-**



**கிடைக்கும் இடம் :**

**டாக்டர் இரா. இராசகோபாலன்**, பிஎச்.டி.,
அண்ணா நகர் மதுரை ரோடு,
திருப்புத்தூர் - 630 211. சிவகங்கை மாவட்டம்.



இந்நூலை வெளியிடப் பொருளுதவி தந்த

**திருமலை திருப்பதி தேவஸ்தானம்,**
அதன் நிருவாக அதிகாரி அவர்கள்,
ஆசிரியர் (எடிட்டர்) **என்.எஸ். இராமமூர்த்தி,** எம்.ஏ., அவர்க
ஆகியோர்க்கு எங்கள் நெஞ்சார்ந்த நன்றி.



**ஒளி அச்சுக்கோப்பு :**

பாண்டியன் கணினி அச்சு, மதுரை-1. ✆ 746927



**அச்சாக்கம் :**

கோனார் பிரிண்டர்ஸ், மதுரை-12. ✆ 670255

*ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயம்இன்றே*
*மெய்யுணர்வு இல்லா தவர்க்கு*

- தெய்வப் புலவர் திருவள்ளுவர்

# ஞான வாசிட்டம் வசனம்

## முதல் பாகம்

## பொருள் அடக்கம்


| | | பக்கம் |
|---|---|---|
| | அறிமுகம் | 1 |
| **I.** | **வைராக்கியப் பிரகரணம்** | 7 |
| | 1. சுகர் கதை | 39 |
| **II.** | **முமுட்சுப் பிரகரணம்** | 45 |
| **III.** | **உற்பத்திப் பிரகரணம்** | 57 |
| | 1. ஞான விண்மகன் கதை | 58 |
| | 2. லீலை கதை | 70 |
| | 3. கற்கடி கதை | 91 |
| | 4. அயிந்தவர் கதை | 102 |
| | 5. வஞ்ச இந்திரன் கதை | 105 |
| | 6. மனத்தின் கதை | 108 |
| | 7. பாலன் கதை | 113 |
| | 8. சித்தன் கதை | 117 |
| | 9. உற்பத்திப் பிரகரண முடிவுரை | 124 |
| **IV.** | **திதிப் பிரகரணம்** | 144 |
| | 1. சுக்கிரன் கதை | 144 |
| | 2. தாம வியாள கடர் கதை | 154 |
| | 3. வீம பாச திடர் கதை | 164 |
| | 4. தாசூரன் கதை | 170 |

5. கசன் கதை 196
6. திதிப் பிரகரண முடிவுரை 202

V. உபசாந்திப் பிரகரணம் 203
1. சனகராசன் கதை 203
2. புண்ணிய பாவனர் கதை 212
3. மாவலி கதை 222
4. பிரகலாதன் கதை 233
5. காதி கதை 248

## ஆதார நூல்கள்

1. "அமல ராமாயணம் என்னும்
ஞான வாசிட்டம்
வீரை ஆளவந்தார் என்னும் முனிவர்
அருளிச் செய்த மூலமும்
பிறைசை - அருணாசல சுவாமிகள்
இயற்றிய உரையுடன்
பேறை - தசாவதானம்
செகநாதப் பிள்ளை யவர்களால்
இயற்றிய நூதன உரையுடன்"

வே. நமசிவாய முதலியார்
சென்னை. 1924

2. **Laghu Yoga Vasistha**
Translated into English
by
**K. Narayanaswami Aiyer**
The Adyar Library and Research Centre
Madras 600 020. India.
Fourth Edition. 1980

# ஞான வாசிட்டம்

## அறிமுகம்

### நூற் பெயர் :

ஞான வாசிட்டம் என்பதற்கு வசிட்டர் புகன்ற மெய்யறிவு என்பது பொருளாகும். இந்த நூலுக்கு வாசிஷ்டம், யோக வாசிஷ்டம், மகா ராமாயணம், வசிஷ்ட ராமாயணம், அமல ராமாயணம் முதலான பெயர்களும் வழங்கப் பெறுகின்றன.

ஆனாலும் தமிழில் ஞான வாசிட்டம் என்பதும் வடமொழியில் **யோக வாசிட்டம்** என்பதும் பெருவழக்கில் இருக்கின்றன. யோகம் என்பது பொதுவான ஒரு பெயர். இந்நூல் ஞானயோகத்தை வலியுறுத்த எழுந்தது ஆகையால் ஞான வாசிட்டம் என்ற பெயர் மிகப் பொருத்தம் உள்ளதாகின்றது.

### வாசிட்டம் தோன்றிய சூழல்

சக்கரவர்த்தித் திருமகனாகிய இராமபிரானைத், தான் செய்யும் வேள்விக்குத் துணையாக, அதற்கு மாறான அரக்கர்களை அழித்தற்காக அழைத்துச் செல்லத் தசரதனின் அரண்மனைக்கு வருகிறார், விசுவாமித்திரர்.

அவரது வருகைக்கு மகிழ்ந்து உபசரித்த தசரதன் அவர் கேட்பது எதுவாயினும் தரச் சித்தமாக இருப்பதாகத் தெரிவிக்கிறான். ஆனால் விசுவாமித்திரரோ இளம் இராமனைத் தன்னுடன் அனுப்பி வைக்குமாறு கூறியது கேட்டு மன்னன் திணறுகிறான். விசுவாமித்திரர் முனிவு கொள்கிறார். அனைவரையும் அச்சம் ஆட்கொள்ளுகிறது.

சொன்ன சொல்லைப் போற்றிக் கொள்ளுமாறும் இராமனுக்கு அதனால் நலமே விளையும் என்றும் வசிட்டர் அப்பொழுது அரசனுக்குச் சொல்லி ஆறுதல் அளிக்கிறார்.

தன் மைந்தன் என்ன செய்து கொண்டிருக்கிறான் என்று அவன் நேயத்தாரை தசரதன் கேட்டான்.

இராமன் எதிலும் அக்கறையோ ஆர்வமோ இன்றி இருப்பதாகவும் ஊணும் உடையும் உலகியற் கடமைகளும் அவனுக்கு உவகை தரவில்லை என்றும் தளர்ந்து ஊக்கமின்றி இருப்பதாகவும் தன் வாணாள் வீணாகக் கழிவது குறித்து வருந்துவதாகவும் அவர்கள் தெரிவிக்கிறார்கள்.

அதனைக் கேட்ட விசுவாமித்திரர் "விரும்பிய பொருள் கிடைக்காததாலோ ஆபத்துக் காரணத்தாலோ வந்தது அன்று இந்த மயக்கம்; சொல்லுதற்கு அரிய நிராசை (வேண்டாமை) யாலும் விவேகத்தாலும் (பகுத்தறிவினாலும்) வரக் கூடிய உணர்வுச் செல்வம் (ஞான சம்பத்து)" என்று விளக்குகிறார்.

அச் சமயம் அங்கு இராமனே வந்து விடுகிறான். பரிவுடன் அவனை விசாரிக்கிறான் தசரதன்.

'நல்ல வீட்டை அதன் அடியில் உள்ள எலிகள் அறுத்து அழிக்கும் அழிவைப் போல நீ மோகத்தினால் துன்புறும் காரணம் யாது' என விசுவாமித்திரர் வினவுகிறார்.

'மேலோர் சொல்லை மறுக்கக் கூடியவர் யார்?' என்று பணிவுடன் புகன்று தனது நிலையையும் நினைப்பையும் விளக்கி உரைக்கிறான் இராமன்.

அவனது உரைகேட்டு ஆன்றோரும் சித்தரும் உளம் மகிழ்கின்றனர். அவன் ஆன்மிக அறிவு பெற்றதற்கான பக்குவம் வாய்க்கப் பெற்றிருப்பதை உணர்கிறார் விசுவாமித்திரர்.

அவர் வசிட்டரைப் பார்த்து "நம் இருவரிடை இருந்த

பகைமை நீங்கவும் நல்லோர் எல்லாம் தொல்வினை விடுபட்டு முத்தி பெறவும், தாமரையில் வசிக்கும் பிரமதேவனால் சொல்லப்பட்ட ஆன்மிக அனுபவம் விளங்கும்படி அருளிய ஒப்பற்ற ஞானத்தின் கதைகள் யாவற்றையும் கல்வி மிக்க இராமனுக்குச் சொல்ல வேண்டும்" என்று கூறினார்.

அது கேட்ட, அவையில் இருந்த, தீதிலா நாரதர் வேத வியாதர் முதலான முனிவரர் யாவரும் அதுவே நல்லது என்று சொன்னார்கள்.

அதற்கு வசிட்டரும் இசைந்து, "அஞ்ஞானத் தொகுதி அழியப், பூரணமான ஞானமானது நீங்காத பரமபதமானது யாவருக்கும் உதயமாகும் பொருட்டுத்" தூய அறத்துடன் சொல்லலானார்.

## நூல் அமைப்பு

கதைகளின் வடிவில் தத்துவப் பொருண்மை பொதியப் பெற்றது இந்நூல்.

பிறப்பு இறப்பு, இன்ப துன்பம், மருட்கை தெளிவு முதலான உலகியல் அருளியல் வினாக்களாக இராமன் எழுப்பிய ஐயங்களுக்குத் தவ மேலோராகிய வசிட்டர் கூறிய விடைகளாக அத்துவைத வேதாந்த வகையில் வெளிச்சம் தருகிறார் நூல் முதல்வர்.

இதில் வரும் கதைகள், தத்துவங்களின் ஊர்தி (வாகனங்) களாக, உருவகங்களாக உள்ளன. சனகராசன், மாவலி (மகா பலி), பிரகலாதன் போன்றோர் கதைகள் வருகின்றன; ஆனால் அவை வழக்கமாக உரைக்கப்படும் கதைகள் அல்ல.

"ஞான நூற்கதை நாற்பது மூன்றுமே" என்று கூறும் (தமிழ்) ஞானவாசிட்ட ஆசிரியர் தம் நூலை "இரண்டாயிரத்து ஐம்பத்தைந்து" செய்யுட்களால் அழகுறப் புனைந்திருக்கிறார்.

நூல் ஆறு பெரும் பிரிவுகளாக அமைந்துள்ளது. பெரும் பிரிவுகள் பிரகரணம் என்று சொல்லப்படுகின்றன. அவை 1. வைராக்கியப் பிரகரணம் 2. முமுட்சுப் பிரகரணம் 3. உற்பத்திப் பிரகரணம் 4. திதிப் பிரகரணம் 5. உபசாந்திப் பிரகரணம் 6. நிருவாணப் பிரகரணம் என்ற ஆறாம்.

## ஞான வாசிட்ட நூலாசிரியர்

*வீரை ஆளவந்தார் என்ற முனிவர் இதன் ஆசிரியர். 'மாதவனது நாபியில் உதித்த மலரோன் (பிரமதேவன்) மனத்தில் உதித்த வசிட்டன், அயனிடம் இந்த ஞானப் பொருளைக் கேட்டு, நாளை வீணாகப் போக்காத இராமனுக்கு அங்கு அனுக்கிரகம் செய்து, இங்கு ஆளவந்தார் என்ற பெயரோடும் வீரை என்னும் நகரத்தில் மாதவப் பட்டர் குடியில் அவதாரம் செய்து திரும்பவும் தானே வந்து தமிழில் அந்த ஞானவாசிட்ட அமல ராமாயணத்தை விளம்பினான்,' என்று ஒரு செய்யுள் கூறுகிறது.*

*அதற்குப் 'பிரமனே மிகுந்த காருண்ணியத்தினால் இப் பூமியின் கண் ஆள வந்தார் என்னும் ஆசிரியராக அவதரித்து இந்நூலைத் திராவிட பாஷையில் அருளிச் செய்தனர்' என்று பொருள் விளக்கம் தரப்பட்டுள்ளது.*

*வீரை ஆளவந்தார் தமிழிலும் வடமொழியிலும் மிகச் சிறந்த புலவர் என்பதையும் அத்துவைத வேதாந்தத்தில் ஆழ்ந்து அகன்ற வல்லமை பெற்றவர் என்பதையும் ஞான வாசிட்ட நூல் சான்றாக நின்று விளக்கி வருகிறது. மூல நூலான யோக வாசிட்டத்தினின்றும் சற்றும் விலகாமல் அழகான தமிழ்ச் செய்யுட்களால் வேதாந்தப் பொருளை ஐயம் திரிபற அவர் ஆக்கியுள்ளமை தமிழுக்கும் இந்தியத் தத்துவக் காட்சிக்கும் அவர் அருந்தொண்டு புரிந்துள்ளார் என்பதற்குத் துலாம்பர மான சான்றாக உள்ளது.*

## நூலின் மகிமை

*சாத்திரத்திற் பெரியதுஇது*<br>
*தடங்கா வியத்திற் பெரியதுஇது*<br>
*மாத்திரத்தின் மெய்ஞ்ஞான*<br>
*வழியாற் பெரியதுஇது ஞான*<br>
*நேத்திரத்திற் பெரியோர்க்கு*<br>
*நிதிபோல் பெரியதுஇது கதிரோன்*<br>
*கோத்திரப் பொற் பாத்திரத்தில்*<br>
*குதித்த அமுதாம் வாசிட்டம்*

*என்று ஒரு செய்யுள் பேசுகிறது.*

'ஞான வாசிட்டம் என்னும் இந்நூலே ஞான சாத்திரங்களிற் பெரியதாகும். இதுவே விசாலமுள்ள காவியங்களில் பெரிதாம்; தத்தவஞான மாத்திரத்தின் வழியால் மகத்தானதாம்; இதுவே ஞான திருட்டியில் பெரியோர்களுக்குச் சங்க நிதி பதுமநிதியைப் போல மகத்தானதாம். சூரியனது கோத்திரம் என்னும் கனக பாத்திரத்தில் வாய்ந்த அமுதாகும்' என்பது இச்செய்யுளின் பொருள்.

வேதாந்தத் திருமடங்களில் ஞான வாசிட்டம் பாடம் சொல்லப்பட்டு வந்தது. வேதாந்திகள் அதனை மனப்பாடம் செய்வதும் மற்று அதனைப் பிறர்க்கு எடுத்துரைப்பதும் வாடிக்கையாக இருந்து வந்தன. (வடமொழிச் சார்புடைய) மடாலயங்களில் இன்றும் யோக வாசிட்டம் முறையாக ஓதப்பட்டு வருகிறது).

இரமண மகரிஷி போன்ற மகான்கள் தம் வாக்கிடை ஞான வாசிட்டத்தை மேற்கோளாகக் காட்டி அடியார்க்கு மெய்யறிவு தெருட்டியுள்ளார்கள் என்பது இங்கு நினைவு கூர்தற்கு உரியது.

இக் காலத்தில் சமய விழிப்புணர்வும் தத்துவஞான அமுது பருகுவதில் ஆர்வமும் யாண்டும் பரவி வருகின்றன. அவர்களுக்கு ஞான வாசிட்டம் நல்விருந்து ஆக அமையும் என்பதில் ஐயம் இல்லை.

## வசன நூல்

ஞான வாசிட்டத் தமிழ்ச் செய்யுள் நூலும் அதற்கான உரையும் இக்காலத்தில் பொது ஆர்வலர்கள் படிப்பது சற்றுக் கடினமாக இருக்கக் கூடும். ஆகவே அதற்கு உரைநடை வடிவில் இயன்ற அளவு எளிமையாக்கி, வேண்டிய இடங்களில் அடைப்புக்குள் (தமிழ் அல்லது ஆங்கிலத்தில்) பொருள் வழக்குத் தந்து இந்த நூல் அமைக்கப் பெற்றுள்ளது.

ஞான வாசிட்டம் செய்யுள் நூல் இரண்டு புத்தகங்களாக இருப்பது போன்றே அதை அப்படியே பின்பற்றி வசன நூலும் இரு புத்தகங்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

இப்பொழுது தங்கள் கையில் இருப்பது முதற் புத்தகம் (முதற் பகுதி).

## மூல நூல் பற்றி ஒரு குறிப்பு

'வசிட்ட முனி இராமனுக்குச் சொன்ன அனைத்தையும் தன் சீடராகிய பரத்துவாச ரிஷிக்கு நூறாயிரம் (இலட்சம்) கிரந்தத் தொகையால் வான்மீகி தொகுத்துச் சொன்னார்; பிற்காலத்தில் அந்த இலட்சம் கிரந்தத்தை ஆறாயிரம் ஆக உலகம் உய்ய, வேதங்களை நன்கு ஆய்ந்த கான்மீரப் பண்டிதப் பேர் (காஷ்மீரப் பண்டிதன் என்னும் பெயரையுடைய) பரம குருவானவர் விரித்தெடுத்தார்' என்று வரும் ஞான வாசிட்டச் செய்யுள் ஒன்று இதன் முதனூல் பற்றிச் சுட்டுகிறது. அது பற்றிய ஒரு குறிப்பு வருமாறு.

'யோக வாசிட்டம்' என்ற பெயரில் வடமொழியில் இரண்டு நூல்கள் உள்ளன. அவற்றுள் பெரியது பிருகத் (பெரிய) யோக வாசிட்டம்; இன்னொன்று இலகு (சிறிய) யோக வாசிட்டம்.

பிருகத் யோக வாசிட்டம் 36,000 கிரந்தங்களும் (ஒரு கிரந்தம் என்பது 32 அசைகள்) அதற்கு விளக்கம் 74000 கிரந்தங்களும் மொத்தம் ஓர் இலட்சம் கொண்டிருக்கிறது. இலகு யோக வாசிட்டம், முந்தியதன் வாசகத்தை அப்படி யப்படியே வைத்து 6000 கிரந்தங்களில் வகுத்துள்ளது. அதற்கு உரையும் அதே அளவு கிரந்தங்கள் கொண்டிருக்கிறது.

இவ்வாறாகச் சுருக்கித் தரும் பணியைக் காஷ்மீர் தேசத்துப் பெரும் பண்டிதர், அபிநந்தா என்பவர் செய்தளித்தார் என்று அறிய முடிகிறது.

யோக வாசிட்டம் (அவ்வாறே தமிழ் ஞான வாசிட்டம்) ஒரு புதிய தனி வழியைக் கடைப் பிடிக்கிறது. வேதாந்தக் கோட்பாடு ஒன்றை அதன் பல கூறுகளோடு முதலில் புகல்கிறது; பின்பு அதனை அழகான கதைகளால் துலக்கம் செய்கிறது. அந்த வகையில் இது புராணங்களைவிட்டு வேறாக விளங்குகிறது.

# முதலாவது
# வைராக்கியப் பிரகரணம்

## *வசனம்*

### வணக்கம்

*நிலைபெற்ற ஞான ஒளியே, புவியிலும் மேல் வெளியிலும் பொன்னுலகிலும் எம் அகத்திலும் புறத்திலும் திகழ்கின்றது; காணப்படும் வடிவங்கள் யாவுமாய் அது நிறைந்திருக்கின்றது. அப்பொருளை மன மொழி மெய்களால் இரண்டறத் தொழுது வணங்குவோம்.*

### நூற் பெருமை

*நிகர் இல்லாத வாசிட்டம் என்ற ஞான நிபுண நூல், திகழும் நான்முகன் முதலிய கடவுளர் ஆகிய மும் மூர்த்தி களாலும் எல்லா வேதங்களாலும் சாத்திரங்களாலும் புகலப் படும் ஆன்மிக ஞானத்தால் நிரம்பியிருக்கிறது.*

*நிலைபெற்ற வாசிட்டம் ஆகிய மேலாம் ஞான சாத்திரம் ஆனது, முதன்மையாக உள்ள பிரமதேவனது இதயத் தாமரைக்கு ஞான சூரியனாகவும் வில்லை ஏந்த மனமில்லாமல் விடுதலை வேட்கை நிலையில் இருந்த இராமபிரானது திருச்செவிக்குத் தெளிந்த அமுதம் ஆகவும் உலைவு இல்லாத வான்மீகி முனிவரின் அனுபூதி உரையில் உதித்த தத்துவம் ஆகவும் விளங்குகிறது.*

*பெரியோர் அறியத் தக்க பெருமை சான்றது இது; சிறியோர் அனுபவமாக அறிய முடியாதது. அறிவிக்கும்*

முறையில் சிறந்தது. ஆதலால் வாசிட்ட நூலானது அறிதற்கு அரிய மெய்ஞ் ஞானத்தை அறிவிக்கும் ஞான சாத்திரங்கள் எல்லாவற்றிலும் மேலானது ஆகும்.

தன்னைத் தெரிந்து கொள்ள முற்படும்-ஆனால் அதற்கான தெளிவு இல்லாத-புத்திரர்க்கு அறிவாகிய உணவை ஊட்டி ஆன்ம நலம் பேணி என்றும் இன்பம் தரும் அன்பினால், அருமையான வாசிட்ட நூல் அன்னையாக விளங்குகிறது. விடய ஆகாரத்தை ஊட்டி உடல் நலம் பேணிக் காக்கும் ஈன்றாளும் அதற்கு ஒப்பாதல் அரிது. ஏனெனில் வாசிட்டத் தாய் பேரின்ப வாசனை (மனப் பதிவு) உண்டாக்கிப் பிறப்பை அகற்றுவாள்.

## அவையடக்கம்

எண்ணற்கு அரிய பெருங்குணத்து இராம பிரான் தன் ஆன்ம சொரூபம் பெற வசிட்ட முனிவர் சொன்ன ஞான நூலை இசை அமைந்த தமிழில் பொற்கலத்தில் வைக்கத் தகும் அமுதத்தை மட் காலத்தில் வைப்பது போல் வைக்கத் துணிந்த ஏழையாகிய யான் அதனை விருத்தம் ஆக-விருத்தப் பாக்களில்-பாடுவேன்.

## இந் நூலுக்கு உரியோர்

இவ் வாசிட்ட நூலுக்கு அதிகாரியானவன் (வாசிக்கும் தகுதி உள்ளவன்) அறிவில் வான் அல்லன், மனத்துயர் நீங்க மெய்யுணர்வு பெற்ற சீவன் முத்தன் அல்லன். ''யான் கட்டுண்டேன், இதை விடுத்து இனி மோட்சம் அடையக் கடவேன்'' என்று சிந்திக்கும் உறுதியுள்ளவனே ஆவன்.

## நூல் தோன்றிய வரலாறு

### வான்மீகரைப் பரத்துவாசர் வினாதல் :

முற்றும் உணர்ந்த ஆசாரியர் ஆன உயர் வான்மீகரை அடைந்து பரத்துவாச முனிவர், ''அரிய சத்துவ குணம் படைத்த இராமன் கொடிய பிறவியில் வாய்க்கும் வெம்மையான சம்சார (உலகியல்)த் துயரில் இருந்தது எப்படி? சொல்லியருளல் வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்.

## வான்மீகர் உரைத்தல்

*(ஞான) மைந்தன் ஆகிய பரத்துவாசனே, நீ கேட்ட கேள்வி நன்று. பேரின்ப (நிருவாண) நிலை பற்றிக் கேட்டு உணர்தற்கு உரிய நான்கு கடைப்பிடிச் செல்வம் (சாதன சதுஷ்டய சம்பத்து) கைவரப் பெற்றுள்ளாய். நீ வினவியதனைக் கூறுவேன். துன்பம் தரும் அறியாமையை (மோகத்தை) வெல்லலாம். நம் தலைக்கு மேல் உள்ள ஆகாயத்துக்கு நீல நிறம் கிடையாது. ஆனால் அது இருப்பதாகக் காணப்படுகிறது. அவ்வாறே பரப் பிரமத்தில் (மேலாம் மெய்ப் பொருளில்) இல்லாத மோகம் (பொய்யான பிரபஞ்சம்) தன்னைப் பொருத்திக் கொண்டிருக்கிறது-காணப் படுகிறது.*

## உள்ளுணர்வினால் உறுதி கொளல்

*தனக்குத் தானே உண்டாக்கிக் கொள்ளும் எண்ணங்களே (சமஸ்காரங்களே) இயல்பாக இருக்கும் மனத்துக்கு உண்மை போன்று காட்சி தரும் இந்தப் பேருலகின் மாயத் தன்மையை (கற்பனையாகிய இவ்வுலகம் என்ற எண்ணத்தை)ச் சிறிதும் நினையாமல் மறந்து விடுவது நல்லது என்ற தன் உள்ளறிவால் உறுதி கொண்ட அந்தக் கணமே நிருவாணம் (பெரும் பேரின்பம்) கிட்டுகிறது.*

*இந்தப் பேரின்பம் எப்போதும் ஒளி உமிழ்வது, ஒருவரால் உண்டாக்கப் படுவது அன்று; தானே உண்டாவது, அழிவற்றது. புறம் போக்கும் அறிவுக்கான நூல்களாகிய குழிகளில் விழுந்து உழலும் அறியாமை உடையவர்களால் அஃது ஒரு காலும் உணரவோ துய்க்கவோ முடியாதது.*

## வாசனைத் துறப்பு

*மனத்தை அலைக்கழிக்கும் வாசனைகளை (மனத்தின் ஒட்டுதல்களை) மிச்ச மீதியின்றி விட்டொழித்தல் நன்று என்றும் அதனால் நிலை பெற்ற வீடு பேறு கிட்டும் என்றும் பெரியோர்கள் சொல்லியுள்ளார்கள்.*

*வாசனைகள் (மன ஒட்டுதல்கள்) இரு வகைப்படும். ஒன்று மறுபடி மறுபடி பிறவியைத் தரும் கோரத்தன்மை உடையது.*

அது மலினம் (அசுத்த வாசனை) எனப்படும். மற்றது, பிறப்புகளிலிருந்து விடுபட வைப்பது. அது சுத்த வாசனை எனப்படும்.

மடமையின் செறிவே உடம்பாக, மிகுந்த அகம்பாவம் நிறைந்து, வளர்ந்து வரும் பல பிறவிகளை மேலும் மேலும் உண்டாக்குவது தான் மலினம்.

நெருங்கும் மறு பிறவியை விட்டு விட்டு நெருப்பால் வறுக்கப்பட்டதால் முளைக்க முடியாதிருக்கும் விதை போன்று இருப்பது சுத்த வாசனை.

## சீவன் முத்தியால் ஞான அனுபவம்

சுத்த வாசனைகளை வளர்த்துக்கொண்டோர் தத்தம் முந்திய வினைகளை (பிராரப்த கன்மங்களை)க் களைந்து விடுவதற்காக ஓர் உடம்பைத் தாங்கிக் கொண்டு இருக்கிறார்கள். பிறவித் துன்பங்களுக்கு அவர்கள் அதன் பின் ஆளாவதில்லை. அவர்கள் சீவன் முத்தர்கள் (உடம்புடன் இருக்கும் பொழுதே விடுதலை பெற்றவர்கள்) என்று சொல்லப் படுவார்கள். அந்த நிலையானது. நுட்பமான ஞான அனுபவத்தால் பார்க்கக் கூடிய ஞான விடயங்களை எல்லாம் பார்க்கவும் சிதானந்த நிலை (நனவில் பேரின்ப நிலை)யைத் துய்க்கவும் அவர்களுக்கு ஆற்றலைத் தருகிறது.

## இராமன் சீவன் முத்தன் ஆன நெறியை விளம்பத் தொடங்குதல்

மூத்த வான்மீக முனிவர் மேலும் சொல்வார் :

என் (ஞான) மைந்தனே (சீடனே), மாட்சிமை உள்ள சீவன் முத்தித் தன்மை அடைந்து இராமன் பூரணமான சிறந்த மனத்துடனே இருந்த நெறியைக் கூறுவேன், கேட்பாயாக. அறிவு திகழும் அந்தக் கேள்விச் செல்வம் உனது மூப்பு மரணங்களைத் தவிர்க்குமாக.

(இராமன் தான் உணர்ந்த சுவானுபவத்தை அவன் நேரடியாக விளங்கிக் கொள்ளும் பொருட்டு - அபரோட்சமாம் பொருட்டு - முன்பு வசிட்டர் உரைத்த

*கதைகளை - வான்மீகி முனிவர் பரத்துவாசருக்குத் தாம் அனுக்கிரகித்த சுவானுபவம் நேரடி அறிவாகும் பொருட்டுச் சொல்லத் தொடங்குதல்.....)*

## இராமன் தீர்த்த யாத்திரை விரும்புதல்

*நால் வேதங்களையும் வேறுபல அறிவு நூல்களையும் நன்கு பயின்று தன் இளம் பருவத்தை விளையாட்டாகக் கழித்து அச்சமற்று இருந்து வந்தான் இராமன். சில காலம் அவ்வாறு சென்றது. விளையாட்டுப் பருவம் நீங்கிய பின்னர், ஆன்ம ஆதாயம் கருதிச் சான்றோர் உறையும் தூய இருப்பிடங்களையும் புனிதத் தலங்களையும் கண்டு வர அவனுள் ஆர்வம் உண்டாயிற்று.*

*தாமரையை அடையும் அன்னப் பறவை போல் இராமன் தன் தந்தையின் பாதத்தை அடைந்தான். வணங்கினான்.*

*"தொன்மையான நல்ல நதிகள், தேவாலயங்கள், முனிவர்களின் தவ வனங்கள் ஆகியவற்றைத் தந்தையே, தங்கள் தயவான இசைவுடன், தரிசித்து வர என் மனம் விரும்புகிறது.*

*முடிவிலாது யான் கேட்டன எல்லாம் தாங்கள் முடித்து வைத்தீர்கள். அடியேனின் இவ் வரத்தையும் தந்துதவ வேண்டும்" என்று கேட்டான்.*

*வையம் புகழும் முனிவராகிய வசிட்டருடன் இனிது ஆலோசித்தான் தசரதன். அதன்பின் 'கடிதின் மீள்தி' - போய்ச் சீக்கிரம் திரும்பி வா - என்று விடைகொடுத்து அனுப்பினான். கார்வண்ணனான இராமன் தந்தையின் கழல் பணிந்து புனிதப் பயணம் புறப்பட்டான்.*

## தம்பியரோடு பயணம் மகிழ்தல்

*தம்பிமார்களுடன் நன்னாள் ஒன்றில் பயணம் மேற்கொண்டு தம் கோசல நாட்டை விட்டு நீங்கிப், பரவிய நதிகளையும் தவ வனங்களையும் துறவிகளின் இருப்பிடங்களையும் வெம்பிய பாலை நிலங்களையும் கடற்கரைகளையும் மலைச் சார்புகளையும் வீரன் இராமன் மகிழ்ச்சி மிகக் கண்டு உலாவினான்.*

## அயோத்தி திரும்புதல்

அமரர் போற்ற, மானிடர் துதிப்பத் தான் மேற்கொண்ட தீர்த்த யாத்திரையினின்றும் திரும்பி, தனது சிவ உலகை அடையும் சிவபெருமான் போலவும் பொன்னுலகைப் பொருந்தும் இந்திர குமாரன் சயந்தன் போலவும் தன் தந்தை உறையும் அயோத்திப் பட்டணத்தை, அனைவரும் மலர் சொரிந்து போற்ற இராமன் வந்து அடைந்தான்.

அங்கே தந்தை தசரத மன்னனிடம் தான் பார்த்தறிந்த பல நாடுகளையும் அங்குள்ள இராச நீதிகள் பல்வேறு நடைமுறைகள் என்பவற்றையும் தெரிவித்தான்.

## இராமனின் தினசரி நடைமுறை

அதன்பின் அவன் நாள்தோறும் பொழுதுபுலரும் முன்பே படுக்கை விட்டு எழுந்து நாட்கடமைகளைச் செய்தும், தந்தை தசரதனின் தாள் பணிந்தும் நெடுந் தவத்து வசிட்டர் முதலான முனிவரரின் உரைகளையும் ஞானநீதி வாய்ந்த பல கதைகளையும் கேட்டுக் கொண்டும் வந்தான்.

இதற்கிடையில் தந்தை சொன்னவாறு படைகளுடன் விலங்குகளை விரட்டிக் கொண்டு போவான்; உற்றார் உறவினர் நேயர் தம்பியருடன் உண்டு பருகி மகிழ்ந்து இரவுகளை இனிதே தள்ளி வந்தான். குளிர்ந்த வெண் திங்கள் போலவும் இனிய அமுதம் போலவும் அரசர்களுக்கு இனிமை செய்தும் வந்தான். அவனுக்கு வயது பதினைந்து ஆகியது.

## இராமனின் வேண்டாமை உணர்வு

இவ்வாறு இருந்துவரும் நாளில் நிரம்பிய எழில் உள்ள இராகவனது உடல், கோடையில் குறைந்து கொண்டே வரும் ஆற்று நீர் போல நாளும் குறையத் தொடங்கியது. நெடிய விழிகளை உடைய முகம் வெள்ளைத் தாமரையாக விளர்த்தது. ஒலிக்கும் வீரக் கழல் பூண்ட அவ் வீரன் ஒரு கையினால் கன்னத்தைத் தாங்கிக் கொண்டு பதுமாசனத்தில் இருக்கத் தொடங்கினான்.

இராமன் சிந்தனை வயமாகவே இருந்தான். செய்தொழில்

ஒன்றும் பாரான். யாரிடத்தும் எதுவும் உரையான் ஆகிப் புனையா ஓவியம் போல் இருந்துவந்தான். இதைப் பார்த்த அவனுடைய அன்பரும் பணியாளரும் அவனைப் பணிந்து வேண்டிக் கொள்ள, நொந்து, தளர்ந்த முகத்துடன் அன்றாடச் செயல்களை ஆற்றி வந்தான்.

## தசரதன் வினாதல்

தந்தை தசரதன் ஒரு நாள் தன் அருகே மைந்தனை இருத்தி, "நீ வருந்தும் காரணம் யாது?" என்று கேட்க, அதற்கு அவன் தந்தையின் திருவடிகளை வணங்கி 'வருத்தம் ஒன்றும் இல்லை' என்று புன்னகையுடன் கூறிவிட்டு அங்கிருந்து தன் இருப்பிடம் சென்றான்.

## விசுவாமித்திரர் வருகை

இஃது இவ்வாறு இருக்க, உலகு புகழ் விசுவாமித்திர முனிவர் தசரதனின் அரச அவைக்கு வந்தார். அரசர்க்கு அரசனான அவன் அவரை வணங்கிப் போற்றி செய்து முறைப்படி பூசனை செய்தான்.

## மன்னனின் பேருவகை

"அடியேன் எதிர்பாராதிருந்த தருணத்திலும் கருணையால் எளிதின் எழுந்தருளிய தங்களின் மேலான காட்சியால் என் வினைகள் எல்லாம் தவிரப்பெற்று, சூரியனால் மலர்ச்சி பெற்ற தாமரைப் பூவிற்கு ஒப்பானேன். இப்படிப்பட்ட ஒப்பற்ற இன்பத்தை இதற்கு முன் யான் ஒருபோதும் அடைந்திலேன். மழையிலாக் காலத்து வருந்தும் பயிரைக் குளிர்விக்கும் மழையையும் குருடன் எய்திய விழியையும் தங்கள் காட்சி ஒத்துள்ளது.

உடம்போடு சுவர்க்கம் போகும் நெறி கிடைத்தாற் போலவும், நீங்கிய உயிர் உடம்பிற் புக மீள வந்தது போலவும் ஆரவாரிக்கும் பாற்கடலில் உண்டான அமுத கலசமானது என்னிடம் வந்தது போலவும் எந்தையாகிய தாங்கள் ஈண்டு வந்தருளிய இன்பமானது மெய் முழுதும் குளிர, என் மனத் தளர்ச்சியை எல்லாம் அகற்றிவிட்டது.

## முனிவர் வந்த காரியம் - அரசன் வினாதல்

விருப்பு வெறுப்பும், அச்சமும் நிலையின்மையும் சினமும் பிணியும் இல்லாத மாதவரே, இவண் தாங்கள் வருகை தந்தமை புதுமைத்து ஆகும். தாங்கள் கருதியது எதுவாயினும் அதனைத் தரச் சித்தமாயுள்ளேன், உரையுங்கள்'' என்றான்.

## வேள்விக்கு உதவ வேண்டல்

மேதகு முனிவர் அது கேட்டு மெய் புளகம் அடைந்து சொல்வார் :

''மன்னர்கள் வணங்க வாழும் பேரரசனே, வசிட்டரின் சொற்படி நடப்போனே, உயர் சூரியனின் குலத்து வந்தோன் ஆகையால் உரிய சொற்களே மொழிந்தாய். முதன்மையான, சிவந்த நெருப்புடைய வேள்வியை யான் முயன்று நடத்துதற்கு இடையூறு ஆகி இன்னல் செய்யும் அரக்கர்களைப் பொறுக்க முடியாமல் இங்கு வந்தேன். நீ இரங்கல் வேண்டும்.

கொடுக்கத் தக்கவன் நீ என்று புகல் அடைந்தேன். எனவே புலி போன்ற மொய்ம்பும் இந்திரன் போன்ற துணிவும் உடையவனும், மாய அரக்கர்களின் காலனும், வாய்மையாளனும் நின் மூத்த புதல்வனும் ஆகிய தெளிவுடைய இராமனைத் தரக் கடவாய்.

## 'இராமனைப் பற்றி அஞ்ச வேண்டா' எனல்

எனது மிகுந்த காவலால் இராமன் இராட்சதப் படையை எளிதாகக் கொல்வான். அரசே, அவன் இளையன் என்று அஞ்சுவதை விட்டுவிடு. வருந்துதற்கு இடமான ஐயமுள்ள செயலில் எம் போன்ற முனிவர்கள் மனம் வைக்க மாட்டார்கள்.

யாவரிலும் சிறந்த இராமனின் பெருமையை வசிட்டரும் என்னையும் போன்றோர் தாம் அறிவர். நீ கருதினால் பெருந்திறல் இராமனை அளிப்பாயாக. இரப்போருக்குப் பெருந்தகையோர் கொடாத பொருள் உண்டோ? கொடுப்பின் வீரியர்களான இராக்கதர்கள் மாய்தல் திண்ணம்'' என்றார்.

## தசரதன் திணறல்

விசுவாமித்திர முனிவரின் மொழி கேட்ட தசரதன் ஒரு முகூர்த்த நேரம் (இரண்டு நாழிகை) அயர்ந்தே போனான்.

"தனி ஒரு சிறுவன், பதினைந்தே வயதுடையான், யுத்தம் செய்தலை அறியான் கடும் ஆற்றல் வாய்ந்த அரக்கர்களோடு போர் செய்யும் வலி இல்லாதவன் பகைவரின் கோள்கள் யுக்திகள் என்பன அறியான். ஆகலின் நாற்படைகளுடன் நானே சென்று அரக்கர்களோடு அரும்போர் நிகழ்த்துவேன்.

மூத்தவன் இராமன் பிரிய நேர்ந்தால் மற்ற மூவரும் உயிர் வாழ மாட்டார்கள். நானும் இன்னுயிர் வாழேன். இப்பொழுது இராவணனைத் தவிர மற்றவர்களுக்கு நான் அஞ்சேன். போர் செய்யும் மற்றவர்களின் வீரங்கள் நிலை மாறாமல் இருக்குமா?

காலம் மாறி வருவதால் எல்லாப் பொருள்களும் கலங்கி வேறுபடும். வலியோர் மெலியோர் ஆவர். சூரிய குலத்துப் புவியரசாகிய யான் மூப்பினால் இனிச் செய்வது யாது என்று மிகவும் துயர் உறுகின்றேன்" என்று சொன்னான்.

## முனிவரின் சினம்

அது கேட்டு "விரும்பியதைக் கொடுத்தேன் என்று சொன்ன வாய்மை தவறினாய். போரில் உயர்ந்த சிங்கம் போன்ற நீ சிறுமையான விலங்கின் இயல்பு கொண்டாய். மருவிய மனைவி மக்கள் சுற்றத்தாரோடு நீ வாழ்க நாம் போகிறோம்" என்று மாமுனி விசுவாமித்திரர் முனிந்தார். பூவுலகர்க்கும் வான் உலகர்க்கும் பெரும்பயம் பீடித்தது.

## சொன்ன சொல்லைக் காப்பாற்றுமாறு வசிட்டர் அறிவுறுத்தல்

மாதவர் ஆகிய விசுவாமித்திரரின் முடிவைக் கண்ட வசிட்ட முனிவர் தசரதனை நோக்கி, 'மனு வமிசத்திற் பிறந்து தசரதப் பேரரசன் என்ற பெயர் பெற்று விளங்கும் நீ சொன்ன உறுதி மொழியைக் காப்பாற்றிக் கொள்வாயாக. நீ உரை பிறழ்ந்தால் வேறு யாரே காக்க வல்லார்? திருத்தம் செய்யப்பெற்று உன்னால் நிறுத்தப்பட்ட இராச நீதியைப்

பூமியில் உள்ளவர்கள் கடவாமல் காப்பாற்றுகிறார்கள்; அங்ஙனம் இருக்க வேந்தனாகிய நீ கடக்கலாமா?

நெருப்பால் காக்கப்படும் அமுதத்தைப் போல இவ் விசுவாமித்திரரால் இராமன் நன்கு காக்கப் படுவான். போரே வாழ்வாக உடைய இராட்சதர் செய்யும் தீங்குகள் இராமனை அணுகா'' என்றார்.

அது கேட்ட திண் தோள் வேந்தன் தசரதன் "அருளால் வாய்க்கப் பெற்ற குமரன் என்ன செய்கிறான்?'' என்று இராமனின் நேயத்தாரைக் கேட்டான். அவர்கள் கைகுவித்து, தீர்த்த யாத்திரை சென்று வந்த நாள் முதலாக இராமன் அடைந்திருக்கும் துயர நிலையை விளம்பினார்கள்.

## இராமனின் விரக்தியை ஏவலாளர் கூறுதல்

"நாங்கள் பாதம் பணிந்து வேண்டிக் கொண்ட பின்பு, பண்டை நியமங்கள் சிறிது செய்வார். 'இதம் தரு மகளிரும் நிதியும் இல்லமும் மெய்யில்லாதன. இவற்றால் என்ன பயன்?' என்பார். வெளுத்த உடையும் அறுசுவை உண்டியும் தண்ணீரும் பிறவும் அவருக்கு விருப்பம் தரவில்லை. செருக்கு நீங்கிய துறவோர் போலப், புறப் பொருள்களில் மன நாட்டமும் அரச கருமம் சுகங்களில் மகிழ்தலும் துன்ப துயரங்களில் வருந்தலும் இல்லாமல் இருக்கிறார்.

சீவன் முத்தி அடைதற்கு உதவாத - பயனற்ற - காரியங்களால் தான் வாணாள் வீணாளாகக் கழிகிறது என்று இரங்குகிறார். அடர் செல்வம் ஆபத்துக்கு இடம் என்று ஆசை தவிர்ந்து அனைவர்க்கும் கொடை புரிகிறார். அவரிடம் ஓடும் எண்ணத்தை எங்களால் அறிந்து கொள்ள முடியவில்லை. இளவரசருக்கு, அரசர்கட்கு உரிய நற்குணங்களைப் பயிற்ற வல்லார் யார் இருக்கிறார்? தற்போது தொடர்ந்து வரும் நிலைமை இது'' என்று வணங்கிச் சொன்னார்கள்.

## இராமனை அழைத்து வருமாறு முனிவர் கூறுதல்

இராமனின் அணுக்கர்கள் உரைத்தவற்றைச் செவி மடுத்த விசுவாமித்திர முனிவர் சொல்லத் தொடங்கினார்.

"அந்த மகத்தான செல்வனை, கூட்டமாக இருக்கிற மான்களில் தனித்திருக்கும் மானைக் கொண்டு வருவது போல் நீங்கள் இங்குக் கொண்டு வாருங்கள். விரும்பிய பொருள் கிடைக்காததாலோ ஆபத்துக் காரணத்தாலோ வந்தது அன்று இந்தப் பெரிய மயக்கம். சொல்லுதற்கு அரிய நிராசையாலும் (வேண்டாமையினாலும்) விவேகத்தாலும் (பகுத்தறிவினாலும்) வரக் கூடிய உணர்வுச் செல்வம் (ஞான சம்பத்து) ஆகும். குற்றமற்ற ஆன்மிக ஆய்வுக்கான பல யுக்திகளாலும் மயக்கம் நீங்கப் பெற்று எங்களைப் போலப் பிரம்ம நிலையில் நல்லமைதி பெறுவான்.

இராமன் பூரண மனம் நிறைந்து, பெருமையோடு மானிடர்க்குத் தகுந்த யாவும் மகிழ்ந்து செய்வான்" என்று விசுவாமித்திரர் கூறும் சமயத்தில் அங்கு இராமனும் தந்தையை வணங்கும் பொருட்டுச் சபைக்கு வந்தான். தந்தையின் கழல் அடிகளையும் வசிட்டர் விசுவாமித்திரர் பாதங்களையும் கலைஞானம் பயின்ற மறையோர் அடிகளையும் கல்வி கற்பிக்கும் ஆசிரியர்களின் அடிகளையும் வணங்கினான்.

தன்னை வணங்கினவர்கள்ளச் சொற்களாலும் தலையை அசைத்தலாலும் விழிச்செயலாலும் வணக்கத்தை ஏற்று மதிப்புச் செய்தான்.

தன்னிடம் வந்து அமருமாறு தந்தையாகிய அரசன் சொல்ல, அதற்கு வராமல், மடித்த துணியைத் தரைமேல் இட்டு அதில் இருந்தான், இராமன். அவனைப் பார்த்துத் தசரதன் "உயர் உணர்வு படைத்த மைந்தா, முடிவில்லாத நற்சுகங்களில் இருக்க நினைக்க வேண்டிய நீ மூடர்கள் போன்று மனம் சோர்ந்து அழகிய உடம்பு மெலிந்து நொடிப்பொழுதும் மனம் நோதல் வேண்டா.

முதியவராகவும் பிரமரிஷியாகவும் இருக்கும் நம் ஆசாரியர் வசிட்டர் சொல்லிய நிருவாண பதத்தை, ஆசை அற்ற உன் போன்றோர் எளிதில் அடைந்தனர். அங்ஙனம் இருக்க நீ ஏன் வருந்துகிறாய்? துன்பம் தரும் ஆபத்துகள் எல்லாம், தற்போதுள்ள வலிய மயக்கம் நீங்கினால் உன் பக்கம் அணுகா" என்று மன்னன் கூறினான்.

## விசுவாமித்திரர் வினாதல்

*அரசர்க்கு அரசன் ஆகிய தசரதன் சொன்ன பின்பு வசிட்டர், "வெல்லற்கு அரிய, கடும் முயற்சிக்கு உரிய, விடயங்கள் (புலன்கள்) என்ற பகைவரை எளிதில் வென்ற அதிசூரனே, கலங்கும் பேதைமை உடையவர்க்கு உரியதாயிருக்கிற அறியாமை நிறைந்த மோக (மயக்க)க் கடலில் வீழாதே" என்றார்.*

*நன்மை பொருந்திய விசுவாமித்திரர் அப்பொழுது சொல்வார் :*

*'நல்ல வீட்டை அதன் அடியில் உள்ள எலிகள் அறுத்து அழிக்கும் அழிவைப் போல நீ மோகத்தினால் துன்புறும் காரணம் யாது? சொல்வாயாகில் அது நீங்கப் பெற்று நீ விரும்பியிருப்பது எதுவோ அதனை அடைவாய். திரும்பி வராமல் மனத்துயர் விடைபெற்றுக் கொள்ளும். விளம்பு".*

## இராமன் விடை கூறத் தொடங்குதல்

*முகிலின் ஓசை கேட்டு வெம்மை தீர்ந்து வாட்டம் நீங்கப் பெற்ற மயில் போல இடர் நீங்கி மகிழ்ந்து இராமன், "அறியாமை உடைய என்னை, அருள் மூர்த்தியாக மேலான தவம் உடைய முனிவராகிய நீங்கள் சொல்லச் சொல்லுவதால் சொல்லுகின்றேன், கேட்டருள்வீராக. மேலோர் சொல்லை மறுக்கக் கூடியவர் யார்?" என்று இனிமையாகப் புகன்று சொல்லத் தொடங்கினான்.*

*"தந்தையாகிய தசரதரது மனையிற் பிறந்து வளர்ந்து பல கலை பயின்று நல்ல ஆசாரப்படி ஒழுகி உயர்நல் நதிகளில் ஆடி, கடல் சூழ் புவியினில் சுற்றி வருதலும் செய்தேன். அதன் முடிவாக இந் நெடிய உலகியல் மயக்கில் விருப்புகள் நீங்கின. இவ் வுலகில் இன்பம் இல்லை; அழிவது பிறப்பதற்கே; பிறப்பது மறுபடி அழிவதற்கே.*

*உலகில் உள்ள எப்பொருளும் தீமை பயப்பதாகவும் இடர் சேர்வதற்கு இடமாகவும் ஒன்றற்கு ஒன்று தொடர்பு இல்லாததாகவும் ஆனால் தாவுகின்ற மனக் கற்பனை (சங்கற்பம், எண்ணம்) காரணமாகத் தொடர்பு உடையதாகவும், இரும்புக் கம்பிபோல் வலியதாகவும்*

*பெருஞ்செல்வப் பயன் உடையதாகவும் இருக்கின்றன. ஆகவே பொருள் நுகர்ச்சியாலும் இராச்சியத்தாலும் என்ன பயன்? நாம் யார்? வாய்ந்திருப்பதாகிய உடம்பு எப்படி?... என்று ஆராய்ந்தால் ஆன்மாவுக்கு அயலான எல்லாமும் உண்மை அல்லாதவை என்று காண்கிறோம்.*

*எல்லாம் பொய்யாக உள்ள இவற்றில் எதை யார் பெற்றார்கள் என்று ஆராய்கையில், வழிப் பயணிகள் கானல் நீரை அது நீர் அன்று என்று அதை விரும்பாமை போலப் பொருள்கள் மேல் விருப்பம் இல்லாது ஒழிந்தது.*

*வெல்ல முடியாத இந்த விடயங்கள் (புலப் பொருள்கள்) உண்டாக்கும் துன்பத்தை விட்டு விலகும் வழியை நான் தேடி முயல்கையில், முதிர்ந்த மரமானது தன்னுள் உண்டான நெருப்பினால் வேவது போல வேகின்றேன். தாங்க முடியாத இந்த என் மயக்கம் (மோகம்) ஆனது கழுத்தில் அடைத்துக் கொண்டிருக்கும் கல் போன்று இருக்கிறது.*

*உறவினர் பழிப்பர் என்பதால் இந்த என் துயரை வாய்விட்டுச் சொல்லி அழுது அரற்றவில்லை.*

*(உலகியல் துன்பம் என்று உரைத்து அதனை நீக்கும் பொருட்டு அதன் குற்றங்கள் பதினொரு விதமாகக் காணுதல் இனி மேலே சொல்லப் படுகின்றன. செல்வம், வாணாள், அகந்தை, மனம், ஆசை, உடம்பு, பாலப்பருவம், இளமை, காமம், முதுமை, காலம் ஆகியன அவை.)*

## செல்வம்

*பெரிய ஆபத்துகள் உள்ள நிலையில் குழந்தைகள் முதலியவர்களோடு இருக்கும் குடும்பமானது ஒருவனுக்குச் சுகம் ஆகாதது போல் மனிதரின் மூளையில் எண்ணங்களைச் சுழல விடுகின்ற செல்வமானது சுகம் தருவதில்லை. தனது மேலாதிக்கத்தை ஒப்புக்கொள்ளும் ஒருவன் நல்லவனோ கெட்டவனோ அவன் எப்படிப் பட்டவனாக இருந்தாலும் அவனை அரசன் தன்னோடு சேர்த்துக் கொள்வது போலச் செல்வமானது தன்னைத் தஞ்சம் புகுந்தவன் நல்லவனோ கெட்டவனோ அவனை அடைகிறது. அது (செல்வம்) உதவிகரமாக இருப்பினும் ஆன்மிக அறிவு உள்ளவர்களை நிந்திக்க ஏதுவாக இருப்பதால் அது சிறப்புடையது அன்று.*

(செல்வத்தால்) செய்யும் செயல், வேற்றுமைகளால் மிகுந்ததாகவும், விருப்பு வெறுப்பு என்னும் விடத்தினால் அறிஞர் உரைகளின் இனிய அமைதியிலிருந்து எழும் மகிழ்ச்சியைக் கசப்பானதாகவும் மிகுக்கும் செல்வம் என்ற பனியால் உருகாத மனமும் செல்வம் என்ற சுழற் காற்றால் சுழலாத மனமும் இருக்கிறதா?

எல்லாரும், அவர்கள் தத்தம் உறவினர்க்கு நல்லவரோ இல்லையோ அறிவுடையவரோ எளியவரோ போருக்கம் உள்ளவரோ யாவராயினும் பணத்துக்குப் பலியாகிப் புழுதியினால் மூடப்பட்ட மாணிக்கம் போல் ஆகின்றனர்.

குற்றம் இல்லாத செல்வர்களும் சொல் தவறாத வீரர்களும், தங்கள் குடிமக்கள் பால் சமன் பார்வை உடைய அரசர்களும் ஆக இருப்பவர்கள் மிகவும் அரியர். மனத்தை ஈர்ப்பதாகவும் நிலையிலாது இருப்பதாகவும் உள்ள செல்வம், கிணற்றில் வளர்ந்து அங்குப் பாம்பினால் சூழப் பெற்றிருப்பதாகிய கொடியில் உள்ள அரும்பைப் போல் பயனற்றதாக உள்ளது.

## வாணாள் (ஆயுள்)

இனி, தலைகீழாக இருக்கும் இலையின் நுனியில் தொங்கிய மழைத்துளி போல் இருக்கின்ற உயிரானது. காலமல்லாத காலத்தில் உன்மத்தனைப் போல (பைத்தியக்காரர் போல) உடம்பினின்றும் ஓடி விடும்.

வளர்கின்ற ஐம்புலம் என்ற பாம்பு தீண்ட, மனம் தளர்ந்து, மெய்யுணர்வு அடையாதவர்கள் ஆயுளைக் குறைத்துக் கொள்கிறார்கள். அளவுக்கு உட்பட்ட என் உடலை மெய் என்று அழுந்தி, மயக்கம் ஆகிய மேகத்தில் தோன்றும் மின்னல் போன்ற இதில் நான் மகிழ்ச்சி பெறவில்லை. நிரந்தரமான ஆகாயத்தைப் பிளக்கவும் அலைந்து திரியும் காற்றைப் பிடிக்கவும் தோன்றித் தோன்றி மறையும் அலைகளைக் கோக்கவும் செய்து விடலாம். ஆனால் நிலை என்று பேண ஒண்ணாத இவ் வாழ்வின் மேல் கொண்ட விருப்பினைத் தடுத்தல் எளிது அன்று.

இவ் வாழ்வு இலையுதிர்கால மேகத்தைப் போலவும் எண்ணெய் இல்லாத விளக்கைப் போலவும் கடலின்

அலையைப் போலவும் நிலையற்றுக் கெடுவதாகவும் இருக்கிறது. உண்மையானது போல் தோன்றினும் சிறிதும் இளைப்பாறாத சிந்தையாயும் எல்லையற்ற அறியாமையில் ஆழ்ந்ததாயும் மானுட வாழ்வின் உண்மை இலக்கு இழந்ததாயும் உள்ளது. அதன் பயன்களை ஆராயும் போது உயிரைப் பிரிக்கின்ற இப்பியின் கருப்பம் போலத் துன்பம் உண்டாக்குவதாகக் காணப்படுகிறது.

துன்பங்களினின்று விடுபட்டு இன்பம் நிரம்பும் ஆன்மிக மெய்யறிவு அடைதற்காக இடையறா ஆன்மிக விசாரணை (ஆய்வு) செய்வோர் வாணாள் புனித வாணாள் ஆகும். அற்பமானவற்றில் காலத்தை வறிதே கழிப்போர் வாழ்வு மரங்கள் விலங்குகள் பறவைகள் வாழ்வு போல்வதாகும். மீண்டும் பிறவாது தம்மை விடுவித்துக் கொண்டோர் வாழ்க்கை உண்மையானது, புனிதமானது, மற்றையர் வாழ்க்கை கிழக் கழுதைகளின் வாழ்க்கை போல்வதாகும்.

பகுத்துணர்வு இல்லாதவர்க்குப் படிப்பு ஒரு சுமை. மெய்யறிவு இல்லாதவர்க்கு உடம்பு ஒரு சுமை. மன அமைதி இல்லாதவர்க்கு அவரவர் மனமே சுமை. காமம் முதலிய கறை உடையோர்க்கு ஆன்ம ஞானம் ஒரு சுமை. ஆன்மிக இன்பம்- தன்னை அறிவதால் எய்தும் இன்பம் - இல்லாதவர்க்கு அழகிய உடம்பு ஆயுள் மனம் புத்தி அகங்காரம் தொழில்கள் ஆகிய யாவும் சுமை தூக்குவோரின் தாங்க முடியாத திரண்ட சுமை போன்றவை ஆகும்.

தீய நட்பை விட்டுவிடும் அறிஞரின் தன்மையைப் போல இளமையானது சில நாள் உடம்பிற் பழகி நீங்கிவிடும். இன்பமும் நிலைமையும் நிலை பெறாமல் மரணத்தில் முடிவடையும் வாணாள் போல இன்னாதது - துன்பம் தருவது - வேறு ஒன்றும் இல்லை.

## அகங்காரம்

மயக்கத்தால் தோன்றி என்னிடம் எப்போதும் நிறைந்திருக்கும் நான் என்கிற துன்பமான பொய்யான அருமையான எதிரிக்கு அஞ்சுகிறேன். ஆணவத்தாலே மனத் துயர்களும் ஆபத்துகளும் பெருகிக் கொண்டே வரும் செயல்கள் உண்டாகின்றன. இதை விடக் கடினமான பகை

வேறு கிடையாது. இந்தப் பகைவனின் நெடிய கூட்டுறவால் நான் மனக் கொந்தளிப்பில் வதிகிறேன். உண்டியும் நீரும் புசியேன். ஏனை நுகர்ச்சிகளைப் பற்றி என்ன சொல்லுமாறு உளது? ஆணவம் சார்ந்த நித்திய கன்மங்களும் (செயல்களும்) வேள்விகளும் நுகர்ச்சிகளும் ஆகிய எல்லாம் பொய்யேயாம். அகங்காரத்தை விடுதலிலே உண்மையின் இரகசியம் அடங்கியிருக்கிறது.

அகங்காரம் ஆகிய மேகம் நம் மேல் கவிந்து சூழுங்காறும் ஆசை என்ற மல்லிகை மலர்ந்து நம்முள் பெருகி வரும். ஆகவே அகந்தையினின்றும் என்னை விடுவித்துக் கொள்ளுதற்காக நான் எல்லாச் செய்கைகளையும் நிறுத்திக் கொண்டேன். இருப்பினும் நான் என்னை (என் சுயத்தை) அறிந்து கொள்ளாமையால் ஆசைக்கு வித்து ஆகவும், ஆபத்துக்கு இடம் ஆகவும், உறுதியற்றதாகவும், மனத்தினைக் குடியிருப்பாகக் கொண்டதும் உரிய பகுத்துணர்வோ ஆய்வறிவோ இல்லாத 'மூட சிரேஷ்டம்,' ஆக இருப்பதும் ஆன அகந்தை என்னை விட்டுப் போகும் வழியை அறிவுறுத்துவீராக.

### மனம்

புயற் காற்றில் மயிற்பீலி ஒன்று அங்கும் இங்கும் எறிபடுவது போல என் மனம் விருப்பு வெறுப்புப் பொருள்களிடம் அலைபடுகின்றது. சான்றோர் உறவை விடுத்து, திரிகின்ற ஊர் நாய் போல அது புலனுகர்ச்சிப் பொருள்களின் பொருட்டு நெடுகவும் அகலவும் பறந்து ஓடுகிறது. ஆனால் எப் பயனும் அதனால் விளைந்திடாது. பூக் குடலையில் தண்ணீரை வைத்துக் கொள்ள முடியாதது போல அரிய திரவியம் கிடைத்தாலும் மகிழ்ந்து அமைந்து உட்கொள்ளாமல் தீய மனமானது சுழலும்.

மனம் என்னும் கோரமான நாய் பிணத்தைப் பிடுங்கித் தின்பது போலப் பேதைமை மேவிய என்னைப் பிடுங்கிப் புசிக்கும். 'மோது பெருங் காற்றினால் முறிந்து எழுந்த துரும்பு போல' மயக்கமும் துன்பமும் எய்த, மனமானது பெரிய பாழில் (சூனியத்தில்) வீழும்படி என்னைத் தள்ளிவிடும்.

வேர் (காரணம்) இல்லாத பொய்யாகச் செறிந்த வடிவாகி, ஆராய்ந்தால் வேறுபடுகின்ற கொடிய மனமானது பேய் பிடித்த பாலரைப் போல என்னைப் பலவித உலகியற் செய்கைகளில் கூட்டி விடுகிறது. அது பூமியினின்று நீங்கிப் பாதாளத்திற்குச் செல்லும். பாதாளத்திலிருந்து நீங்கிப் பூமிக்கு வரும். ஏமாற்றும் இந்த மனம் கிணற்றினுள்ளே கிடக்கும் மரத்தை நைந்த கயிற்றினால் கட்டி எடுப்பது போல் என்னை மேல்நிலைக்குத் தூக்கி விடுவது போல் மேலும் கீழான நிலைக்குத் தள்ளிவிடும்.

நஞ்சு போன்ற மனம் என்னும் வலிய பேயானது நெருப்பை விடக் கொடுமையானது. மலைகளை விடக் கடத்தற்கு அரியது. நெடு வயிரத்தை விட வலியது. கடலைக் குடித்தாலும் குடிக்கலாம். மேரு மலையை அடியோடு பேர்த்தாலும் பேர்க்கலாம். சுடுகின்ற கனலை விழுங்கினாலும் விழுங்கலாம். இம் மனத்தை நிறுத்தல் முடியாது. எல்லாப் பொருளும் (விடயங்களும்) உண்டாதற்கு இது காரணமாக உள்ளது. அழியும் இவ் உலகு, மனம் இருப்பதால் இருக்கிறது; மனம் இல்லை என்றால் அதுவும் இல்லையாகிறது. ஆகவே இம் மனத்தை அழித்து அகற்ற வேண்டும்.

மலையில் உண்டாகும் காடு போல மகிழ்ச்சி, இடர் என்ற இவை யாவும் மனத்தில் உண்டாவனவாம். பகுத்துணர்வால் மனம் நசிக்குமானால் அந்த மகிழ்ச்சிகள், இடர்கள் (சுக துக்கங்கள்) கெடும் என்று அறிந்தேன்.

## ஆசை

கடினமான மயக்கம் (மோகம்) என்கிற கார் இருள் படர்ந்த, செயலில் அமைதி இல்லாத ஆசை என்னும் இரவில் உணர்வு என்னும் விண்ணில் (ஆன்ம ஆகாயத்தில்) காமம் சினம் முதலிய கோட்டான் கூட்டமானது விளையாடும்.

யான் விரும்பி வந்த நற்பண்புகள், எலியினால் யாழ் நரம்பு கெடுவது போல ஆசையினால் சேதம் உறுகின்றன. ஆன்ம ஞானத்தை அடைய வல்லமை இல்லாத சித்தம் உடைய நாங்கள் வலையில் அகப்பட்ட பறவை போல மெலிய நேர்கின்றது. ஆசைத் தீ வெதுப்புதலால் நொந்தேன்.

தற்போது உள்ள நிலையில் குற்றமற்ற குளிர் அமுதத்தில் முழுகினாலும் என் அறிவு குளிர்ச்சியுறாது என்றே எண்ணுகிறேன். அமாவாசை இருளைப் போலப் பேராண்மையுள்ள தீரர்களையும் ஆசை அஞ்சுவிக்கும், நல்லறிவாகிய கண்களைக் கெடுக்கும். இன் அமைதி உடைய நல்லறிவாளரையும் நடுங்க வைக்கும். ஆந்தையின் இயல்புடைய ஆசை என்னும் கிழக் கணிகை தனக்கு ஒன்றும் கிட்டாதாயினும் இனிய திரவியத்தை விரும்பி யாவர்க்கும் பின் செல்லும். தனது மனோ ரதமும் எய்தப் பெறாது.

முதுமைத் தளர்ச்சியால் நடனம் ஆட முயல்பவளாக, மனக் களிப்பு இல்லாமல் நடனம் செய்யும் நாட்டியக் காரியைப் போல் என்னை ஆசை வருத்துகிறது. எதிர் கிடைத்தற்கு முடியாத பொருள்களை அடைய ஆசை நாடுகிறது. கிடைத்தாலும் அவற்றை ஒதுக்கி விட்டுப் பின்னும் வேறு பொருள்களில் இன்பம் தேடுகிறது. குரங்கைப் போலவே ஓர் இடத்தும் உறையாமல் அலைந்த வண்ணம் இருக்கிறது.

பூங்காவில் மது உண்டு களித்த வண்டு போலப் பாதாளமும் ஆகாயமும் எட்டுத் திக்கும் ஆகிய இவை அனைத்திலும் கணப்பொழுதினுள் சுற்றிக் கொண்டு வரும். தாவி வருத்தங்கள் யாவினும் பெரியதான பிறவித் துன்பத்தை நல்கும்; கோட்டைக்குள் காவலுடன் வசிப்பவர்களுக்கும் துயரத்தைக் கொடுக்கும். அவா என்கிற நோய்க்குச் சிந்தை அறல் என்ற மருந்தே அமரர் பாராட்டும் அவுடதம் ஆகும். இந்த 'சிந்தைத் தியாகம்' வந்து விட்டால் உலகில் இடர் போய் ஒழியும்.

இச்சையானது, பசிய பொன் வளையல்களை அணிந்த மாதர் போலும், வியாதி போலும், தாமரை அரும்பை மலர்த்தும் கதிரவனின் கதிர்கள் போலும், உட்கருத்துள்ள மனிதர்களையும் (அந்தர்முகியையும்) புறத்தே வெளிப் படுத்துநர் (பகிர்முகி) ஆக்கும்.

வயிரத்தின் முனையையும் கூரிய வாளையும் நெருப்பிற் பட்ட இரும்பின் பொறியையும் போல ஆசையானது மாமேருவுக்கு ஒப்பான உயர்ந்தோரையும் அழகான அறிஞர்களையும் தீரர்களையும் சூரர்களையும் மற்றுள யாவரையும் நொடிப் பொழுதில் தூளாக்கி விடும்.

## உடம்பு

குடல் நரம்பு முதலியவற்றால் செறிந்து பல வேறுபாடும் உடையதாக இரங்கும்படி ஒரு சமயம் மெலிந்தும் ஒரு சமயம் பருத்தும் இருக்கும் உடம்பானது பிறப்பில் பொலிந்தாலும் அதன் உலகியல் இருப்பு துன்பத்தின் பொருட்டே யாகும். பொருள் நுகர்ச்சியின் கூடுதல் குறைவுகளால் இன்பத்துக்கும் துன்பத்துக்கும் இடையே ஊசலாடும் இந்த உடம்பு பேர்ல் பயனற்றது. துயரமானது, தாழ்ந்தது என்பதான நிலையில் வேறு ஒன்று உளதா?

பொறிகள் - இந்திரியங்கள் - ஆகிய பத்துப் பொல்லாப் பசுக்களும் கற்பனை செய்யும் மனம் ஆகிய வேலையாளும், ஆசை ஆகிய மனைவியும், வாய் ஆகிய வாயிலும் அதிற் பற்பல பற்களாகிய தோரணமும் நாவாகிய குரங்கும் உடைய அகந்தை என்ற குடும்பத்தவனுக்கு வீடாகப் பொருந்தித் தோன்றுவதும் அற்ப இன்ப துன்பங்களில் அழுந்துவதும் ஆகிய உடல், நிலையாகி இருந்தாலும் இல்லை என்றாலும் அதனால் என்ன பயன்?

நிதியும் அரசும் தொழிலும் ஆகிய இவற்றைத் துய்ப்பதற்கு உரியது இவ் உடம்பு. அப்படி இருக்குமாயின் அது விரும்பத் தக்கது தான். ஆனால் இவை எல்லாம் விதிப்படி வருகின்ற கூற்றுவன் முன் மறைந்து விடுகின்றன. இந்த உடம்பு, குருதியும் தசையும் கூடியதாக ஆழ்ந்து போகும் தன்மையதாக வறியவனுக்கும், செல்வனுக்கும் ஒரே வகைத்தாக, பகுத்தறியாமல் மூப்பும் மரணமும் பொருந்தக் கூடியது. ஆகவே இதில் அழகு என்ன அனுபவிக்க உள்ளது?

மின்னலிடத்தும் இலையுதிர் காலத்து மேகத்திடத்தும் வியன் கந்தர்வ நகரத்தும் நம்பிக்கை வைப்போன் இந்த உடம்பையும் மெய் என்று நம்பி உறுதி கொண்டிருப்பான்.

## பாலப் பருவம்

நிலையில்லாது சலனமும் பலவகைச் செய்கைகள் ஆகிய அலைகளும் நிறைந்த இவ் உலகியல் இருப்பினில் எந்த ஆளாகப் பிறந்தாலும் பாலப் பருவமானது மிகு துயருக்கு ஏதுவாகும். நீக்க முடியாத ஆபத்துகள், தளர்ச்சி,

நினைத்ததைச் சொல்ல முடியாமை, அறியாமை, ஆசை, சிந்தை துவளுதல் ஆகியன சூழ்ந்தது பாலப் பருவம். இந்த உடம்பில் மனம் மட்டும் வேலை செய்கிறது. கடல் அலை, மகளிர் விழி, நெருப்புச் சுவாலை, மின்னல் ஆகியன போல அது அலைவுறுகின்றது.

பச்சைக் குழந்தை, நாய் போலப் புழுதியில் திரிகிறது. அது சிறு சிறு விடயங்களால் மகிழும்; வருந்தும். சில போது மண்ணைத் தின்னும். விண்ணில் உள்ள மதியைத் தன்னிடத்தே வா என்று அழைக்கும். இவ் அறியாமை மகிழ்ச்சியின்பாற் படுமா? ஆசிரியர் பெற்றோர் உற்றார் மற்று எவர்க்கும் நடுக்க மிகும் நோதல் உள்ள பருவம் பாலப் பருவம் அச்சத்தின் இருப்பிடம் ஆகும்; பகுத்தறிவின்மை என்ற கீழோன் வாழும் வீடு ஆகும். எவர்க்கும் இப் பருவத்தில் சுகம் உண்டாகாது.

## இளமை

ஆபத்துகள் மிகுந்த வாலப் பருவத்தைக் கடந்து இளமைப் பருவத்தை அடைபவன் வேறு ஒரு வேதனைக்கு உள்ளாகிறான். தன் மனம் என்னும் பொந்தில் உறைகின்ற மன்மதன் என்ற பேய் அடிக்க, உள்ளம் வாடும். மனம் மெலியும். மதியானது பல வகை விரிவான கல்வியால் உளம் விரிந்து தெளிந்து குருவுக்குச் செய்யும் தொண்டினால் நற் கருமங்கள் செய்து தூயதாகிச் சிறப்புப் பெற்றிருப்பினும் மழைக் காலத்து ஆற்று நீர் போல இளமையால் கலங்கிப் போகும்.

(தெளிந்த அறிவையும் கலக்கும் காமம் உடைய இளமையால் என்ன சுகம் என்பதாம்)

மனம் என்னும் மான் ஆனது மயங்கிப் போய் விடயங்கள் (நுகர் பொருள்கள்) என்ற குழியில் விழுமாறு உடம்பு என்னும் பாலை நிலத்தில் இளமை என்னும் சுடும் கானல் நீரானது மிகவும் பெருகும். இளமை நலம் எம் மட்டு இருக்கிறதோ அம் மட்டும் ஆசைகளும் வேகமுற்று எழுந்து பலவாய குறும்புகளைச் செய்யும்.

இளமை என்கிற இடையூறு கடந்து எளிதாக முத்தியில் சேர (விடுதலை பெற) வல்லவர்களே மனிதர்கள். அவர்களே

யாவராலும் வணங்கற்கு உரியவர்கள். அவர்களே சான்றோர்கள். மெய்த் திறத்தோர் சேரும் இடமாகவும் பணிவு என்கிற நிதியைப் பெற்று அருளால் சுடர்கிற, தூய குணத்தை உடைய இளமையானது, உலகினில் உள்ளதா? ஆகாயத்தில் விசாலமான காடு உள்ளதா?

## காமம்

நாணால் இயக்கப்படும் பதுமை போன்று, நரம்பு எலும்பு முதலியன செறிந்த பதுமையை ஒத்த மகளிர் உடம்பாகிய கூட்டில் என்ன சுகம்? மணம் பொருந்து கூந்தலுள்ள மாதரின் கண்களில் தோலை மாமிசத்தை கண்ணீரை இரத்தத்தைச் சிந்தையில் பகுத்தாராய்ந்து பார்க்குங்கால் சிறப்புடையது என்று அது தோன்றுமாகில் விரும்பலாம்.

மேருவின் உச்சியினின்றும் வீழும் விரிந்த அலைகளை உடைய கங்கை நீர் போல் முத்துமாலை பொருந்தி விளங்கும் அணி இழை மகளிருடைய கொங்கைகளானவை, அனுபவிக்கப் படுபவை, ஊர்ப்புறத்து ஈமக்காடு அடைந்த போது நேராகக் கிடைத்த சோற்று உருண்டைக் கவளத்தைப் போல வரிசை வரிசையாக நாய்களால் புசிக்கப் படும்.

பாவம் என்னும் அக்கினியின், அடைதற்கு அரிய வெம்மையும் கூந்தல் என்னும் புகையும், கண் என்னும் சுட்டெரிக்கும் செயலுடைய மகளிர் என்ற சுவாலையானது எவரைத் தான் துரும்பு போல் எரிக்காது?

சேய்மையில் எரிகின்ற நரகத் தீக்குப் பாவையருடைய குளிர்ந்த மேனி, உயர்ந்த விறகு ஆகும். (இம்மையில் காம நெருப்பால் எரிப்பதும் மறுமையில் நரக நெருப்பை உண்டாக்குவதும் ஆன மின்னனார் (மாதர்) இடத்தில் என்ன சுகம் என்பதாம்)

கருவிழி மகளிர், அறியாமை நிறைந்த மனத்தை உடைய மானிடர் ஆகிய பறவையைப் பிடிக்கும் பொருட்டு மன்மதன் என்கிற வேடன் எறியும் வலைக்குச் சமானமாக உள்ளனர். கொடிய மனம் என்கிற சேறு நிறைந்த பிறவி என்னும் சிறு குளத்தில் மனிதர் ஆகிய மீனைக் கவர்வதற்கு எம வாதனை

என்னும் பாசத்தில் பூட்டிய தூண்டில் முள்ளினில் உள்ள இரையாகிய மாமிசத்துக்கு ஒப்பாவார்கள்.

மிகுந்த துக்கத்தைப் பூட்டியிருக்கின்ற பூட்டு ஆகவும் முடிவில்லாத வெறுப்பு விருப்பு என்னும் மிகுந்த மணிகள் வைத்திருக்கும் செப்பு ஆகவும் இருக்கும் மாதர்களது சுகத்தை விரும்பேன். இது தசை, இது குருதி, இது நரம்பு இது எலும்பு என்று எண்ணினால் மதிமுக மகளிர் மேல் ஆசை சில நாளில் போய்விடும்.

மனைவியை உடையவன் சிற்றின்ப நுகர்ச்சியன். அவனுக்கே போகத்தில் பற்று உண்டாகும். மனைவி யில்லாதவனுக்குப் போக இன்பம் எப்படி உண்டாகும்? போகத்துக்கு சாதனம் ஆன காரிகையை நீங்கினால் மனத்துக்கண் உள்ள உலகப் பற்று நீங்கும். பெயர் அளவில் மட்டும் இருப்பதான உலகம் என்ற நினைப்பு நீங்கினால் பேரின்பம் உண்டாகும்.

ஆராய்ச்சி இல்லையேல் காமம் தான் வரும் போது இன்பமாக உள்ளது; வந்த பின் இசை பாடும் வண்டின் சிறகு போல எப்போதும் அசைவதாகவும் நீக்குவதற்கு அரியதாகவும் இருக்கிறது. அது கொண்டு வரக் கூடிய கோர விளைவுகளாக நோய்கள் சாவு, தள்ளாமை, மன வேதனை மற்றும் உள துயர்களுக்கு அஞ்சி நான் அதை விரும்பேன். அடைதற்கு அரிய பிரம்மப் பெரு நிலையை அடைவேன்.

## முதுமை

பாலப் பருவத்தை இளமைப் பருவம் விழுங்கிவிடும். இளமையைப் பலவாக வேறுபடுத்தும் மூப்பு விழுங்கிவிடும். நோயும் துன்பமும் ஆகி முதுமை வந்தால், இரண்டாம் மனைவி கட்டியவன் மனத்தினின்று முதல் மனைவி நீங்குவது போலப் பேரறிவு பிரிந்து விடும்.

முதுமை வரும் காலத்தில் ஒன்பது வாயில்கள் உள்ள உடம்பில் நெகிழ்வும் மறதியும், பொருந்தியுள்ள ஆசையும், துன்பமும் அளவான காரியங்களைச் செய்தற்குச் சக்தி இல்லாமையும் கடு நோய்கள் உண்டாதலும் தேவையான பொருளை அடையத் தடுமாற்றமும் மைந்தர் முதலி

யவர்களால் பழிக்கப்படுதலும் ஆகியவை தரும் துக்கமானது பல வகை ஆகும்.

முதுமை வரப் பெற்று நடுங்குவோரை நண்பரும், மைந்தரும், விரும்பப்பட்ட மகளிரும் பணியாளரும் நகைப்பார்கள். பார்க்கச் சகிக்கப் படாத வடிவுடன், துன்பமும் நரையும் பொருந்தி, வலிமையும் குணங்களும் இழந்த மூப்பினை, கட்டை மரத்தில் கழுகு வந்து அடைவது போல ஆசை வந்து அடையும்.

பிழையும் மெலிவும் பொருந்தி நெடியதாக மனத்தை எரித்து, நிறைந்த ஆபத்துகள் யாவற்றுக்கும் தோழியாய் உள்ள ஆசையைப் பொருந்தும் வயோதிகத்தால் பரலோகத்தில் உற்ற உறுதி என்ன என்று, ஆசைகளால் உண்டான காரியங்களை நீக்கக் கூடாத, அச்சம் மிகவும் அதிகரிக்கும்.

முதுமையில் விடய விருப்பில் களிப்பு மிகும். அதை அனுபவித்தற்குச் சக்தி இராது. விரும்பியவரை அனுபவிப்பதற்கு வல்லமை இல்லாததால் நினைப்புகள் அனைத்தும் எரிந்து வாடும். பருவ காலத்தில் நீறு பூத்த பூசினை (பூசணி)யின் பெரிய பழம் போல, காலன் மனிதர்களின் வெண்ணிறத் தலையைப் புசிப்பான்.

இறப்பு ஆகிய மன்னனுக்கு முன்னே வருகின்ற நரை என்னும் வெண் கவரியை வீசிக் கொண்டு கூட்டமான உடல்நோய்களும் அந்தக் கரண நோய்களும் படையாக நடை பயிலும். தகுதி இல்லாத நரை என்றும் வெண் சுண்ணம் தீற்றிய உடம்பாகிய வீட்டுக்குள் ஆபத்து மனவலி யின்மை சோர்வு ஆகிய ஒண்டொடி மாதர்கள் வாழ்வார்கள்.

நரை பொருந்திய கொடிய முதிர்வாகிய பேயுடன் நண்ணி வாழ்வதால் என்ன சுகம் உண்டு? ஈடணை மூன்றையும் (விட்டு விட முடியாத மகன் மனைவி செல்வம் என்ற மூன்றையும்:) வேண்டாம் என்று நீக்கும் மூப்பை வெல்லுதல் யார்க்கும் அரிதாகும்.

## காலம்

தொடர்ந்து வரும் பிறவிகளில், அறியாமையினால் நிகழும்

இன்பப் பொருள்கள் எல்லாம் காலம் வரும்பொழுது எலியால் கடிபட்ட நூல் போல் ஆகிவிடும்.

மகர மீன்கள் உறையும் கடலின் நீரைக் குடிக்கும் வடவைக் கனலைப் (குதிரை முக நெருப்புப்) போல எல்லாவற்றையும் புசிக்கின்ற காலனால் உலகில் புசிக்கப் படாதது இல்லை. சொல்லுதற்கு அரிய பெரியோர் ஆயினும் உரிய நேரத்துக்குப் பின் ஒரு நொடிப் பொழுதும் அவன் பொறுத்து இரான். யாவற்றையும் விழுங்கி அவனே எல்லாமாகி நிற்பான்.

காலனிடம், சிறப்பான அரசர்களும் நன்மை உடைய பிரமன் முதலியவர்களும் மேருவுக்கு ஒப்பான விருத்திராசுரன் (இந்திரனுக்குப் பகைவன்) முதலிய யாவரும் கருடனின் பிடியில் அகப்பட்ட பாம்பு போல் ஆவர். புழுதியுடன் இலை துரும்பு பொன்மலை கடல் வெள்ளம் வளமான மகேந்திர மலை என்ற இவற்றைக் காலன் சிதைத்துத் தன்வசம் ஆக்குவான்.

உலகம் என்ற பழைய காட்டில் எண்ணற்ற சீவர்கள் ஆகிய கொசுக்கள் மொய்த்து ஒலிக்கின்ற அண்டங்கள் என்ற கனிகளை உடைய அத்தி மரத்தைக் காலன் காலையில் படைக்கிறான். காய்கள் முற்றுவதைச் சூரியன் என்ற கண்ணால் நண்பகலில் பார்த்து வருகிறான். அவை உலக பாலர் என்ற கனிகளாக முதிர்வதைக் கொய்து தானே இரவில் புசிக்கிறான். விளங்கும் உயர்ந்தோர் என்ற இரத்தினங்களை முக்குணம் (தாமசம், இராசசம், சாத்துவிகம்) என்ற கயிற்றில் வரிசையாகக் கோத்துச் சிதைத்து எறிவான் அவன்.

சிதைவு பட்ட குடியிருப்பான இந்தச் சிறிய வையகத்தில் எங்கும் சிதறிக் கிடக்கிற உலக மக்கள் என்னும் மணிகளை மரணம் என்ற செப்பில் திரட்டிச் சேர்க்கிறான். பசையற்ற வையகம் என்ற பாலைவனத்தில் உணர்வற்ற பல சீவர்களாகிய விலங்குகளும் பறவைகளும் அளவின்றி எங்கெங்கும் ஓட, வேட்டையாடி முடிவாக நெடுமுது கற்பம் ஆகிய காலத்தில் எரியும் வடவை (குதிரைமுக) அக்கினி என்ற தாமரை உள்ள கடலில் விளையாட்டுப் புரிகிறான்.

சுவை (கசப்பு, புளிப்பு கார்ப்பு முதலியன) படைத்த மிகுந்த உயிர்களும் பால் தயிர் முதலாக உள்ள ஒப்பரிய

கடல்களும் பலப்பல வகையான படைப்புகள் உள்ள உலகங்களும் தன் உணவாக உடைய காலன் சுழன்று சுழன்று, நிலை பெற்ற அவ்வவற்றில் பெருங்கற்ப காலத்தில் எப்போதும் சுற்றிக் கொண்டு வருவான்.

## அழிக்கும் திறனி (சங்கார சக்தி)

பழைமையான இந்தப் பேருலகை அதில் உள்ள நிலைத் திணை இயங்கு திணைப் பொருள்களோடு தீர்த்துக் கட்டி, வெல்லுதற்கு அரிய சங்கார சக்தி யானவள் வெருட்சி உண்டாக, மிக்க வல்லமையான நடை உடையவளாய், துர்க்கை முதலிய சக்திகள் யாவும் தன்னுடன் வரப்பெற்று உலக மயக்கம் என்னும் வனத்தில் பெண்புலி போல வாழ்வாள்.

மிகுந்த சீவர்களைக் கொன்று, சாறு பொருந்திய பூமி என்னும் மதுக் கலசத்தைக் கையிற் கொண்டு, மூன்று உலகங்களையும் நீலோற்பலம் செங்கழுநீர் தாமரை என்ற முந்நிற மலர் மாலையாகச் சூடி, கோடை இடி போலச் சிரித்து நரசிங்கத்தை விளையாட்டுக் கிளிப் பிள்ளையாகத் தன் நெடு வன்புயம் ஆகிய கூட்டில் தாங்கியிருப்பாள் அவள்.

இலையுதிர் காலத்து வானம் போல மாசின்றி யிருக்கும் அவளது மேனியில் வீணையின் இசை போன்ற இனிய குரலை உடைய பழைய பெரிய காலனை விளையாட்டின் பொருட்டுக் குயில் குஞ்சாகக் கைக் கொண்டிருக்கிறாள். "முழுவதும் இல்லை" என்கிற வெற்றி வில்லைத் தரித்து, எழுகின்ற துயர் ஆகிய அம்புகளை ஏந்தி எவ்விடத்திலும் தன் இச்சைப்படி நடனம் செய்து மிகவும் மகிழ்ச்சியால் பிரகாசத்துடன் சுழன்று கொண்டிருக்கிறாள்.

அவளுக்குத் தலை அணி சுவர்க்கம்; பாதம் பாதாளம்; அதில் பல நரகங்கள் பாத அணி; திங்களும் பகலவனும் காதணிகள்; இமய மலைத் தொடர் அவளுக்கு எலும்புகள்; மாமேரு பொன் அணிகலன்; சக்கரவாளகிரி அவளுக்கு மேகலை.

சில சமயம் அவள் முன்னும் பின்னும் அசைந்தவாறு முருகனின் ஊர்தியான மயிலில் ஊர்வாள். அச்சம் தரும்

சந்திரனை அணிந்த சடையும் முக்கண்ணும் உடைய உருத்திரர்களின் தலைகளைச் சில சமயம் தரித்துக் கொள்வாள். கன்னியாகிய பரமேசுவரியின் கூந்தல் என்னும் சாமரையையும் மலை போன்ற பைரவர்களின் துள்ளுகின்ற கவந்தங்களை (முண்டங்களை)யும் சில சமயம் தரிப்பாள். கண்கள் என்ற குழி ஆயிரம் பொருந்திய தேவேந்திரனின் உடம்பென்னும் பிச்சைப் பாத்திரத்தை ஏந்துவாள்.

நரம்புகளால் கோக்கப்பட்ட தலை மாலைகளைக் கழுத்தில் அணிந்து கொண்டு உலகங்கள் யாவற்றையும், தனக்கும் அச்சம் உண்டாக அழித்துப், பிரகாசம் மிகுந்த விண்ணில் விளங்குவாள், பேருருவம் (விசுவரூபம்) கொண்ட திருமாலின் வட்ட முடிகள் (தலைகள்) என்னும் தாமரை மலர்களால் தொடுத்த மாலைகள் அணிந்து மகிழ்ச்சியுடன், அனைத்தும் அழிகிற - சர்வ சங்கார - காலத்தில் நடனம் செய்து கொண்டிருப்பவள் இவள் தான்.

(இதுகாறும் சொல்லப்பட்ட) பொருளெல்லாம் மெய்ப் பொருள் அல்ல. அகந்தையின் மூலமே மனம் உண்டாகிறது. காணப்படும் பொருள்கள் யாவும் எனக்கு இல்லாதனவாக உள்ளன. இப் பிறவிகளின் முடிவு - இலக்கு - எனக்குத் தெரியவில்லை. ஆகவே என் அறிவு மருளும்; கவலைகளால் மனம் வெதும்பும். ஆசை நோய் எல்லாரிடத்தும் மிகுகிறது. இருண்ட மயல் தீர்பவர் அரியர். உயர் ஆன்மிகப் பயன் அடைதற்கு உரிய என் இளமையானது வறிய முயற்சிகளில் தானே கழிகிறது.

## சான்றோர் இணக்கம் (சத் சங்கம்)

மகான்களிடத்துக் கொள்ள வேண்டிய அன்பு நெடுந் தூரத்ததாக இருக்கிறது. ஆகவே மோட்சப் பாதை தெரிவதில்லை. உண்மைப் பொருள் (ஆன்ம தத்துவம்) பெறுதற்கு அரிதாக உள்ளது. பிறர் சுகத்தைத் தன் சுகமாகக் கருதும் நற்பண்பு இல்லாததால் கரிய மனம் கலங்கும், பிறரது அறவினையில் உள் மகிழும் பெருங்குணம் இல்லாமையால் உள்ளமைதி, இல்லாது போகிறது. பிறர் துயரைத் தன் துயராகப் பார்க்கும் தயை இல்லாமையால் அருள் வாய்க்காது. பிறர் செய்யும் தீ வினையில் வெறுப்பு இல்லையேல் பரவுகின்ற மனத் தாழ்ச்சி எவ்வளவு தூரமாக

இருந்தாலும் வந்து சேரும். தைரியம் போய்க் கோழைத்தனம் வந்துவிடும். கெடும்படி நரகில் வீழ்வோர் திரும்பவும் சுவர்க்கம் ஏறுவர்.

மூடர்களின் இணக்கம் (சங்கம்) எளிதாகக் கிடைக்கும். தெளிந்த சாதுக்களின் சங்கம் கிடைப்பது அரிது.

## 'பாவனை பந்தமாம்'

தோன்றி அழிகின்ற பொருள்களில் பெற்ற பாவனையானது - எண்ணங்களானவை - பிறவியை உண்டாக்குகின்றன. மன ஒட்டுதல்களால் மீட்டும் மீட்டும் பிறக்கும்படியான எண்ணங்கள் (வாசனா சம்ஸ்காரம்) உள்ள சீவ பரம்பரைகள் கலைந்து சுவர்க்க நரகங்களில் சென்று புகும். திசைகள், அவற்றைப் பகுக்கும் சூரியன் இல்லாமையால் தோன்றா. கண்ட தேசங்கள் வேறு பெயர்கள் உள்ளனவாக மாறும். கனமான மலைகள் சிதறிப்போம். உண்டு (சத்) என்ற தன்மை மட்டும் இருக்க, மற்ற (வான) வெளி, மேல் உலகம், புவி என்பன மூன்றும் அழிந்து போகும். மண்டிய கடல் வற்றும். நட்சத்திரங்கள் சிதறும். அசுரர்களும் தேவர்களும் ஆகிய இருவருடைய கூட்டங்களும் அழிந்து போகும்.

## 'சீவ-ஈசுவர-சகங்கள் தத்துவத்தில் ஐக்கியம் ஆகும்'

சித்தர்களும் இல்லாது ஒழிவார்கள் துருவனும் (நட்சத்திரமும்) கெடும். சிவன் அயன் திருமார்பனும் ஆகிய மும்மூர்த்திகளும் பர தத்துவத்தில் (மேலாம் உண்மைப் பொருளில்) கலப்பார்கள். படைப்பு முதலியவற்றைச் சங்கற்பத்தால் உண்டாக்கும் ஈசுவர சக்தியான காலமும் நியாயமா விதிக்கிற தருமமும் (நியமன சக்தியும்) முடிவுக்கு வரும். நிறைந்த ஆகாயமும் அழிந்து போய்விடும். மாயை என்ற மயக்கத்தினின்று விடுபட்டவரும் சொல் மனங்கட்கு எட்டாத மெய்ப்பொருளாக இருப்பவரும், மாசற்ற அறிவடிவாக இருப்பவரும், ஒரே ஒன்று என்று உள்ளவரும் ஆகிய பரமேசுவரனில் - பரம்பொருளில் - (கண்ணால்) காணலாகும் இத் தொல் உலகு கலந்து போய் விடும்.

(தூய ஞானத்தில் மும்மூர்த்தி முதலிய வேற்றுமைகள் இல்லாதிருக்க நாம் எப்படி இருப்போம் என்பதாம்.)

## போகங்களை அற்புதம் என்று வீணாகக் கருதுவதற்கு வருந்துதல்

இந்த உலக மக்கள் "இந்த நேரம் மங்களமான நேரம். இது இளவேனிற் காலம், இது யாத்திரைக்கு ஏற்ற நல்ல தருணம், உறவினர்கள் கலந்து கொண்டு பெருமை செய்தார்கள். இச் சமயம் நான் அனுபவிக்கும் சுகம் அற்புதமானது. இது போனால் வராது..." என்று வீணான நினைப்புகளில் காலம் கழித்து மரணம் அடைகிறார்கள். சான்றோர்களின் வாழ்க்கை வழியில் சிந்தித்துப் பகலைப் பயன்படுத்திக் கொள்ளாது கழிப்பரேல் இரவில் அவர்களுக்குச் சரியான உறக்கம் வருமா?

(போகங்களை அதிசயம் என்று வறிதே கருதிப் பிரம்ம விசாரத்தை விரும்பாமல் இருப்பது விசனத்துக்கு உரியது என்பதாம்)

## சம்சார சுகமும் மயக்கமும்

மனைவி மக்கள் சொத்துக்களை மையமாக வைத்துத் தங்கள் விருப்புகளை நிறைவேற்றச் செல்வத்தை நிரம்பத் திரட்டியவாறு இருப்பார்கள். நீண்ட பூமியின் கண் உள்ள செல்வங்கள் அனைத்தையும் அந்த மனைவி புத்திரர்களுக்காகவே ஈட்டுவார்கள். ஆனால் அவ் விருப்பம் எல்லாம் நல்வினை முடிவுக்கு வந்து கேடு வருங்கால் நஞ்சை விட அதிகத் துக்கத்தைச் செய்யும்.

(தனது செல்வங்களைத் தான் விரும்பியிருந்த மனைவி மக்களுக்குக் கொடுக்கும் போதில் சுகமாயும் அவை நசிக்கும் போது துக்கமாயும் வருத்தும் என்பதாம்)

## எதிரற்ற செல்வமும் பறிபோகும்

பகைகளை எல்லாம் துரத்தி விட்டுப் பத்திரமாகச் சொத்து சுகம் நிறைய வர, அவற்றை எதிரின்றி அனுபவித்து வருகையில் எங்கோ மறைவிடத்தில் ஒளிந்திருந்த காலன் நாசம் செய்வான். இதுவரை நம்பியிருந்த - எதிர்பார்த்திருந்த

- எல்லாவற்றுக்கும் முற்றுப் புள்ளி வைத்து விடுகிறான் அவன். மனைவி புத்திரர் முதலான மாயைகள், பல வகை இடங்களிலிருந்து வழியின்கண் வந்து கூடுவோர் போல்வனவாம்.

## ஆயுளும் நிலையின்மை

*மிகப் பெருங்காலம் எனப்படும் கற்பம் ஆகிய நொடிப் பொழுதில் பிரம்மாக்களும் மாய்வார்கள். அளவுக்கு உட்பட்ட புத்தியும் பொய்யே யாகும். ஏனெனில் காலத்தின் மிக நுண்ணிய அணுத்துவத்தையும் மிகப் பெரிய மகத்துவத்தையும் அந்த புத்தியால் அளத்தல் முடியாது. பயிலும் மன்னுயிர்கள் எல்லாம் பல வகையான தீமையில் மயங்கும்.*

## கருமங்களும் கற்பனையே

*மிகவும் கற்றுணர்ந்த பெரியோர் மிக அரியர். வெவ்வேறு இனங்கள் அல்லது மரபுகளுக்கு உரியவை எனப்படும் பல வகையான கருமங்கள் துன்பத்தால் ஆனவை. சிறப்புள்ள நாள்களும் மேலான செல்வமும் தொழில்களும் ஆகிய யாவும் மாய்ந்து நினைப்பு மாத்திரமாய்த் தோற்றும். அந்த மார்க்கத்தில் நாமும் செல்வோம்.*

## உயர்வு தாழ்வு நிலையல்ல

*துன்பம் செய்கின்ற ஆபத்தும், சம்பத்தும் பிறப்பும் மரணமும் என்கின்ற அனைத்தும் கணக்கு நூலில் சொல்லுவதான கணப்பொழுதில் போகாதன இல்லை. கொடிய வீரன், வீரமற்ற ஒருவனால் கொல்லப்படுவான். ஒருவனால் நூறு பேர்கள் கொல்லப் படுவார்கள். இவ்வண்ணம் வையகத்தில் இடையின்றிச் சுக துக்கம் நசிப்பதோடு எல்லாம் சக்கரமாகச் சுழலும்.*

## இராச போகங்களில் இச்சையில்லை எனல்

*இத்தகைய சுற்றங்கள் என்னும் காட்டுத் தீயினால் மிகவும் வெந்த என் மனத்தில், தண்ணீரில் கானல் நீர் தோன்றாதது*

போல நெடிய இன்ப விருப்பங்கள் தோன்றா. அரச வினையில் செல்கிற இன்பங்களையோ தவிர்க்க முடியாத இறப்பையோ நான் விரும்பவில்லை. ஓர் இடரும் இன்றி இப்பொழுது இருக்கின்ற படியே இருப்பேன்.

## சித்தத் தியாகம் விரும்பல்

ஆனால் என் மனத்தில் அரித்துக் கொண்டிருக்கும் கவலையை விட்டு நான் விடுதலை பெற வேண்டியிருக்கிறது. நன்கு பயிற்சி பெற்ற உங்கள் மனத்தின் மூலம் அதனை இப்பொழுது அகற்றாவிட்டால் பின் எப்பொழுது தான் அது கை கூடப் பெறும்? மிகக் கொடிய நஞ்சும் எனக்கு நஞ்சு அன்று. புலனுகர்வுகள் (விடயங்கள்) தாம் உண்மையான விடம். துன்பம் தரும் விடம் (நஞ்சு) ஓர் உடம்பைக் கொல்லும், புலன்கள் ஆகிய விடமானது இனிவரும் உடம்புகளையும் கொல்லும்.

## சீவன் முத்தர்களை வருத்தா

மகிழ்வும் சோர்வும் உறவும் சார்பும் வாழ்வும் சாவும் என்பனவெல்லாம், திகழும் அறிவு மிக்கோரின் மனத்தைப் பந்தப்படுத்தா. இந்த ஆயுளானது காற்றினால் சிதறிய மேக நீர்த் துளிக்கு ஒப்பாகும். நிகர் இல்லாத விடய போகமானது மேகத்தில் உண்டாகிற பெரிய மின்னுக்கு ஒப்பாகும்.

## ஆன்ம ஞானத்தை விரும்பி வருந்துதல்

முத்திக்குச் சாதனமான மாந்தர்தம் இளமை, நில்லாது. இவை அனைத்தையும் மனத்திற் சிந்தித்து நல்லமைதி உடைய அறிஞர்களாகிய நீங்கள் அனைவரும் சமாதி நிட்டையை அடைந்திருக்கிறீர்கள். ஆராய்ந்தறிந்த என் மனமானது 'சீவன் நாயகன் வசம்' ஆவதற்கே இசைந்தது. ஆனால் அது தன் அன்புத் தலைவனை விட்டுப் பிரிந்திருக்கும் மாது போல, ஆன்ம நிச்சயத்தை அடையவும் இல்லை. விடய இச்சையை நாடவும் இல்லை.

## கூடியும் கூடாமல் இருக்கும் நிலைமை

ஆகவே எனது இந்த 'இரண்டுங் கெட்டான்' நிலையில்

வேதனைகள் கறைகள் உபாதிகள் (Vehicles of matter) ஐயம் மயக்கம் இன்றி எப்போதும் விளங்கும் அழகிய நிலையான நிலை யாது என எனக்குச் சுட்டிக் காட்டுங்கள். விடயங்கள் ஆகிய நெருப்பில் வீழாத நிலை-அவற்றிடை வாழ்ந்தாலும் நெருப்பினுள் வைத்த இரச குளிகை போலத் தீது அடையாத நிலை - யாது? தெரிவியுங்கள்.

## மெய்யுணர் வினாதல்

அலைவுள்ள புனல் அன்றிச் சமுத்திரம் வேறில்லை; அது போல 'வாக்கு வியாபாரமே' அன்றி வருகின்ற சம்சாரம் (உலகியல் வாழ்வு) வேறில்லை; பெரியோர்கள் இந்த வேதனையை அகற்றிக் கொள்ள என்ன செய்தார்கள்? உங்களின் அந்தத் தெளிவுரையை அடியேனுக்குச் சொல்லுங்கள்.

## உள்ளமைதி அன்றி வேறு ஒன்றும் விரும்பேன் எனல்

அமைதி மயமான நிலைமை இருக்கிறதல்லவா? இருக்குமாயின் அதன் உண்மை மருமங்களை இயம்ப மாட்டீர்களா? இயம்பாவிட்டால் யான் ஒற்றையில் கிடந்து செய்யும் முயற்சிகளால் அந்த அமைதி மயமான நிலையை அடைதல் முடியாது. ஏனென்றால் ஐயமும் அகந்தையும் இன்றி என்னால் எந்தக் கடமையும் செய்ய முடியாது.

இனி நான் உண்ணல் நல்லன உடுத்தல் கொடுத்தல் முதலிய நாட்கடமைகளைச் செய்ய விரும்பேன். நன்மையான அரச வினைகளிலும் இன்ப துன்பங்களிலும் செல்லேன். உடல் நழுவுவதை அல்லாது வேறு ஒன்றும் விரும்பேன். எழுதப் பெற்றிருக்கும் ஓவியம் (கற்சிலை) போல மௌனியாக விருப்பு வெறுப்புத் தொடர்பான ஈடுபாடுகள் அற்று இருப்பேன்.

## இராமன் வாய் பேசாது அமைதல்

களங்கம் அற்ற குளிர்ந்த முழு மதி போல் இனிமை உள்ளவன் ஆகவும் இன் சொல்லால் வினவுகின்ற ஆன்மிக விவேகத்தினாலும் விரிந்து அலர்ந்த மனத்தை உடைய இராமன், மனம் மகிழ் முனிவர்கள் முன்னே இவ்வாறு சொல்லிக் கனமாகிய முகிலின் முன்னே சத்தம் தவிர்ந்த மயிலைப் போல வாய்மொழி அமைந்து நின்றான்.

## அவையினரின் மகிழ்ச்சி

*களங்கம் உடைய பெரிய சம்சாரத்தை (உலகியலை) மாய்த்து விடுவிக்கக் கூடிய புதுமையான இளவரசனின் (இராமனின்) வாசகங்களைக் கேட்டுச் செம்மையான அரசவையில் இருந்தோர் எல்லோரும் இவ்வார்த்தைகளைக் கேட்கவே வந்தோர் போல மயிர்க்கூச் செறியக் களிப்பின் மிக்கார்கள். ஒளி திகழும் சித்தர் கணங்கள் விண்மிசை மகிழ்ந்தன.*

## சித்தர்கள் மகிழ்ச்சி

*'நன்று, நன்று' என்று சொல்லும் வாழ்த்தும் நல்ல மலர் மழையும் (மகிழ்ச்சிப் பெருக்கும்) சேர்ந்து அரை நாழிகை நேரம் சபையில் நிறைந்தன. பின்பு, ஓர் ஊழிக்காலம் வலிய துன்பத்துடன் இம்மண்ணில் திரிந்து சிந்தை மயங்கிய நாங்கள் அனைவரும் இன்று இராகவன் சொல் என்னும் இன்னமுதம் கிடைக்கப் பெற்றோம் என்று சித்தர்கள் சொன்னார்கள்.*

## சபைக்குச் சித்தர்கள் வருதல்

*திருத்தமான இராமன் உரைகளால் தெளிவுறு சிந்தை பெற்றோம்; இதற்கு மேன்மையான முனிவர்கள் உரைக்கும் பொருள் இனிப் பெறுவோம் என்று ஆகாயத்தினின்று புவிக்கு இறங்கி வரவும் அரசப் பேரவையில் இருந்தோர் எல்லாரும் எழுந்திருந்து அவர்களை எதிர் கொண்டார்கள்.*

## சித்தரும் மானிடரும் சந்தித்தல்

*வந்த சித்தர்கள் அனைவர்க்கும் வசிட்டரும் விசவாமித்திரரும் முந்தி ஆராதனை செய்தார்கள். முனிவர்களை அச் சித்தர்கள் பூசித்தார்கள். அந்த நல்லவையில் அரசன் தசரதனும் அச் சித்தர்களுக்கு அருச்சனை செய்தான். ஆக்கம் உள்ள அவ் அரசனுக்குச் சித்தர்கள் நன்மொழிகளால் வாழ்த்தினார்கள்.*

## இராமனது நிராசையைப் புகழ்தல்

*தொழுது முன்னே இருந்த செங்கண்களை உடைய*

தோன்றல் ஆகிய இராமனுக்கு முகமன் வசனங்களைப் பூமழையோடும் அன்பான சொற்களாலும் பரிந்து செய்த சித்தர்கள், "முனிவர்களே, நன்மைப் பண்புகளால் மிகுந்த இராமன் துறவாக (விரக்தியாக)ச் சொல்லிய சொற்கள் முற்றும் ஒப்புரவு (உதாரம்) உடையனவாக, அளவற்ற அதிசயம், ஆகும்" என்று சொன்னார்கள்.

## சித்தர்கள் தங்களைக் குறைத்துக்கூறல்

ஈசனால் இன்பம் மிகப் படைக்கப்பட்டு இருந்த போதிலும் தீமை தரும் மாயையில் (உலகியலில் : சம்சாரத்தில்) வரக்கூடிய சுகம் அரிதேயாகும். மிகவும் பிரகாசம் பொருந்திய சிறந்த வைராக்கிய (வேண்டாமை)ச் சிந்தையுள்ள இராமனுக்கு அவ் உலகியல் விருப்பமானது என்று உணரும்படியாக இருப்பின் எங்களுக்கும் விருப்பமானதே; ஆனால் இராமனுக்கு வெறுப்பானவற்றை நாங்கள் விரும்புதலால் நாங்களும் தேவ இருடிகளும் (ரிஷிகளும்) அறிவில்லாதவர்கள் என்று அச் சித்தர்களும் சொன்னார்கள்

## சுயமாக உண்டான நிராசையே ஆன்மானுபவம் கொடுக்கும்

இப்படி அவர்கள் சொன்ன பின்பு இராமனை இனிது நோக்கி விசுவாமித்திரர் சொல்லுவார்.

நீ சுயமாகவே களங்கமற்ற அறிவினால் தீதற அனைத்தும் அறிந்தாய். இனித் தெளிய வேண்டிய பொருள் வேறு ஒன்றும் இல்லை. ஆன்ம அறிவு நிறையப் பெற்ற சுக முனியும் நீயும் அறிவினால் சமம் ஆனவர்களே. எதிரற ஆன்ம ஞானம் பெற்றவர்களும் இளைப்பாற (நல்லமைதி பெற) விரும்புவார்கள் என்று, விசுவாமித்திரர் சொல்ல அப்போது வள்ளல் இராமன் விளைவான்.

'ஐயா, சுக முனிவர் அகம்பாவம் அற்ற அறிவு உண்டாகி யிருந்தும் ஆறுதல் முன்னம் இல்லாமல் இன்பமுறப் பின் உண்டானது எப்படி?" என்று அவன் கேட்டான்.

## சுக முனிவரின் கதை

(இவ் வையமும் தான் என்னும் அகந்தையும்

மெய்யானவை அல்ல என்பதை உணர்ந்த இராமனின் நிலையை மேலும் வலுப் படுத்தவும் அவன் மட்டுமே ஒன்றான மெய்யுணர்வு என்பதை உணர்த்தவும் ஏற்புடையதான சுக முனிவரின் கதையை விசுவாமித்திரர் அப்பொழுது சொல்லத் தொடங்கினார்.)

## 1:1 சுக முனியின் அனுபவம்

அதற்கு விசுவாமித்திரர் ஏழு பிறப்புகளைக் கெடுக்க வல்ல ஞானம் ஆனது நிறையப் பெற்ற சுக முனியும் உன்னைப் போலத் தொல் உலகின் இயல்பு நிலையை ஆராய்ந்து நிலைபெற்ற சிறப்பறிவு பெற்றவராய் மாசற உணர்வு பெற்றும் ஆறுதல் அற்றிருந்தார்.

விடுதற்கு அரிய அசைவு (சஞ்சலம்) விட்டு, விடயப் போகத்தின் (புலனுகர்ச்சி விருப்புகளினின்று) திரும்பிய நெஞ்சை உடைய சுகரும் வடவரையாகிய மேருமலையில் உறையும் தந்தையின் பக்கம் சென்று தன் வினாக்களுக்குத் தீர்வு வேண்டினார். 'இடர் மலிந்த இந்த மாயை எப்படி வந்தது? அது இறப்பது எப்படி? அது யார் மூலம் தோன்றியது? எவ்வளவு உள்ளது? எப்போது தோன்றியது?' என்று கேட்டார்.

சுகர் எழுப்பிய வினாக்களுக்கு அவர் தந்தை வியாசர் பொருத்தமான விடைகள் தந்தார். ஆனால் சுகரோ, அவை தமக்கு முன்பே தெரிந்தவையே என்றும் தம் சந்தேகங்கள் தீரவில்லை என்றும் கூறினார். தன் மகன் சுகரின் மனத்தை இணங்குவிக்க முடியாது என்று கண்ட வியாசர் மிக உயர்ந்த ஆன்ம ஞானம் படைத்த சனக மன்னனிடம் சென்று கேட்டுத் தெரிந்துகொள் என்று ஆற்றுப்படுத்தினார்.

அதன் பின் சுகர், மேரு மலையினின்று கீழே இறங்கிப் புவியிற் சென்று சனக மன்னனின் பொன்மனை வாயிலைக் சேர்ந்தார். தூயவரான அவரது வருகையைத் தூதராற் கேட்டு, அவரைச் சோதிக்கும் பொருட்டு அவரைக் காண வரவில்லை. சுகரும், மனவேறுபாடு சிறிதும் இன்றி ஏழு நாள்கள் வரை வாசலில் காத்திருந்தார்.

அதற்குப் பின்பு மேலும் ஓர் ஏழு நாள் வேறு ஓர்

இடத்தில் இருக்கும்படி வைத்த பின்பு மிகுந்த பொன்னாற் செய்யப்பட்டு அழகு நிறைந்திருக்கும் அந்தப்புரத்தில் ஏழு நாள் இருக்க வைத்துச் சிற்றிடை மகளிரால் சிறப்பு உணவும் சந்தனம் பூ முதலிய இன் பொருள்களும் அளிக்கப் பெற்றார். எல்லாவற்றையும் ஏற்றுக் கொண்ட சுக முனியோ நிறைமதியாக, இந்த அனுபவத்தின் இருண்ட பக்கத்தையோ இனிய பக்கத்தையோ கருதவில்லை. தனக்கு அளிக்கப்பட்ட சுகங்களால் மகிழ்வோ அவமதிப்பால் வேதனைப்படவோ செய்யவில்லை.

மெல்லிய மணம் சுமந்த தென்றற் காற்று, மலைகளிற் பெரிய மேருவைக் கலங்கச் செய்யுமா? புறப் பொருள்களால் சலனம் உறாத முனிவரின் நெஞ்சின் உறுதிப் பாட்டைக் கண்டு அங்கிருந்தோர் அக மகிழ்ந்தனர். அது நோக்கி அரசன் அவரை வணங்கிப் புகழுரை புகன்று, உலகின் செய்கை தவிர்ந்து பேறுகள் யாவும் பெற்ற சுகப்பிரம இருடியே, இங்கு வந்த காரியம் என்ன என்று கேட்க, தன் வினாக்களை முனிவர் சனகன் முன் வைத்தார்.

'மாயை எங்ஙனம் தோன்றிற்று, எப்படி வளர்ந்தது, எங்ஙனம் போகும், உண்மையினை எனக்கு உரை செய்ய வேண்டும்?' என்று சுகர் கேட்டார்

அதற்குச் சனகர், முன்பு வியாசர் என்ன மறுமொழி தெரிவித்தாரோ அதே மறு மொழியையே சொன்னார். அதைக் கேட்ட பிரம்ம இருடி, 'இதனை யான் முன்பு (சுய விவேகத்தில்) அறிந்திருக்கிறேன். என் தந்தை எனக்குச் சொன்ன விளக்கத்தையே தாங்களும் கூறுகிறீர்கள். மறைநூல்களில் சொல்லப்படும் பொருள்கள் இரண்டற்ற ஒன்றையே சுட்டுகின்றன.

மாயையானது ஆன்மாவிலிருந்து வேறு ஆக்கி (விகற்பித்து)ப் பிறக்கிறது. அது மறுபடி அதனுள் (ஆன்மாவினுள்) கலந்து விடுகிறது என்று சொன்னால் இந்த அழிந்து போம் மாயையினால் ஒரு சிறு ஆதாயமும் இல்லை என்றல்லவா தெரிகிறது?

குருவே, மாந்தரின் மனங்களிலிருந்து மயக்கத்தை விலக்கிவிடக் கூடிய தாங்கள் ஒப்பிட முடியாத, மெய்யான

இந்த ஆன்மா பற்றி எனக்குத் தெளிவுபடுத்த வேண்டும் என்றார்.

அதற்குச் சனகர், "சுகரே, நீரே வரையறுத்து உணர்ந்திருந்ததும், தந்தை வியாசர் சொல்ல அதை ஒப்புக் கொள்ளாமல் என்னிடம் கேட்டீர். (நாங்கள் சொன்ன) அந் நிலையே உண்மையானது. ஆன்மா மட்டுமே இருக்கிறது. அது எங்கெங்கும் இருக்கும் நிறை அறிவுவெளி (சிதாகாசம்) ஆகப் பரவியிருக்கிறது. அது தவிர அயல் ஒன்றும் இல்லை.

அந்த அறிவு சங்கற்பத்தால் (எண்ணம்; விருப்புறுதி) பந்த (கட்டு)ப் படும், அந்தச் சங்கற்பம் நீங்கில் கட்டுத் தளைகளிலிருந்து விடுதலையாகும். அந்த ஆன்ம ஞானத்தைச் செவ்வையாக நீர் அறிந்தீர். ஆதலால் போகங்களிடத்து ஆசையையும் வையக(சக)க் காட்சி யனைத்தையும் விட்டு நீக்கினீர்.

துன்பம் நீங்க உமது முழு நிறை மனத்தினால் பெறத் தக்க யாவும் பிரம்ம மயமாக அடைந்தீர். காட்சிக்கு எட்டாத ஒன்றில் இரண்டறக் கலக்கின்றீர். சீவன் முத்தர் ஆனீர். மனத்தின் உண்டான மயக்கம் என்கிற கவலை ஒன்றினையும் விடுவீர்."

இவ்வாறு அரசர்க்கு அரசனான சனகன் சுகருக்குத் தன் முன்னிலையில் ஆன்மிக மருமங்களை உணர்த்தினான். (ஆன்மாவை- மெய் வடிவை - உணரப் பெற்றவன் மாயையை வென்று அதனை அடைகிறான். ஆதலின் அவனால் தான் மாயை என்பது என்ன, அது எப்படித் தோன்றுகிறது, எவ்வாறு அழிகிறது? என்று அறிய முடியும். ஆகவே, இந்த ஆன்மிக அனுபவம் குருவின் நேர்முகத்தால் கிட்டுவதாக இருக்கிறது. ஆகவே, மாயை தோன்றியது மறைவது பற்றி வார்த்தைகள் எவையும் விவரிக்க ஒண்ணா என்று அறிகிறோம். சுகர் பக்குவம் அடைந்திருந்த சீடர் என்பதால் அவருக்குச் சனகரால் நேர்முக உணர்வு (அபரோட்ச ஞானம்) அருளப்பட்டது)

அவ்வளவில் களங்கம் அற்றவராகிய சுக முனிவர் தன்னிலையாம் பரம் பொருளில் தளர்ச்சி மாறி (அமைதி கண்டு) அச்சம் தவிர்த்து, மரணத் துன்பம் நீங்கி மன அயர்வுகள் அகன்று; விசாரிக்கும் செயல் அடங்கி அனுபவமாகச் சந்தேகம் நீங்கப் பெற்றார்.

பின்பு அவர் மாமேரு மலையின் உச்சியை அடைந்து நிருவிகற்பம் எனப்படும் சலனமற்ற சமாதியில் சூரிய வருடம் ஆயிரம் இருந்த பின்பு திரியும் நெய்யும் சுவறி ஆகாச அக்கினிக்கு மீண்டு விடும் விளக்கு நெருப்புப் போல ஞான ஆகாசத்தில் (பிரமம் அல்லது ஆன்மாவில்) கலந்தார்

சிந்தை ஆகிய களங்கம் நீங்க, தூயவராக, அலை கடலிற் சேர்ந்து ஒன்றாகிற துளிகளைப் போல, தன்னிடத்து உண்டான வாதனை போய்த் தன்னில் கரைந்து பிரமத்தில் இரண்டறக் கலந்தார் சுகர். மாயா சம்பந்தமான கலக்கம் விலகி அமைதி அடைந்தார் அவர்.

அந்த வழியே, இராமா, உனக்கும் உகந்த வழியாகும். அறியத் தக்க யாவும் அறிந்திருக்கின்ற மனத்துக்கு உரிய அடைவு யாது என்றால் எப்பொழுதும் களிப்பு மிகுந்த போகங்கள் அனைத்தும் எனக்கு என்கிற ஒன்றுதலை விட்டுவிட்டிருத்தலாம்.

போகம் பொருந்திய மன (நினைப்பு) அரிப்புகளால் மெய்ப்பொருள் அல்லாத பொருளில் எழுகிற தளை (பந்தம்) ஆனது நிலைபெற வலிமை பெறுகிறது. துன்பக் காரணமான அந்த அரிப்பு நீங்கினால் துன்ப மயமான பந்தம் தேய்ந்து தொலைந்து போகிறது.

இராகவனே, வாசனை (மனஒட்டுதல்) களை நீக்கல் ஒன்றே வீடுபேறு (மோட்சம்) தரும். மன ஒட்டுதல்களில் மனம் இறுகினால் பந்தம் ஆகும். மன ஒட்டுதல் வலிமை அற வென்றவர்களுக்குத் தவ நோன்பு முதலியன இன்றி உலகியல் இன்பங்களில் வெறுப்பு ஆகின்ற மேன்மக்களே சீவன் முத்தர்கள் ஆவர் என்று விசுவாமித்திரர் சொன்னார்.

## வசிட்டரே கூற வல்லார்

உயர்ந்தோர் உரையால் இராமன் மனத்தினில் உணர்ந்த பொருளே பொருள், வேறு இல்லை என்று கூறக் கேட்டு மனத்தில் இளைப்பாறுதல் பெற்று (அமைதி அடைந்து) ஐயம் தீர்ந்த உயர்ந்த ஆன்மாவான இராமனுக்கு முக்காலம் உணர்ந்தவரும், உலக குருவாகி யாவும் நோக்கி, பெயர் வடிவுள்ள யாவற்றுக்கும் சான்றாக இருக்கின்ற நல்ல

வசிட்டரே விளக்கிக் கூற வல்லார் என்று அரசவையில் விசுவாமித்திரர் சொன்னார்.

இவ்வாறு சொல்லிவிட்டு விசுவாமித்திரர் வசிட்டரின் முகம் நோக்கினார். முன்பு தாம் இருவரிடை இருந்த பகை நீங்கவும் நல்லோர் எல்லாம் தொல் வினை (சஞ்சித கன்மம்) விடுபட்டு முத்தி பெறவும். தாமரையில் வசிக்கும் பிரமாவினால் சொல்லப்பட்ட ஆன்ம அனுபவம் விளங்கும் படி அருளிய ஒப்பற்ற ஞானத்தின் கதைகள் யாவற்றையும் கல்வி மிக்க இராமனுக்குச் சொல்ல வேண்டும். என்றார்.

'ஆசை நீங்கிய சீடனுடைய மனத்திற்கு அனுக்கிரகிக்கும் பிரம உபதேசம் யாது ஒன்றோ, அதுவே செழுமையாகிய ஞானத்தை உணர்த்தும். இதுவே சாத்திரத்தின் பொருளும் ஆம். சிறப்பும் அதிலே தான் இருக்கிறது' என்று சொன்னார்.

ஆனால் ஆசை மிகுந்த பொல்லாத மாணாக்கனுக்குக் கற்பித்த அறிவுரை கரிய நாய்த் தோலுள் வைத்த மேலான பால் போன்று அசுத்தம் ஆகும் என்று மேலான விசுவாமித்திரர் பலவிதத்தாலும் சொன்னார். அது கேட்ட தீதிலா நாரதர் வேத வியாதர் முதலான திரண்ட முனிவர்களும் இதுவே நல்லது என்று அவ் உரையைச் சிறப்பித்தார்கள்.

விசுவாமித்திரரைப் பார்த்து, பிரமாவுக்குச் சமமான, பிரமனின் புதல்வரான வசிட்ட முனிவர் சொல்லலானார்.

'கலை ஞானங்களை உணர்ந்த முனிவரே, நீங்கள் மொழிந்த படியே செய்வேன். கற்று உணர்ந்த பெரியோருடைய சொற்களைக் கடப்பார் யார்? நிலையில்லாத பிறவி மயக்கம் கெட, தாமரை மலர் மேல் வசிக்கும் பிரமதேவர் நிடத மலை (மேருவின் சிகரங்களில் ஒன்று) மேல் அனுக்கிரகம் செய்த ஞானக் கதைகளானவை, அலைவிலா மனத்தின் கண் இருக்கின்றவற்றைச் சொல்லுவேன் என்று சொல்லி, அஞ்ஞானத் தொகுதி அழியப் பூரணமான ஞானமானது நீங்காத பரமபதமானது யாவருக்கும் உதயமாகும் பொருட்டுத் தூய அறத்துடன் சொல்லலானார்.

# இரண்டாவது
# முமுட்சுப் பிரகரணம்

## முயற்சி வேண்டும்

*வசிட்டர் உரைத்தார் :*

*இராமா, இதைக் கேட்பாயாக. இவ்வுலகில் உரிய நல்ல முயற்சியினால், மானிட விருப்புகள் எல்லாம் முறையான கல்வி ஒழுங்கினால் அடையலாகும்.*

*இத் தகு முயற்சிகள் இரு வகைய. ஒன்று, ஆன்ம ஞான அடைவுக்கான சாத்திரக் கல்வி. மற்றொன்று உலகியல் அறிவு முயற்சிக்கான சாத்திரக் கல்வி.*

*இவற்றுள் முன்னது மோட்சத்துக்கு இட்டுச் செல்லும். பின்னது உத்தம சாத்திர வழி என்று சொல்ல முடியாது. ஏனென்றால் அது பந்தத்துக்கு இட்டுச் செல்லும். தம் பாலப் பருவ முதலே ஆன்ம ஞான சாத்திரப் பயிற்சி மேற்கொண்டு, சான்றோரின் இணக்கம் பெற்று, ஒப்புரவு முதலிய நற்குணங்களை வளர்த்து வந்தோர் வீடுபேறு எய்துவர்.*

## பூர்வ வாசனை தடுக்கிறது

*அப்போது இராகவன், 'முந்திய பிறவிகளால் ஊற்றெடுக்கும் வாசனை (மன ஒட்டுதல்)களின் வசப்பட்டு*

இருக்கிறேன். யான் மெய் வழி - சன்மார்க்க - முயற்சிகள் செய்ய முடியவில்லை. குருவே, நான் என்ன செய்வேன்?' என்றான்.

## முயற்சியே முக்கியம்

'ஞான அற்புதனே, தன் வருத்த முயற்சியால் பரம பதம் அடையலாம். இதுவன்றி வேறு வழி இல்லை. சொல்லப்பட்ட வாசனைத் திரளில். சுப வாசனை அசுப வாசனை என்று இரண்டு வகை உண்டு. பிறவிகள் தோறும் தொடுத்து வந்த வாசனைகளே நம்மிடம் பொருந்தி இருக்கும்.

## சுப வாசனையை மேவி நில்

சுத்த வாதனை (வாசனை) தொடர்ந்தால் அதன் காரணமாக. மெல்ல, தூய பரம பதம் பெறுவாய். தூயது அல்லாத பெத்த வாதனை (பந்த வாசனை) தொடர்ந்தால் அது துன்பம் விளைக்கும். வருத்தம் மிக உற்றாயினும் இவ் வாதனையைப் போக்க வேண்டும்.

நன்மை, தீமை என்கிற வழி இரண்டால் வாதனையாம் நதி பெருகும். வருத்தத்தால் மெத்த முயன்று தீய (அசுப) விடய வாதனையை நீக்கி, மிகுந்த நன்மையுள்ள சுப வாதனையில் மேவி நிற்பாயாக.

உன் சமனிலைப் பார்வையாலும் முயற்சிகளாலும், அசுத்த வாசனைகட்கு அடிப்படுவதை விலக்கி, சுத்த வாசனைக ளோடு இணக்கம் பெற வேண்டும். முந்து பல பழம் பிறவிகளில் உற்பத்தியான அசுத்த வாசனைகளை அகற்றி ச் சுத்த வாசனைகள் விடியுமாறு செய்ய வேண்டும். அவை உன் வருங்கால முயற்சிகளுக்குப் பயன் தர ஏதுவாகும்.

சுத்த வாசனைகள் எங்கே கொண்டு செல்கின்றன என்ற ஐயம் உன் உள்ளத்தில் எழுந்தாலும் நீ அவற்றையே ஆதரித்துப் பதித்து வர வேண்டும்.

ஏனென்றால் அவற்றின் மிகுதியால் ஒரு வகையிலும் கெடுதல் விளையாது. பிரம்மப் பேருண்மையால் உன் மனம் ஒளி பெறுங்காறும், குருவும் மகா வாக்கியங்களும் உரைக்கின்ற வழியை நீ அனுபவத்தில் கடைப்பிடிப்பாயாக.

## 'தத்துவமசி' (அது நீ) என்பதைச் சிந்தை செய்

*தூயதாய் இனியதாய்ப் பெரியோர் விரும்புவதான வாசனையினால், மனத்தை அழுத்தும் துயரும் இல்லா ஆன்ம பதத்தை அடைவித்துப் பின் அந்தச் சுத்த வாசனையையும் தள்ளி நேரடி அனுபவ நிலையில் நிற்பாயாக. திரும்பி வராதபடி மாயை நினைவு ஒழித்துப் பூரண அமைதியும் ஆனந்தமும் வழுவாமல் விடய வாசனைகளைத் துறந்து விடும் அறிவால் அடைவாயாக. 'தத்தோமசி' (தத்துவமசி-அது நீ ஆயினை) என்பதை ஆய்வதில் ஈடுபடுக. நெஞ்சை ஆன்மாவில் அமர்த்தும் ஐக்கியம் ஏற்பட, இராமா, நீ தியானம் செய்க.*

## வசிட்டரின் சுய சரிதை

*தேன் பொருந்து தாமரைப் பூவில் அமர்ந்திருக்கும் பிரம தேவன் உரைத்த மொழியை இப்போது சொல்வேன் கேட்பாயாக என்றார் வசிட்டர்.*

*அதற்கு இராமன்,*

*பிரம தேவன் உரைத்தற்குக் காரணம் யாது என்று வினவினான்.*

*வசிட்டர் அதற்குச் சொல்லத் தொடங்கினார் :*

*முடிவற்றதும் எங்கும் நிறைந்திருப்பதும் யாவற்றுக்கும் இருப்பிடமாகி எல்லாவற்றுக்கும் ஒளி தருவதாகவும் உள்ள மெய்ஞ்ஞான விண்ணிலிருந்து (சிதாகாசத்திலிருந்து) விண்டு (விஷ்ணு) உதயம் ஆனார். விண்டுவின் மனக் கமலத்தில் பிரமன் உதயம் ஆனான். அவன் தன் மனக் கற்பனையால் புவி முதலிய வேறுபாடுகளைப் படைத்தான்.*

*புவிப் பரப்பை உண்டாக்கிய பிரமனே, காலப் போக்கில், பரத வருடத்தில் (இந்தியா உள்ளிட்ட பூமிப் பகுதியில்) பல உயர்ந்த உயிர்கள் அளவில்லாத துயர் உறுதல் கண்டான். புதல்வரின் நோவுக்கு அழுங்கும் தந்தை போல் அழுங்கி அவர்கள் உய்தற் பொருட்டுச் சிந்தித்துச் செபம் முதலிய கிரியைகளும் உடம்பை வருத்தும் தவங்களும் தானங்கள் தீர்த்த யாத்திரைகள் போன்றவையும் ஆன பலவற்றாலும் பிறப்பு இறப்புகள் தவிர்க்கப்பட மாட்டா; ஆன்ம*

ஞானத்தால் மட்டுமே தவிர்க்கப்படும் என்று சிந்தித்துத் தன்னைப் போல் கமண்டலமும் செபமாலையும் இருக்க என்னை உண்டாக்கினான்.

பிறந்து வணங்கிய என்னை மகிழ்ச்சியுடன் தான் வசிக்கும் தாமரையின் வட பக்கம் ஒரு மடல் மேல் இருக்கச் செய்தான்.

இரண்டு நாழிகை நேரம் (ஒரு முகூர்த்த நேரம்: 48 நிமிடம்) என் மனத்தை மாயை அடையக் கடவது என்று சாபமிட்டான்

மாயை என்னைப் போர்த்தது; கலக்கம் அடைந்த புத்தியோடு மெய்யுணர்வும் மறந்தேன். கல்லா மூடரைப் போல் புலம்பினேன். பிரமன் என்னைப் பார்த்து, 'வெவ்விய துக்கம் உன்னிடம் என்ன காரணத்தால் வந்தது?' என்று கேட்டான்.

அதற்கு நான் மாயை (சம்சாரம், உலகியல்) விளைந்தவாறும் அது நீங்கி மோட்சம் அடையுமாறும் எப்படி என்று கேட்டேன். நன்றாக விளங்குமாறு அவன் சொன்னான்.

ஆன்மாவை அறிந்து அசைவற்று இருந்த என்னைப் பிரமன் பார்த்து,

நான் தான் உன் அறிவை மாற்றி, ஈனமான மாயையில் போர்த்துப் பின்பு அதனை அறிவினால் ஒழித்தேன். ஆன்மாக்கள் யாவும் உன் அருளுரை - உபதேசம் - பெற்று உய்ய உபாயம் செய்தேன். மெய்யறிவு உதயம் ஆனதும் நீ நாவலந் தீவில் (ஜம்புத்வீபத்தில்) பாரத வருடத்திற்கு விரைந்து செல்வாயாக.

அழியும் கருமங்களின் (மதக் காரியங்களின்) இடமாக அது உள்ளது. நான்கு ஆகிய தகுதிகள் பெற்றோருக்கு, விடுதலைக்கு உரிய ஆன்ம ஞானத்தை அறிமுகம் செய்வாயாக. நான் என்னும் அகம் அழியாது கிரியைகளில் விருப்புக் கொண்டிருப்போர்க்கு அவற்றை ஒழுங்காகச் செய்யும் முறை (கரும காண்டத்தை)ப் போதிப்பாயாக! என்று உரைத்தார்.

அப்படியே பாரத வருடத்திற்கு வந்தேன் உயிர்கள் இருக்கின்ற காலமெல்லாம் நானும் இருப்பேன். இங்கு ஒரு செய்கையிலும் எனக்கு நாட்டம் இல்லை. இவ்விடத்தில்

நனவிற் சுழுத்தியை (சுஷுப்தியை - கனவற்ற துயிலை)- அடையும் செய்கையில் துன்ப மனத்தைக் கடந்து அன்றாடத் தொழில்கள் யாவும் செய்வேன். விருப்பைக் கவர்கின்ற என் செய்கை யாதொன்றும் இல்லை.

## நல்ல குருவின்; சீடரின் இலக்கணம்

வீரமுள்ள இராமனே ஆசிரியரின் கலை நிறைவையும் பேதைமையையும் (ஆசார) விவகாரங்களால் பகுத்தறி வோடும் ஆராய்ந்து (விசாரித்து) உயர்வான மெய்க்குருவைப் பெற்று ஆன்மாவை அறிபவர்கள் அறிவில் மிகுந்த சீடர்களாவார்கள்.

## பக்குவம் இல்லாதோர்க்கு, ஆசிரியர் உண்மை உரையார்

ஆசிரியர் உரைக்கின்ற உரைகள் யாவற்றையும் முன் பின் நோக்கிச் சேர்த்து அறிபவர்க்கு அன்றி, பார்த்த விடய மயம் ஆகும் பசுத் தன்மைக்கு ஒப்பான சீவத் தன்மை உடையவர்க்கு, குற்றமற்ற ஆசிரியர் தத்துவ ஞானத்தைப் புகலார்.

## மோட்சத்தின் வாயிற் காவலர் நால்வர்

மோட்சத்தின் வாயிற் காவலர் நான்கு பேர். சாந்தி (இனிய பொறுமை அல்லது மன அமைதி) விசாரம் (ஆன்ம விசாரணை) சந்தோடம் (போதும் என்ற மனம், சிந்தை நிறைவு) சாது சங்கம் (நல்லோர் இணக்கம்) என்று சொல்லப் படுவோர் அவ் வாயிற் காவலர் ஆவர். அந் நால்வரும், ஒருவர்க்கு நண்பர்களாக இருந்தால் மோட்சம் செல்லத் தடை கிடையாது. நாடு காக்கும் அரசரைக் காண அரண்மனை வாயிற் காவலர் விடுவது போல அவர்கள் மோட்சத்திற்கு விடுவார்கள்.

## நான்கு குணங்களில் ஒன்றையாவது அடைய வேண்டும்

மேற்சொன்ன காவலர் நால்வரில் ஒருவர் அன்புடையர்

ஆனாலும் நால்வரும் ஒத்து அன்பராவார்கள். ஆதலால் பல நாளும் மிக முயன்று, இடர் யாதேனும் வரினும் தள்ளி ஒருவரையாவது பற்றிப் பழக்கம் செய்து கொள்ள வேண்டும். நிலையில்லாத பிறப்பு அற நல்லோர் இணக்கத்தாலும் ஆன்ம ஞான நன்னூல் விசாரணையினாலும் உயர்ந்த நிட்டையாலும் உணர்வை (பிரக்ஞையை), முதன்மையாக வளர்க்க வேண்டும். துன்பம் தரும் மாயை (சம்சாரம்) என்னும் நஞ்சானது ஞானம் என்கிற கலுழ (கருட) மந்திரத்தால் விலகும்.

## ஞானம் மிகுந்தார்க்கு நன்மை

ஞானம் வளர்ச்சி பெற்றவர்களுக்குத் தம் மீது ஏவப்பட்ட அம்பு மழையும், ஆம்பல் மலர் பொழிந்தது போல் ஆகும்; அக்கினிப் படுக்கையும் பனிநீர் தெளித்த மெத்தையை ஒக்கும். தன் தலையை அறுப்பது, சுகமான சுழுத்தியை (கனவற்ற துயிலினை) ஒக்கும். உடலை அரிவது சந்தனம் பூசுதலை ஒக்கும். கணக்கற்ற ஈட்டிகள் தன் மார்பில் பாய்வது நெடுங்கோடையில் துருத்தியினால் விசிறப்படும் நன்னீரை ஒத்திருக்கும். புலனுகர் பொருள்கள் என்னும் நஞ்சான நோயானது பகுத்தறிவு ஞானம் (ஆன்ம ஞானம்) அதிகரித்தவர்க்கே அன்றி மற்றவர்க்கு விலக்கிக் கொள்ளல் இயலாது.

## மூன்று ஆதாரம் : சுருதி, குருவாக்கு, அனுபவம்

குறைவில்லாத மெய்யறிவு நூல்களைத் தெளிவாக ஓதுவதால் உயர்வீடு (நிருவாணம்) நண்ணும் என்பது உண்மை தான். தான் அறியும் அனுபவமும், ஞான நன்னூல் முடிவான கருத்துகளும், குருவின் அறிவுரையும் ஆகிய மூன்றும் தம்மிடத்துப் பொருந்தி ஒன்றான வகையில் கடைப் பிடிக்கப் படுமாகில் விட்டு விலகாத ஆன்ம ஞானம் சுடரும்.

தன் அனுபவம், ஆசிரியரின் வழிகாட்டல் என்ற இரண்டும் இன்றி இன்னொன்று ஆகிய மெய்ந்நூலை (மட்டும்) அற்ப அறிவினர் கற்பதால் மடமை தான் பெருகும். அந்த அளவுக்குப் பக்தி நூலோ கரும (காண்ட) நூலோ மடமை தராது.

## அறியாமையின் இழிவு

இப்படிப்பட்ட மடமையோடு வாழ்வதைக் காட்டிலும் கடைப்பட்டோர் வீடுகள் தோறும் ஓட்டில் இரந்து உண்டு திரிவது சீரான வாழ்க்கை ஆகும். மிகுந்த திரவியங்களும், நட்பு, உறவு, புண்ணிய யாத்திரை, தீர்த்தம் ஆடுதல், ஆசிரம வாழ்வு, உடம்பை வருத்தும் தவம் என்பன மேனிலை அடைய உறுதியான சாதனம் ஆக மாட்டா. மன வருத்தத்தால் (முயற்சியால், மனத்தை இழத்தலால்) தூய மேலாம் நிலை கிட்டும்.

## மோட்ச வாயிற் காவலர்களின் தன்மைகள்

மோட்ச வாயிற் காவலர்கள் நான்கு பேர்களுடைய குணங்களை, இராமா, நீ கேட்பாயாக.

## இனிய பொறுமை, நல்லமைதி (சாந்தி)

மேலான அசைக்க முடியாத இனிய பொறுமையைப் பண்படுத்திக் கொண்டால் எல்லா ஆசைகளும் துன்பமும் உதய சூரியனுக்கு முன் இருள் போல் ஓடி விடும்.

நல்லவரும் தீயவரும் தாய் போல் நம்பற்குத் தகுந்தது ஆகி, அமுதம் புசிக்கும்படி கிடைப்பினும் வளமான தாமரை மலர் மேல் உள்ள திருமகள் வந்து பொருந்திடினும் சமானம் ஆகாத மகிழ்ச்சியைக் கொடுக்கின்ற, சாந்தி உள்ளோர், மரணம் செல்வம் உயிர் பறிக்கும் போர் என்று வருவனவற்றுக்கு அசையார். புலன் ஐந்தாலும் குற்றமும் நலமும் புசித்து வாடார், குளிரார். கலை மறையோர், மொய்ம்பு (வலிமை) உடையார், தூயர், மற்று எவரினும் இச் சாந்த குணம் வாய்க்கப் பெற்றோர் தூயராக மேன்மையுடன் பிரகாசிப்பர்.

அறிவுடையோரால் விரும்பப் படுவதாகி ஏனையோர் அனைவர்க்கும் அரிதாயிருக்கும் சாந்தி (இன்பொறுமை, நல்லமைதி) ஆகிய அமுதத்தை அருந்தி மேலோர், சீரிய வீட்டினை (மோட்சத்தை) அடைந்தனர். நீயும் அவ் வழக்கத்தின்படி செல்லக் கடவாய்.

## ஆன்மிக ஆய்வு

இத்துடன், நல்ஞான சாத்திரத்தினால் தெளிந்த தூய நுண் அறிவினால் ஆன்மிக விசாரணையைப் பூரணமாகச் செய்க. ஆன்ம விசாரணை பூரணம் ஆனால் நிகர் இல்லாத அறிவானது அதி நுட்பமாய் வீடு பேற்றை உணரும். இவ் விசாரணையே (ஆராய்ச்சியே) காரிய காரணங்களைக் குறித்து அறிவோர்க்கு, தமக்கு உண்டான கொடிய பிறவி நோய்க்கு அரிய மருந்தாம்.

செறிந்த இருட்டிலும் மறையாததாக மிகுந்த வெளிச்சத்தி லும் ஒளி குன்றாததாக, பார்ப்பதற்கு அரிய பொருள்களை எல்லாம் பார்க்க உதவியாக இருக்கிற பகுத்தறிவுக் கண்ணர் (விசார திருஷ்டியினர்) ஐயங்கள் நீங்கப் பெற்றுத் தெளிவு உண்டாகலும் 'நான் ஆர்? உலகம் வந்தவாறு என்? நான் எங்கிருந்து வந்தேன்? உலகு யாரை உடையது?' என்ற விசாரணையில் ஈடுபடுவர். இந்த விசாரணை, அறியாமை இருட்டாகிய ஆபத்து என்னும் நோய்க்கு அவுடதம் ஆகும்.

## சிந்தை நிறைவு (சந்தோஷம்)

இனி, மேலாகிய சந்தோடம் என்பது யாது என்று பார்ப்பின் வரும் நன்மை தீமைப் பொருள்களில் விருப்பு வெறுப்பு இல்லாமல் நுகர்ந்து, கிடைக்காதவற்றுக்கு ஏமாற்றம் அல்லது வெறுப்பு இல்லாதிருத்தல், மகிழ்ச்சி ஆகும்.

நிகரற்ற இந்தச் சந்தோடம் என்கிற அமுது பொருந்தப் பெற்றால், மிகுந்த விடய போகம் (புலனுகர்ச்சி) நஞ்சு ஆகும். விடய சுகத்தில் அழுந்துகின்ற மனம், ஆன்ம ஞானத்தில் தன்னை உயர்த்திக் கொள்ளுங்கால் பழுது பட்ட கண்ணாடியில் பார்ப்பது போன்ற திரிபுடைய உருவத்தைக் காணாது. இவ்வாறு சிந்தை நிறைந்த இயல்புடைய மனிதனைப் பெரிய தவசிகளும் மக்களிற் சிறந்தோரும் வணங்குவர்

(முமூட்சுகள், சகல போகங்களும் கைக்கும்படியான சந்தோஷத்தையும், சம்சாரத்தை வெல்லத் தக்க சாது சங்கத்தையும் அடையப் பெறல் வேண்டும் என்பதாம்).

## சாது சங்கம்

*மாயை மயமான இவ் உலகை வெல்ல விழைவோர் யாவர்க்கும் சாது சங்கம் - ஞானிகள் இணக்கம் - இன்றியமையாதது. மிகவும் குறைவான அறிவை அது நிறையறிவு ஆக்கும். உலகியற் பொருள்களால் வரும் விபத்துகளை அது முன்னேற்றத்துக்கான செல்வமாக மாற்றும். எந்தப் பொருள்களிடை இருந்தாலும் ஒன்றிலும் இனிமை யுறாத மனத்தினை எங்கெங்கும் மகிழ்ச்சி காணக் கூடிய ஒன்றாகச் செய்து விடும். கங்கைத் தண்புனலில் ஆடியோர்க்கு அது (கங்கை) நலங்கள் செய்வது போலச் சாதுக்கள் என்ற கங்கை, நலங்கள் செய்யும். உயர்ந்தோர் இணக்கம் வாய்க்கப் பெற்றோர்க்குச் செந்தீயால் நடத்தப் பெறும் வேள்விகளும் தானங்களும் புண்ணிய தீர்த்தங்களில் ஆடலும் தேவையில்லை. துக்கம் ஆகிய பந்தம் அறுத்து யாவர்க்கும் இனிமையுள்ளவராகவும் பிறப்பு என்னும் கடலைக் கடப்பதற்குக் கப்பலாயும் இருக்கிற அறிவு சான்ற பெரியோரை எவ்விடத்தும் பேணல் வேண்டும்.*

## நான்கு உபாயங்கள் : கதைகளின் பயன்கள்

*அழுத்தும் சம்சாரத்தை (உலகியலை)த் தீர்க்கிற உபாயங்கள் நான்கு ஆகும். இந் நால்வரோடு மிகுந்த அன்புள்ளவர்கள் பிறவிக் கடலைக் கடந்தார்கள். இனிய பொறுமை (சாந்தி) முதலிய குணமுள்ள இராமா, (இந் நூலில் கூறப்பட்டிருக்கிற) இளைக்கின்ற மன மயக்கம் தீர்க்கின்ற) கதைகளைக் கேட்பாயாக.*

*அவற்றின் மேலோட்டமாக உள்ள தன்மையைப் பொருட் படுத்தாமல், ஆழ்ந்துள்ள பொருளை ஆராய்வோருக்கு வேதங்களின் முடிவாகிய உணர்வு - ஆன்ம ஞானம் - உதயமாகும். விருப்பு, வெறுப்பு முதலிய மயக்கங்கள் தீரும். இலையுதிர் காலத்து வாவிநீர் போலச் சித்தம் களங்கமற்றுத் தெளியும். கவசம் தரித்தோரைக் கணைகள் (அம்புகள்) துளைக்காதது போல் வறுமை முதலிய துன்பங்கள் தாக்க மாட்டா.*

## ஆசையற்ற ஆராய்வின் பயன்

*அச்சுறுத்தும் மாயையானது, ஆன்மிக விசாரணையில்*

முற்பட்ட மனத்தை வருத்தாது. மனம் அலையற்ற கடல் போலச் சமனிலை பேணும். ஆழ்ந்த ஆய்வு உள்ளோர் அளந்து காண முடியா ஆழத்தையும் மேரு மலையின் நிலைத் திறனையும் தண்ணிய நிலவின் குளிர்மைமையும் அடைவார்கள். மறுவிலாக் கற்புடைய மாது தன் மனையில் தன் கணவனைக் கடவுளாகக் கருதிக் களிக்குமாறு போல ஆன்ம ஞான வழியில் நடக்கும் நல்லோர் சமாதியில், அதனோடு தொடர்புடைய செய்கைகளில், மட்டுமே மகிழ்வுறுவர்.

## சீவன் முத்தன் இயல்புகள்

முன்பு குறிப்பிட்ட, அரிதான சீவன் முத்த நிலை ஆசையற்ற ஆன்ம ஞானிக்கு முறைப்படி முதிர்வு பெற்று வரும். அவன் நிலை வருணிக்க முடியாததாக இருப்பினும் உலகத்தாரைப் போலவே புறத்தே அவன் காணப்படுவான். நல்லன தீயன ஆகிய பிழைகளால் வரும் இன்ப துன்பம் எவையும் அவனைப் பாதிக்க மாட்டா. கருமங்களின் பால் விருப்பப்பட்டு அவன் மனம் எதனாலும் கட்டுப்பட்டிருப்ப தில்லை. கிடைத்ததை அன்பாக அனுபவித்துச் சமனிலை உணர்வுடன் அவன் இருப்பான். அறிவு நெறிக்கு அயலான நுகர்ச்சிகளில் அவன் சிறிதளவும் கருத்துச் செலுத்துதல் கிடையாது.

நொடிப்பொழுதும் நீங்காமல் இன்பம் உடையனாகவும் உடலை அழித்துவிடும் கடுவினை (அதிக்கிரமம்) செய்யாமலும் சான்றோரிடம் வினாவுதலினால் வளர்ந்த இந்த வீட்டு நெறியை விசாரிப்பவன் பிறவியைத் தீர்க்கும் மெய்ஞ்ஞானம் பெற்றவன் ஆகிறான். அவன் மறுபிறப்புக்கு ஒரு தாயின் கருவில் புகுந்து தொல்லைப்படல் அடைய மாட்டான். சிறிதாகி விளங்கும் விடய போகத்தில் மயங்குகின்ற மனத்தை உடைய பாவியராய் மருள்கின்றவர்கள் தாயர் வயிற்றில் உருப்படாத ஒரு புழு என்றே கூறத் தகுவர்.

## விசாரணையின் அளவு

மிக உயர்ந்த பெரியோர் இல்லாத பொழுது-சாது சங்கம் கிட்டாத பொழுது - ஒருவன் தான் நன்முறையில் ஈட்டிய

பொருளை வைத்து உணவுக்கு வேண்டிய காரியங்களைச் செய்து கொண்டு வரவேண்டும். ஆன்மிக சுகம் எய்தும் வரை, குற்றமற்ற அமைதி மனநிலையில் நான்காம் நிலை (துரியம்) உண்டாகு மட்டும் - ஆன்ம ஞான நூல்கள் ஓதுதலையும் ஆன்மிக ஆய்வு செய்தலையும், நல்லமைதியையும் நன்னடத்தையையும் உயர்ந்த அறிவையும் சாதுக்கள் சங்கத்தையும் பேணிவர வேண்டும். நிகரற்ற ஆன்ம விசாரணையினால் தூய உறுதியான துரிய நிலை (நான்காம்) நிலை வந்து சேரும்.

## துரிய (நான்காம்) நிலை

பாவனைகள் (நினைப்புகள்) நீங்கிய துரியத்தில் இளைப்பாறுதல் பெற்று, பிறப்பு (சம்சாரம்) என்னும் கடல் கடந்து ஒருவன் மோட்சம் சேர்கிறான். அத்தகையவன் சீவத் தன்மை தீர்ந்து சிவமாயிருந்தாலும் இல்லறத்தில் இருந்தாலும், துறவியாக இருந்தாலும் விளங்குகின்ற சுருதி (மறை) சுமிருதி (ஒழுக்கவிதி நூல்)களின் பிரமையில் கட்டுப்பட்டாலும் அனைத்தையும் செய்தாலும் தவிர்ந்தாலும் அவற்றால் ஒரு கேடும் கிடையாது. இமயம் இல்லாத குறுக்கீடு, இடர்ப்பாடு இல்லாத-விரிந்த ஒரு சமுத்திரம் போல் ஆன்ம இயல்பில் இருப்பான்.

## விசாரணை முறை

சுருதி, யுக்தி, குருவின் சுவானுபவம் என்னும் முத் திறத்தோடு ஒத்திருக்குமேல் அது ஒரு குழந்தையின் கூற்றாக இருந்தாலும் அதில் உறுதி கொள்ளலாம். அவ்வாறு இல்லாத வார்த்தைகளைப் பிரம தேவன் சொன்னாலும் அதனைத் துரும்பு என்று தள்ளுவாயாக.

(காரணமில்லாத) பிரம்ம ஞானம் ஆனது எளிதில் உதயம் ஆதற் பொருட்டு, சொல்லப்பட்ட (காரணமுள்ள) உவமைகள் எல்லாம் ஒரோவழி (ஏகதேசம்) ஆனவை என்று கருதுவாயாக. உருவமற்ற உண்மை ஞானமானது பெயர் வடிவு உள்ள உவமைக்கு அண்டாது (அதனால் அது (உவமை) ஆய்வுக்கு ஆகாது) என்று சொல்லுவோர் கூற்று, கண்கூடான-கை கூடியதான - ஞானம் இல்லாத தனது பேத அறிவால்

சொல்லும் குதர்க்க புத்தியால் கெடுக்கும் முயற்சியாகும். இராமா, அவ் வகை நினைப்புக்குக் கருத்தைத் தந்து விடாதே.

## ஞானம் உண்டாதல்

நரம்பினின்று நாதம் எழுவது போல இனிய பொறுமை (சாந்தி) முதலிய நற்குணங்களில் ஆன்ம ஞானம் உதயமாகும். அந்த நற்குணங்களால் ஞானமும், ஞானத்தால் அந்த நற்குணங்களும் விளங்குவன ஆகும். இவ் இரண்டும் (நற்குணமும் ஞானமும்) தடாகமும் தாமரைப் பூவும் போல்வன.

சற் குணமும் ஞானமும் ஆகிய இவ் இரண்டையும் சமமாகப் பயின்று வரின் பிரம அடைவு வரும். வேறு வேறாக இவ் இரண்டையும் பயிற்சி செய்யின் பயன் ஒன்றுமில்லை. **உண்மையான கதைகளை இனி (கூறப் புகுவனவற்றை)க் கேட்பது அறம், பொருள், இன்பம் கீர்த்தி வாணாள் யாவற்றையும் கொடுக்கும். அது அன்றி மனத்தெளிவும் முத்தியும் கொடுக்கும்.**

# மூன்றாவது
# உற்பத்திப் பிரகரணம்*

## கருத்தமைதி

*விடுதலை அடைவதில் (முமுட்சு) அதிதீவிரன் ஆனான் இராமன். அதற்கு முன், சாதனம் மூன்றிலும் வளர்ச்சி பெற்றிருந்தான்.*

*ஆகவே நான்காவது ஆகிய விடுதலைககு மகுந்த நாட்டம் கொண்டிருந்தான். அதனால் வசிட்டர் அவனுக்கு அத்துவிதப் பொருளையும் கருவியான சுத்த வாசனையையும் அதற்கு உதவியான அமைதி முதலிய பண்புகளையும் எடுத்துரைத்தார்.*

*துரிய ஞானம் கைவரும் பொருட்டு, படைப்புக்கு முன் சத், சித், ஆனந்தம் ஆகப் பிரகாசிக்கிற பிரமத்தின் விளையாடல் நினைப்பின் (லீலா சங்கற்பத்தின்) பிரதி பலிப்பான சைதன்னியமே* (Caitanya : absolute consciousness) *சகத்து உற்பத்தி என்றும் அதன் விளக்கமே* (Manifestation) *சகத்தின் நிலை என்றும் அதன் அடக்கமே*

---

* பிரபஞ்சத்தின் தோற்றம் அல்லது 'நான்' என்பதன் தோற்றம் பற்றிய இயல்

The chapter treating of the origin of the universe or "I"

(absorption) சக சாந்தம் என்றும் இம் மூன்றிலும் ஒரு தன்மையாக விளங்கும். இருக்கை (அதிஷ்டானம்) ஆன சைதன்னியமே நிருவாண சுகம் (Nirvanic bliss) என்றும் வரும் நான்கு பிரகரணங்களால் சொல்லுகிறார். எல்லாம் பிரம மயம் என்பதே அவற்றின் உபதேசப் பொருள்.

ஒன்பது கதைகளால் நிறைந்த உற்பத்திப் பிரகரணத்தில் சைதன்னியத்தில் உண்டான சங்கற்பம். சைதன்னியமே என்பது தோன்ற முதலில் ஞானவிண்மகன் கதையை சைதன்னிய உருவமாகக் காட்டுகிறார்.

## 3:1 ஞான விண்மகன் கதை *

### ஆன்மாவே உலகம், சீவன் முதலியன

முத்தியை நயந்தோரின் (முமுட்சுகளின்) செய்கை முறையை நீ கடைப்பிடிக்குமாறு மொழிந்தோம்.

இனி, உலகங்கள் உண்டாகின்ற அக் காரணத்தை இனிது கேட்பாயாக.

சுவானுபூதி என்ற அனுபவப் பேற்றினைப் பொருந்தினதாயும் முன்னிலை (பிரத்தியட்சம்) என்று பல மதத்தாரிடம் பெயர் பெற்றதாயும் இருக்கின்ற உணர்வே (அபரோட்ச ஞானமே**) நம் சீவன். இச் சீவனைப் பிரம ஞானத்துடன் கூடஸ்தன் எனவும் கருத்தத்துவ ஈசுவரன்*** எனவும். முன்னிலைச் சிதாபாசன்**** எனவும் சொல்வார்கள்.

சீவன் எந்த அறிவினால் விளங்குகின்றதோ (பிரகாசிக்கின்றதோ) அந்த அறிவே ஆகாயம் முதலிய பொருள்களாக விளங்குகின்றது. பரவிய தண்ணீர், திரை நுரை

---

* The story of Akasaja (the son of Akasa)

** Aparoksha : of direct realization within himself.

*** கருத்தத்துவ ஈசுவரன் Iswara of agency;

**** முன்னிலை (visible); சிதாபாசன் distorted consciousness

என்று காணப் படுவதுபோல மேற்கூறிய சீவனே, தோன்றி அழியும் பல்வேறு சங்கற்பங்கள் (thoughts) விகற்பங்களால் (fancies) மேவிய மயக்கத்தினால் பூமி முதலிய அனைத்துப் பொருள்களாகப் பொலிந்தது.

*(ஆன்ம சங்கற்பமே சகம் போலத் தோற்றப் படுகின்றது என்பதாம்)*

படைப்புக்கு முன்னரே இருக்கும் அகாரணமான (causeless) சத்தா மாத்திரமே (Absolute Be-ness) படைக்க வேண்டும் என்ற தனது லீலா சக்தியினால் (sportive power of creation) பொருந்திய காரணத்தால், காணப்படும் புறப்பார்வையே நெருங்கிய பொருட் கூட்டங்களாய் இருக்கிற உலகமாய்த் தன்னுள் பரந்துள்ள ஞானத்தில் காற்றில் உள்ள சலன சக்தி போல் தங்கியிருக்கும்.

*(பரமப் பிரகாசமே சகத் ஆதலின் அதற்கு அதுவே காரணம் ஆனதாம்.)*

இரண்டற்றதும் (Non-dual) பரவியுள்ளதும் ஆன ஆன்ம ஞானத்தின் பல்வேறு வடிவங்கள் அல்லது கூறுகள் ஆக உள்ள எண்ணிறந்த திக்குகளும் காலமும் ஒரு பொருளிலிருந்து தான் தொடங்குகின்றன. பிரமத்தின் கற்பிதமான இந்தச் சகம் அந்த ஒரு பொருளை அன்றி வேறு ஒன்றையும் காரணமாகக் கொண்டிருக்கவில்லை என்று இதனால் அறிவாயாக.

## ஞானத்தினால் சகம் மறைதல்

இந்தச் சகத்தை ஆன்ம சைதன்னியமே இமைப்பினில் படைத்தது. அனுமானம் முதலிய அளவைகள் (பிரமாணங்கள்) எல்லாமும் அதற்கு (ஞானத்தை அறிவதற்கு) ஆன சாதனங்கள். 'விதம் உறு காட்சி மெய்ம்மை பந்தம்; அஃது இன்மை வீடாம்.' (பல விதமாக விளங்கும் முன்னிலையான - பிரத்தியட்சமாக உள்ள - பொருள்களின் உண்மையை நம்புவது பந்தம்; அதிலிருந்து விடுபடுவது மோட்சம்). காணப்படு பொருள்களின் ஈர்ப்பிலிருந்து நீ விடுபடுமாறு நாம் விளக்கிக் கூறுவோம்; ஆதலால் நன்கு கேட்பாயாக..

சுழுத்தி நிலையில் வருகின்ற கனவு கெடுவது போல,

காணப்பட்டனவாகிய சகங்கள் யாவும் கற்ப முடிவில் கெட, எண்ணத்தில் உண்டான அலைவுகளும் தோற்றமும் பெயரும் ஆகிய எல்லாம் இன்றி, ஆழ்ந்த தடையில்லாத (transcendent) அஞ்ஞான இருளும் விருத்தி ஞான (Vrithi or mental jnana) வெளிச்சமும் இல்லாமல் தானே தானா யிருக்கக் கூடிய ஒப்பற்ற தத்துவ ஞானம் மிஞ்சி யிருக்கும்.

(விருத்தி ஞானம் மனம் சார்ந்தது; சொரூப ஞானம் உள்ளுணர்வு அல்லது புத்தி சார்ந்தது.)

சொற்களால் எடுத்துரைக்கும் பொருட்டு மேலோர்கள் இட்ட, சத்தியம் - பிரமம் - ஆன்மா - பரம் (the supreme) முதலிய இத் தன்மையான பெயர்கள் தரித்த இவ் ஆன்மாவானது, அதிசயமான முறையில் தான் வேறு ஒன்று போல் திகழ்ந்து சீவன் என்று விளங்குகின்றது.

(ஆன்மாவானது, மகான்களால் விவரிக்கும் பொருட்டுப் பரியாயப் பெயர்களைப் பெற்றுத் தானே சீவனைப் போல் விளங்கும் என்பதாம்)

சீவன் என்கின்ற சொல்லும் அதன் பொருளுமான ஆன்மாவானது பாவனையான சங்கற்பத்தினால் பருத்து எழு மனம் ஆகின்றது.

## அது மனம் ஆதல்

உரைத்தற்கு அரிய பிரமத்தில் கடல் அலைபோல் உண்டாகித் தாவுகின்ற உள்ளமானது நினைந்தவாறு (தனது சங்கற்பப் படியே) உலகத்தை உண்டாக்கும்.

நினைக்கப்பட்ட மன(சங்கற்ப)த்தினாலே சகம் என்னும் இந்திரசாலமானது உண்டாயிருக்கும். 'ஆபரணம்' என்ற சொல்லுக்குப் பொருள் 'பொன்' என்பதன்றி அன்னியம் (வேறு ஆனது) இல்லை. பொன்னால் ஆபரணம் என்று சொல்ல வேண்டியதில்லை. அவ்வாறே உலகம் (சகம்) என்ற சொல்லுக்குப் பிரமம் என்பதன்றிப் பொருள் வேறு இல்லை.

ஓடுகின்ற கானல் ஆற்றில் தோன்றும் திரைகள் போல (அசத்தான-unreal) மனத்தில் உண்டாகாததாயிருந்தும் உண்டு போல் தோன்றுகின்ற இந்த ஞாலம் ஆனது, அல்லல் செய்கின்ற மோகம் என்றும் அவித்தை என்றும் மாயை

என்றும் சார்ந்திருக்கின்ற சம்சாரம் என்றும் அறிஞர்களால் சொல்லப்பட்டன.

(இல்லாத கானல் நீரில் அலை தோன்றுவது போல இல்லாத மனத்தினால் சகம் தோற்றுகின்றது என்பதாம்)

பந்தத்தின் இயல்பை நான் சொல்லுமாறு நீ கேட்டு அறிவாயானால் மேலாம் வீட்டு இயல்பை நன்கு அறிந்து கொள்வாய்.

"இந்தச் சகம் நீ நான் முதலாம் இவை எல்லாம் பந்தமதாம்; அந்தக் கருத்து நிற்பளவும் அரிதாம் முத்தி" (இந்த உலகத்தையும், நீ நான் முதலாகிய இந்தப் பேதங்களையும் உள்ளன என்பது பந்த உருவாம்; அச் சங்கற்பங்களான காட்சிகள் இருக்கும் மட்டும் மோட்சமானது அரியதாம்) வித்தினிடை அடங்கியிருக்கின்ற மரத்தைப் போல, காண்பவனிடத்தில் காண்பன எல்லாம் தோன்றாது அடங்கியிருக்கும்.

காரணமான விதையின் கருப்பத்தில் அதற்குள் இருந்த இலை பூ முதலிய வேறுபாடுகளின் படியே நெருங்கிய படைப்பின் ஆச்சரிய சக்தியானது( சமத்காரம்) கெடாமல் உண்டாயிருப்பது போல் ஞானாத்மா என்ற பொருளின் அகன்ற உதரத்தில்-கருப்பத்தில்-முளையாகி, முறையாகப் பொருந்திய உலகத்தின் பெயர் வடிவான எல்லாமும் நீங்கா இயல்பாய் நிறைந்திருக்கும்.

(வித்தில் மரம் இருத்தல் போல், காண்பவன்பால் காண்பொருள் அடங்கியிருக்கும் என்பதாம்.)

பக்குவமான கால தேசங்களில் விதை முளைக்கின்ற தன்மை போல், காணப்படுமவற்றைக் கருதும் கருத்தும் (சங்கற்பிக் கின்ற மனமும்) காண்பவனுக்குக் காண் பொருள்களாகத் தோன்றுகின்றன. காணப்படும் பொருள்கள் காண்பவனை அன்றி வேறல்ல. **ஞான ஆகாயத்து உதயமானவன் சரிதையினால்,** இருள் மயமான சக சிருட்டி (origin of the universe) உனக்கு எளிதில் விளங்கும்.

இக் கதையை நீ கேட்கக் கடவாய்.

## ஞான விண்மகன் கதை

மறையோர் குடியினன், பரந்த ஞானாகாசமே தான் உண்டாவதற்குக் காரணமாக ஞான விண்மகன் பிறந்தான்.

ஒழிவிலாத் தியானமும் (சமாதியும்) எல்லா உயிர்களுக்கும் அன்பும் நற்செயல்களும் (தருமமும்) உடையவனாகிய ஞான விண்மகன் நெடுங்காலம் உயிர் வாழ்ந்திருந்தான். அது கண்ட காலன் (Time) இந்த உலகத்தை விழுங்கும் நாம் இவனை விழுங்காதிருந்தமை எதனால்? எனது வலிமை, எல்லாவற்றையும் அழிக்க வல்லது. அது பாடாணத்தில் அழுந்துகின்ற வாள் முனை போல் மிகவும் மழுங்கிப் போயிற்று என எண்ணினான். அதனால் அவன் ஞான விண்மகனின் ஊரைக் கடிதில் (சீக்கிரமாக) சேர்ந்தான்.

"வினையின் முயல்வார் தம் கருமம் விடுவது உண்டோ?" (ஒரு தொழில் முயற்சி செய்பவர்கள் தமது தொழிலை விட்டு விடுவார்களோ?) என்று காலனானவன் மறையவனின் (விண்மகனின்) வீட்டுவாயிலில் புகுந்தான். புகும் அளவில் கொடிய ஊழிக்கனல் போல் ஓசையிடும் அந்த விண்மகனின் ஆன்மிகப் பெருமை என்னும் கொடிய தீ அவனைச் சுட்டது. இருப்பினும் அதை ஊடுருவிக் கொண்டு புகுந்து பார்த்து, பனைக்கு ஒப்பான தன் ஆயிரம் கைகளாலும் அவனைப் பற்றி இழுத்தான்; இழுக்க முடியவில்லை.

## யமனின் அறிவுரை

அந்த ஞான விண்மகன் (தெய்விக) சங்கற்பத்தையே வடிவான தன் அமிசம் போல் அசையாமல் இருக்க, வெல்ல இயலாமல் காலனானவன் அவ் விடத்தினின்று நீங்கி யமனிடத்திற் சென்று இங்கே நடந்ததை எல்லாம் சொன்னான். அதற்கு யமன் 'கன்மத்தால் உண்டான சகம் கன்மத்தினால் அன்றி நசியாது. நமக்கு உதவியான பொருள்கள் மரிக்கும்படி செய்வன முன் செய்த கருமங்களேயாம். அவற்றையே, கொல்வதற்குத் துணையாகக் கொண்டுபோ' என்று சொன்னான்.

(கன்மத்தினால் ஆன உடம்பு கன்மத்தினால் கெடும் என்பார். "புவனம் கருமத்தாலன்றிப் பொன்றாது" என்றார்.)

காலன் அதுகேட்டு அப் பிராமணன் முன்செய்த கருமங்களைத் தேடி, நதி ஓடை பூமண்டலத்தில் உள்ள திசைகள் என்று எவ்விடத்தும் அலைந்தான். அலைந்து திரிந்தும் அகப்படாத காரணத்தால் திரும்பி வந்தான்.

அறிவுள்ள யமனிடம் அதைத் தெரிவித்தான். அவன் நெடுநேரம் சிந்தித்துப் பின் சொன்னான்.

'மூல விசும்பில் பிறந்ததால் முடிவில்லாத அந்தப் பிராமணனும் ஞான ஆகாயம் தான்...'

(சஞ்சித வினை (தொல்பழவினை) காரணமாக உதியாமல் ஞானம் காரணமாக உதித்தலால் பூர்வ கன்மம் அகப்படவில்லை என்பதாம்)

'ஞான ஆகாயத்து உதித்த பிராமணன் கருமங்கள் செய்தும் காரணம் எதுவும் இல்லாமையினால் கருமங்களைச் செய்தவன் ஆகான். காரணமே இல்லையாயின் அவன் செய்கின்ற கருமங்களும் உளவோ? நீ நினைப்பதற்கு உரித்தான அவனது சஞ்சிதத்தால் (past karmas, in latency) விதிக்கப் பெற்ற மரணத்துக்கான கருமம் என்னும் சாதகம் உனக்கு இல்லை.'

என்று யமதருமன் சொல்ல, அவனை நண்ண முடியாது என்று மேன்மையான காலனானவன் மிகவும் வியந்து தனது இடத்திற்குச் சென்றான்.

இவ்வாறு சொல்லிய வசிட்ட முனிவரின் முகத்தைப் பார்த்து இராமன் உரைப்பான் :

நீங்கள் உரைத்த அந்த ஞான விண்மகன் தானே உண்டானவன் (சுயம்பு); விஞ்ஞானமே வடிவானவன், ஒன்றாக நிறைந்திருப்பவன் ஆன பிரமா என்று துணிந்தேன்.

இவ்வாறு அவன் சொல்லவும் தூய வசிட்ட முனி,

நாம் முன் சொன்னது பிரமாவையே; நாம் சொல்லிய கதையின் முறைமையை இராமா, நீ கேட்பாயாக.

(பிரமத்தில் உண்டான பிரமனையே ஒரு புருடனாக உருவகப் படுத்தினதாம்)

நாசத் தொழில் செய்கின்ற காலனானவன் யமனுடன் சொல்லும் ஞாயங்களை யாம் அறிந்தேம். மேலான மனுவினுடைய முடிவில் உலகம் எல்லாம் உண்டு எழுந்த, சோம்பல் இல்லாத காலனானவன் பிரமாவையும் செகுக்க முயன்ற அப் போதில் துயரமற்ற காலன் முகம் நோக்கி உயர்ந்த யமன் அங்கு இவை சொன்னான்.

(பிரமனது சொரூபத்தை உணராமல் கெடுக்க நினைந்தது என்பதாம்)

நிகர் இல்லாத பரம ஆகாயமே நிருமல வடிவாய் இருக்கின்ற எதிரற்ற பிரமாவை அழித்தற்கு என்று எண்ணும் எண்ணம் எளிதின் முடியுமோ? திகழும் வெளியே (ஆகாயமே) வடிவாய், செறிந்த பூத வடிவு இல்லாதவனாய் முன்பு சொன்ன சங்கற்ப புருடனைப் போல அழியாமல் அயனும் (பிரம தேவனும்) பொலிந்திருப்பான்.

ஞான விண் (சிதாகாசம்) ஆகியும் தனிமை ஆகியும் முதல் நடு முடிவு இல்லாத சுயம்பாக இருக்கின்ற பிரமமானது அடுத்திருக்கின்ற தனது சங்கற்ப வசத்தினால் பிரமாணம் ஆன உடல் உடையது போலவும் புருடனைப் போலவும் இது மெய்ம்மையினால் பிரகாசிக்கும். ஈனாத மலடியின் மகன் போல, அதற்கு உண்மையில் வடிவம் கிடையாது.

(தொடக்கம் நடு ஈறு இல்லாத சுயஞ் சைதன்னியமே தனது உல்லாச சக்தியினால் வடிவம் உள்ளது போலத் தோன்றினாலும் அது பிரமமே அன்றிப் பெயர் வடிவு அன்று என்பதாம்.)

இவ்வாறு காலனுக்கு (மிருத்துவுக்கு) யமன் சொன்னான்- என்று கூறிய வசிட்டரது முகம் நோக்கி★ 'ஆதிவாகிய உடம்பும் ஆதி பௌதிக உடம்பும் என்று பொருந்திய உடல்கள் உயிர்க்கெல்லாம் இரண்டு விதமாயிருக்க (பிரமாவுக்கு)ச் சூட்சும உடல் ஒன்றானதென்ன?' என்று இராமன் கேட்டான்.

பிரம ஒளியால் உண்டாகிய உலகம், பிறக்கும் உயிர்களுக்குக் காரணமாகப் பொருந்துகின்றதனால் உயிர் அனைத்திற்கும் பொருந்தும் உடல் இரண்டாகும். பிரம சொரூபத்தினை அல்லாமல் பயில் காரணம் வேறு இல்லாமையால் வேறாக உதியாத அயனுக்கு ஆதிவாகியம் மட்டும் ஓர் உடலாகப் பொருந்துகிறது.

(உயிர்களுக்குப் பிரமமும் உபாதான காரணம். ஆகையால்

---

★ ஆதிவாகியம் (Ativahika) என்பது, ஆதி பௌதிகம் ஆகிய பூதவுடலை விட்டுப் பிரிந்த பின் ஆன்மா வாழும் நுண் உடம்பு.

ஆதிவாகிய உடலும் உலகம் சக காரிய காரணம் ஆகையால் ஆதிபௌதிக உடலும் ஆகிய இரண்டாம். ஆனால் பிரமாவுக்குப் பிரமமே காரணம் ஆகையால் ஆதிவாகிய உடல் ஒன்றேயாம்)

உலகத்துக்குக் காரணம் ஆகிய அயனிடத்தில் சுயமாக உண்டாகிப் பரந்த படியால், அப்படிப் பரவிய உலகங்கள் யாவும் மனவடிவே என்று அன்புடன் உரைத்தார். வசிட்டர்.

அவரைப் பார்த்து, 'உலகம் என்னும் மாயையை விரித்த மகா மனத்தினது வடிவுதனை வகுத்துச் சொல்லுங்கள்' என்று இராமன் கேட்க, வசிட்டர் சொல்வார்.

## மனம் உலகைப் படைக்கிறது

அவித்தை நிரம்பியதாக, உருவமிலதாக, எங்கணும் சேர்ந்திருக்கின்ற தனித்த மனத்துக்குப் பேர் மாத்திரம் உண்டு. ஆகாயத்தைப் போன்றே உள்ளிலும் புறத்திலும் அதற்கு வடிவம் இல்லை. மெய் பொய் என்கின்ற பொருள்களின் தோற்றமே மனமாகும். தொடர்ந்த சங்கற்பமானது எங்கே உள்ளதோ தோன்றும் மனமும் அங்கே உள்ளது.

"மனத்தின் வடிவு சங்கற்பம்; மற்று அவ் இரண்டும் ஒன்றாகும்." (மனத்தினது படிவம் சங்கற்பமே யாம். இவ் விரண்டும் - மனம் சங்கற்பம் என்ற இரண்டும் - ஒன்றேயாம்). பொய் மோகம் மலம் பந்தம் அவித்தை மாயை தமம் (தமசு.) முதலிய கூட்டமான பெயர்கள் சங்கற்பத்துக்கு உரிய பெயர்களாம். இச் சங்கற்பம் நழுவுமாகில் (நசித்தால்) கனத்த (காண்போன் காணப்படு பொருள் என்ற) சகக் காட்சியும் நீங்கும். பிரம சொரூபமானது கதிர் விட்டு எறிக்கும். (பிரகாசிக்கும்)

(சங்கற்ப வடிவாகச் சட சித்துகளில் சஞ்சரிக்கின்ற மனத்துக்கு மோகம் முதலிய பெயர்கள் உண்டே தவிர உருவம் இன்று என்பதாம்.)

நிற்பன நடப்பன என்னும் (சராசரம் என்கின்ற) அனைத்தின் நிழல் புணர்ந்தும் ஆடாமல் வெறிது இருக்கும் கண்ணாடி எப்படியோ அப்படியே தானே விளங்கும் சைதன்னியம். கற்பனையான 'நீ' 'நான்' என்பன முதலாகக் காணப் பட்டனவாகிய வேற்றுமைகள் அனைத்தும் அடங்கிச்

*சிறிதளவும் மிச்சமின்றிக் காட்சி நசித்தால் அந்த நசிப்பே ஒப்பற்ற கைவல் லிய* (Kaivalya : liberation) *உறுதியாம்.*

*(சகம் முதலான வேற்றுமை எண்ணம் (பேத பாவனை) நீங்கிய விடத்தில் தானாய் விளங்கும் அனுபவமே சுயம் பிரகாசம் என்பதாம்)*

## மனம் அழிபடும் காலம்

*கனவு தரும் கனவு போல, காண்டற்கு உருவம் இல்லாத மனம், இல்லாத காட்சிப் பொருளை எல்லாம் காட்டும்; பூண்பதிலா (ஒன்றிலும் தரியாத) மனம் சலன சக்தியினால் பிரகாசிக்கும்; அசையும்; கலங்கும்; போகும் மீளும், வீணாகச் செருக்கு (களிப்பின்) மிகும், அகங்காரத்தை அடையும். மகாப் பிரளயம் மேவும் காலத்தில் ஆகாயம் முதலிய எல்லாப் பொருளும் ஒருங்கே அழிந்து செறியும் பூரணமான சாந்தமே மிச்சமாகும்.*

*அத்தமனம் (மறைவு) ஆகாத சுயஞ் சோதி என்னும் சூரியனாயும், அளவிலதாயும் சிறு துன்பமும் இல்லாததாயும் எவ்விடத்தும் என்றும் யாவுமாய் யாவும் செய்தும் யாவும் விடுபட்டதாயும் ஓங்கும் முதன்மையான* (primeval) *பரம்பொருள் ஒன்று உண்டு.*

*பகர்தற்கு அரிதாகவும், முத்தரால் சொல்லப்படுவதாகவும் பிரமம் முதலிய கற்பிதமாகிய பல பெயர்கள் பெற்றிருப்பது அது. சாங்கியர் ஆத்மா (புருடன்) என்பர்; சுத்த வேதாந்த ஞானிகள் பிரமம் என்பார்கள். குற்றமற்ற விஞ்ஞானிகள் விஞ்ஞான சொரூபம் என்பார்கள்; சூனியவாதிகள்* (atheists) *சூனியம்* (void) *என்பார்கள். இவ்வாறு உரைக்கப்படுவதும் அன்றி, திகழும் சூரியப் பிரகாசத்துக்கும் பிரகாசமா யிருந்து யாவற்றிற்கும் ஒளி கொடுத்து ஒளிரச் செய்து தானும் ஒளிர்ந்து திகழும்.*

*(சூனிய வாதமும் விஞ்ஞான வாதமும் பௌத்த மத பேதம் எனக் கொள்க)*

*உரை பகர்வோனாகவும் உசாவுவோன் (ஆராய்பவன்) ஆகவும் கேட்பவன் ஆகவும் காண்பவன் ஆகவும் உணர்பவன் ஆகவும் சிந்திப்பவன் ஆகவும் உலகில் உடம்பில் திடமுறப்*

பொருந்தியும் பொருந்தாததாயும் இருக்கின்ற பொருளினின்றும் (from this principle) சூரிய ஒளி போல அறிவொளி உண்டாகும். ஆகாயத்தில் பரவியிருக்கும் இந்த சித் ஒளி (light of consciousness), வாசனை நிறைந்த மனமே (manas full of vasanas) வேர் ஆகவும் கரணங்கள் மலர்கள் ஆகவும் அண்டங்களே காய்கள் ஆகவும் உதயமாகும் மாயை என்னும் கொடியை அசைக்கும் காற்றாகவும் புரை செய்கின்ற உடலாகிய செப்பிற்குள் மணியாய் இருக்கும் புரியட்டக உடலை (Puriyattaka body is the body composed of eight principles such as the organs of sense) அது (சித்) இயக்கும் (போக்குவரவைச் செய்விக்கும்).

## ஆன்மாவின் இயல்பு

சுத்த அறிவு ஆதலால் அது ஆகாய பாவனையால் நிறைந்த ஆகாயம் ஆகும். அவ்வாறே எப் பொருளையும் அது பாவனை செய்த (Contemplate) பொழுது அவ்வப் பொருள்கள் உள்ளனவாம். அந்த ஞானத்தில் மூவுலகமும் கானல் நீர் போல எப்போதும் தோன்றிக் கெடும். இவ்வளவையும் செய்தும் தான் இவ்வளவும் செய்யாமல் இருந்தபடி இருக்கும்.

நிருவிகற்பமான ஆன்மாவில் உலகம் தோன்றல் ஒடுங்கல் நேரடியாக உண்டாதல் இல்லை. பராபரமாம் அப் பொருளை வயங்கக் கண்டால் (பிரகாசிக்கத் தரிசித்தால்) பெரிய மனக் கட்டு அறும்; ஐயம் அறும் என்று பெரியோர் வசிட்டர் கூறினார்.

## எல்லாம் பிரமத்துள் புகுதல் எவ்வாறு?

இங்கே இராமன் ஒரு கேள்வி எழுப்பினான். 'ஒரு கடுகுக்கு உள்ளே மகா மேருவானது புகுந்தால் அல்லவா பிரமாண்ட மானது அணுவுக்கு அணுவான பிரமத்தில் அடங்கும்?'

அரிய தவத்தை உடைய வசிட்டர் சொல்லுவார் :

ஆன்ம ஞான நூல்களாலும் நல்லோர் இணக்கத்தாலும் திங்கள்களால் அன்றி நாள்களால் இந்த ஐயத்துக்கு விடை தெரிந்து விடும். பன்னூலின் சித்தாந்தமும் (நிச்சயமும்)

இதுவேயாம். இவ் அருத்தமுள்ள இக் கதையைச் சிந்தை செய்யில் நிட்டை (சமாதி) யோடும் பூரண ஞானத்தை விரிவாக உணர்ந்தோர்க்கு, சகமானது (மற்றவருக்கு இருக்க) இல்லாது ஒளிக்கும், அவர்கள் சீவன் முத்தி பதத்தை அடையலாம். இந்தச் சீவன் முத்தியே விதேக முத்தியாம்.

இவ்வாறு சொல்லிய வசிட்ட முனியை "உடல் இறந்த வீடும் (விதேக முத்தியும்) உடல் இருந்த வீடும் (சீவன் முத்தியும் நல்ல பழமையான நூல்களின் வழியில் யான் இயற்றச் சொல்வீராக" என்று கேட்ட இராமனுக்கு நன்மையுள்ள வசிட்டர் சொல்லுவார் :

## சீவன் முத்தர்கள்

வலிமையான பல செய்கைகளில் பயின்றும் (கூடியும்) சிதாகாயமானது பிரத்தியட்சமாய்க் கண்ணுக்குத் தோற்றாததான வகைமையை உடையவர்கள்; எப்போதும் இன்பம் (சதானந்தம்) பொருந்த வருகின்ற சீவன்முத்திப் பதத்தைப் பெற்றுயர்ந்த இயல்புடையவர்கள்.

மிகவும் வருகின்ற காமம் முதலியவைகளினால் உண்டாகின்ற விகாரம் அடைந்தும் விண் போல் மிகவும் தூயவர்கள்; அகம்பாவம் என்பதில்லாமல், செயல்கள் செய்தாலும் தவிர்ந்தாலும் அதில் அழுந்தாதவர்கள். உலக நெறிகளை (ஆசாரங்களை)ச் செய்தாலும் அன்னியர் போல் அதைப் பார்த்துக் குளிர்ந்த தன்மை சார்ந்தவர்கள்; திகழ்கின்ற மனமும் நினைவும் இருந்தும் சிறிதும் பற்றில்லாதவர்கள் சீவன் முத்தர்கள்.

(யாவும் கூடியும் கூடாமற் சித்தனா யிருப்பவனே சீவன் முத்தன் என்பதாம்.)

துன்பங்களில் மூழ்கிச் சுகங்களில் மிதவாத அறிவுநிலையே இயல்பாக உள்ளவர்கள்; அடைந்த சுழுத்தி அவத்தையில் நனவு (சாக்கிரம் - waking) ஆகி நனவில் அஃது (சுழுத்தி) இல்லாதிருக்கின்ற வாசனை யிறந்த ஞானத்தைப் பொருந்தினவர்கள்; மிக்க சமமாகி உலகில் வெருளாமல் (பயப்படாமல்) உலகினையும் வெருட்டிடா மகான்கள்; சம்சாரச் சிக்கற நற்சிந்தனையிருந்தும் சிந்தனை யில்லாதவர்கள் ஆகிய இவர்களே சீவன் முத்தர்களாம்

## விதேக முத்தி

*நிச்சயமாகிய இந்தச் சீவன்முத்திப் பதத்தை நீங்கி உடல் இறந்தால், நிறைந்த காற்று அசைவற்று ஆகாயமாயிருப்பது போல உடல் இல்லா முத்தி (விதேக முத்தி) பெறும். அதன் இயல்பானது தொலையாது மறைவு படாது தோன்றாது; நணித்து (சமீபம்) அன்று சேய்மையன்று, உலையாதது முடிவில்லாதது. நான் அன்று பிறனன்று (நாம் அறிந்த) ஒன்றுமன்று.*

*இருளும் அல்லாமல் ஒளியும் அல்லாமல் அலைவும் அல்லாமல் அளவு அல்லது பிரமாணமும் இல்லாமல், ஒரு குணமும் இல்லாமல் பொருந்தும் ஐம்பூதங்களும் பல பொருள்களும் அல்லாமல் நிறைந்திருக்கின்ற பூரண சொரூபமாகவும் உருவமில்லாமல் அருவமும் இல்லாமல் சத்(being)தும் அல்லாமல் ஒன்றாகவும் வருகின்ற அறிவோன்-அறிவு-அறியப்படுபொருள் (திரிபுடி: ஞாதுரு - ஞானம் -ஞேயம்) ஆகியவற்றின் நடுவில் தோன்றும் அதனை மறவாமல் நீ வரையறுத்துக் கொள்வாய்.*

## பிரம சொரூபம்

*"அத் தன்மையாகிய பர வடிவை (சிதானந்தமான பிரம சொரூபத்தை; conscious bliss) அறிவு நிறைவுற விரிவாய் அருள்வாய்" என்ற கேட்ட செவ்விய வள்ளலான இராமனுக்கு வசிட்ட முனி சொல்லுவார்.*

*மகா கற்பம் வந்தபோது எல்லா வகைப்பட்ட காரணங்களுக் கும் காரணமான பிரமம் மட்டுமே இலங்கும். புலனுகர் இன்பங்களை (விடயங்களை) வவ்வும் மனத்தொழில் (மனோவிருத்தியை) மாற்றி அகங்கார ஆன்மாவினின்றும் கெடுத்தால் பெயர் இறந்த பிரம உண்மையாகும்.*

*எதிரில் அறிகின்ற உலகத்தைப் பாராத சீவ அறிவை (சீவ சைதன்னியத்தை) அப் பிரமமாகச் சொல்லலாம்; பரவிய புலன் அனுபவித்தும் அனுபவியா மனத்தை அப் பிரமமாய்ச் சொல்லலாம். உண்டார்ன பொருளறிவும் (விடய ஞானமும்) சூரியன் முதலான ஒளியும் மனமும் காணப்படும் உலகும் ஆகிய இவற்றின் சர்வ சாட்சியாகிய அறிவை அப் பிரமமாகச்*

சொல்லலாம். மிகுந்த வினை (தொழில்) செய்யினும் கல் போல் இருக்கும் நிலையை அப் பிரமமாகச் சொல்லலாம்.

முடிவும் கனவும் அஞ்ஞானமும் (சடமும்) இல்லாத நீண்ட யோகத் துயிலான்து அதுவாம். மூன்றாகி நெருங்கிய அறிவானும் (ஞாதா) அறிவும் (ஞானம்) விடயமும் (ஞேயமும்) என்னும் மும்மையாகி (திரிபுடியாகி) எழுந்து ஒடுங்கும் இடம் அதுவேயாகும். பூதாகாயம் (composed of the elements) அல்லாததாயிருந்தும் ஞானாகாயமான நிலைமையானது அதுவாம். சித்தமும் புத்தியும் விரிந்த மனமும் ஆகிய இவை நீங்கி மரம் போலப் பெற்ற உள்ளுணர்வானது அப் பிரம சொரூபத்தை ஒக்கும்.

(அறிதுயிலும் திரிபுடியின் ஆதாரமும் ஞான ஆகாயமும் அந்தக் கரண ஞானமின்றிச் சுழுத்தி ஞானமுள்ள தாவர அறிவும் பிரம ஞானத்துக்கு உவமானமாகச் சொன்னதாம்.)

பிரமா, திருமால், உருத்திரன், சதாசிவன், இந்திரன். சூரியன் ஆகிய இவர்கள் உபசாந்தர்களாகின்ற காலத்தில் (absorbed during pralaya) மேன்மையில்லாத உபாதிகள் (base upathis or vehicles of matter etc) யாவையும் விடுபட்டுப் பயனில்லாத உலகம் என்கின்ற இச்சை விட்டு, ஞான மயமாகிய பிரம சொரூபமானது மேலான நிருவிகற்ப வடிவாய், எங்கும் நிறை சிவமாகி (ever blissful) ஒன்றாய் (அத்துவிதமாய்) நிற்கும்.

(சீவ ஈசுவர சகம் என்னும் வாசனைத் தொலைப்பே நிருவிகற்ப ஞான சிவ சொரூபம் என்பதாம்)

## 3:2 லீலை கதை

**சுருக்கம்**

சுயஞ் சைத்தன்னியனான (self-conscious) பரமாத்மாவே சீவ, ஈசுவர, சகம் ஆகத் தோற்றப்பட்டாலும் அவை அப் பிரமத்துக்குப் பின்னப்படாமையைக் காட்டி அந்தச் சைதன்னியத்து உல்லாசமாய் உண்டான மன-மாயையின். பலவாகிய செய்கைகளை அறிவிக்கவும் அம் மாயையை நீக்கும் பொருட்டும் **லீலை கதையை** ஆசிரியர் சொல்லுகிறார்.

## பதுமன் கதை

ஐயம் அறுத்து இளைப்பாறுமாறு ஒரு பழமையான கதையை இராமா, நீ கேட்பாயாக. பூமியில் சத்துவ குணம் முதிர்ந்து விவேகம் பெற்றவன்; விந்தையை-விசய லட்சுமியைப்-புயத்தில் அடைந்தவன் பதுமன் என்ற பெயர் உடைய அரசன் ஒருவன் இருந்தான். அவன் மனைவி அவன் சிந்தைக்கு இனிய குணத்தை உடைய 'லீலா' என்னும் பெயர் உடையவள்,

அவ் அரசனின் நிழல் போலவும் மனம் போலவும், பிரிவற்றவளாக இருந்தாள்.

## லீலை செயல்கள்

இவ்வாறு இருக்கையில் அவள் மனத்தில் ஒரு சிந்தனை மின்னியது. தன் நல்ல கணவன் மூப்பு இறப்பு இல்லாமல் நல்ல இளங் காளையாய் எந் நாளும் கூடிச் சுகிக்க என்ன உபாயம் என்று சிந்தித்தாள். அதன் பொருட்டு நான்மறை வல்ல பிராமணர்களிடம் ஆலோசித்தாள். அவர்களும் சொல்லத் தொடங்கினார்கள்.

'செபமும் தவமும் முதல் யாவையும் சித்தி நல்கும்; புவனங்களில் பொன்றுதல் போக்கரிது யார்க்கும்' (செபங்களும் (Japa : utterances of mantras) தவங்களும் Tapas-religious austerities) முதலிய அனைத்தும் சித்தியை (psychic powers)க் கொடுக்கும்; உலகங்களில் மரித்தலை யாவருக்கும் நீக்கல் கூடா) என்று அந்தணர்கள் சொல்ல, லீலை சிந்தித்தாள். 'நம் நாயகன் இறத்தற்கு முன் நாம் இறந்தால் நமக்கு ஒரு கவலையும் இன்றித் தற்பத வாழ்வு (நிருவாண சுகமானது) கை கூடலாகும்.'

என் நாயகன் முன்னே இறந்தால் அச் சீவாத்மாவை இந்த வீட்டில் வசிக்கும்படி செய்து அச் சீவன் என்னை உவந்து பார்க்க நிறையின்பம் எய்தியிருப்பேன். இந்நிலை நேரும் பொருட்டு, மறை தந்த வாணி (கலைமகள் : சரசுவதியின்) பாதங்களைத் துதித்து ஏத்துவன்'.

தன் மன்னனுக்கு உரையாமல் நல்ல மந்திரங்களிலும் நல்ல நூல்களிலும் வல்லமை உடைய பெரியோர் சொன்ன

வழியில் நின்று தேவரையும் அந்தணரையும் ஆராதித்து மூன்று பகலிரவுகள் உண்ணாமல் நான்காம் நாள் ஒரே முறை சிறிது உண்டாள். அதன் பின் இனிதான நிட்டையினில் (meditation) பத்து மாதங்கள் ஈடுபட்டாள்.

ஆகாயத்தில் தோன்றிய பூரண சந்திரனைப் போன்ற நிறமுடைய சரசுவதியானவள் மகிழ்ந்து தோன்றி 'லீலையே' நீ நாடியது என்ன? என்று கேட்டாள். 'நீண்ட பிறப்பாகிய நெருப்புக்கு நீங்காத அமுத (சந்திர)க் கதிரே, அகத் துன்பம் என்னும் இருட்டை அகற்றும் சூரியப் பிரகாசமே', என்று அவள் பாதத்தைத் துதித்து.'

"என் கணவன் இறந்தால் அந்தச் சீவன் இவ் வீட்டில் இருக்கவும் உன்னை நினைக்கும் போதில் என் முன்னே தோன்றவும் ஆன இரண்டு வரங்கள் அளிப்பாயாக" என்று லீலை கேட்க, நாமகளாகிய சரசுவதி அன்பொடு அளித்து மகிழ்ந்து தன் இருப்பிடம் திரும்பினாள்.

பட்சம் (பதினைந்து நாள்) திங்கள் பருவங்கள் (இருது; இரண்டு மாதம் கொண்டது) ஆகிய தேர்க்கால்கள் தாக்கிச் செறிந்த நாள்களாகிய மேற் பரப்புகளும், தொடர்ந்த ஆண்டு ஆகிய ஒப்பற்ற அச்சும் (axle) இமைப் போதாகிய அதன் நடுவும் (axle-holes) முதலான இவற்றையுடைய விரைந்து சுழலும் கால வன்தேர் (காலச் சக்கரமானது) வேகமாகச் செல்லவும்,

இன்பமானது எல்லையறும்படி லீலையானவள் இருந்த காலத்தில் அவள் நாயகன் சில நாளில் இறந்தனன். அன்னம் போன்ற லீலையானவள் துன்பம் (சோக அக்கினி) எரிக்கின்ற வெம்மை பொறுக்க மாட்டாமல் உயிர் துஞ்சும் முன்னால் அவள் முன்னிலையில் தோன்றாமல் வானத்தில் நின்று கொண்டு (லீலை கணவனின் உயிர் உடலை விட்டுப் போகுமுன்) சரசுவதி இந்த லீலையின் மோகத்தை நீக்கும் பொருட்டுச் சொன்னாள்.

"மாய்வுற்ற வேந்தனை மலரால் மூடிவை; பொருந்திய பூ வுலரும்; ஆனால் உடல் அழியாது. சீவன் நீங்காமல் பொன் மயமான அந்தப்புரத்தில் தங்கிவிடும். அரசனது தோளில் தோய்ந்து உன் துயர் தீர்வாயாக."

என்று அருளிச் சரசுவதி மறைந்தாள்.

சரசுவதி என்ற மௌனக் குரல் (voice of silence) சொன்ன வார்த்தைகளின் படி லீலை அரசனைப் பூவினால் மறைத்து வைத்தாள். பிரியாத உயிரை உடைய அவள் உள்ளத்தின் கண் சிந்திக்க உடனே வந்தாள் சரசுவதி. அவளை நோக்கி "என் அன்பனைப் பிரிந்து வாழ்வது கூடாது. அவனைச் சேர்ந்த இடத்தில் சீக்கிரத்தில் என்னைச் சேர்ப்பாய்" என்று லீலை சொன்னாள்.

அதற்குச் சரசுவதி "மனவானமும் (mental akasa) பூத வானமும் (elemental akasa) மாசறு ஞான வானமும் (Spiritual akasa - Cidakasa) எனப்படும் வானம் மூன்றில் முந்திய வானம் இரண்டும் அன்றி, மகத்தான சிதாகாசமானது (ஞான வானம்) காணப்பட்ட ஒரு பொருளில் அடைதலை விட்டு மிகவும் தெளிவாக அயலொன்றை யுற்றால் அப்போது ஞானவானமாம். (மத்திய கதமான சிதாகாயமாம்).

சங்கற்பத் தொகுதி ஒழிந்தால் சாந்தமாகவும் பரிசுத்தமாக வும் சகங்கள் அனைத்தும் விளங்குவதாகிய சிற்பிரகாசம் உதயம் ஆகும். இவ்விடத்தில் சிறிதளவும் காண்பன இல்லை. அவை பொய்யென அறிந்தால் அப்பொழுது அந்த ஞானத்தினால் சிதாகாயத்தை அடையலாம்.

நம் கிருபையால் அச் சிதாகாயத்தை அடையக் கடவாய்" என்று சரசுவதி அனுக்கிரகித்துச் செல்ல, லீலையானவள் பின்பு நிருவிகற்ப சமாதி அடைந்து, தாம் வசிக்கும் கூட்டை விட்டு நீங்கிய பறவைகளைப் போலத் தாவுகின்ற மனமானது களங்கமும் விருப்பமும் உள்ள கூட்டினை (உடம்பினை) விட்டு அக் கணத்தே நீங்கினாள்.

கெடாத ஞான ஆகாய மத்தியில் ஒரு மாநகர்க்கு, விருப்பமுள்ள காதலன் பதினாறு வயதுள்ள வீர இளவரசனாகி அரியணை மேல் வேந்தரும் நால்வகைப் படையும் மிகுந்த ஆசையை உடைய மகளிரும் போற்ற வீற்றிருக்கக் கண்டாள்.

தன் உயிர்க் கேள்வனை (நாயகனை) அந்த லீலை பார்த்துச் சபைக்குள் புகுந்தாள். மிகவும் வியந்தாள். சபையைச் சூழ்ந்திருக்கின்ற மேற்கு வாயிலில் அரசர்களும் கீழ் வாயிலில் முனிவரரும் மறைவல்லோரும் தென் வாயிலில் நாற்படையும் ஏனையோரும் இருக்கக் கண்டாள்.

அதன் பின் குன்றுகளும் ஊர்களும் நாடுகளும் நதித் திரளும் பல பொருள்களும் ஆகிய இவற்றைப் பார்த்து மின்னற் கொடி போன்ற லீலையானவள் திரும்பித் தனது அந்தப்புரத்திலுள்ள உடம்பிற் புகுந்து வெண்ணிறமான சரசுவதியை விருப்பினோடும் சிந்தித்தாள்.

வந்து உயர் ஆசனத்திலிருந்த சரசுவதியை வணங்கி "என் அன்பனுக்கு மரித்த பின் முன்போலவே பந்தமுள்ள மயக்க வடிவான, அம்மூர்த்த (Amurta : formless)மாகி இருக்கின்ற பிறப்புக்கு உற்றபடி எப்படி?' என்று லீலை கேட்டாள். அதற்குச் சரசுவதி உரைப்பாள். "முன் உயர்வான பிராமணப் படைப்பின் அரச மயக்க அளவே பதுமன் என்னும் வடிவமான இந்தச் சிருட்டி வேறாகத் தோற்றினது.

அவ் வண்ணமே உன் கணவனுக்கு இரண்டாவதான விடுதர சனனம் உண்டாயிற்று. இதன் வரன் முறையைச் சொல்வேன். தெரிந்துகொள். களங்கம் அற்ற நின்மலமான சிதாகாயத்தில் ஒரு பக்கத்தில் மாயா மண்டபம் (Mayavic dome) ஒன்று உண்டு. அதனைச் செப்பரிய ஆகாயம் என்னும் மயிலிறகுத் திரை மூடியிருக்கும். மகா மேரு என்கின்ற பொற்றூணில் இந்திரன் முதலிய உலக பாலர்களுடைய காரிகையர் (இந்திராணி) முதலியவர்கள்) சித்திரப் பதுமைகள் பதிந்திருக்கும்

அந்த மண்டபத்தின் ஒரு பக்கத்தில் பிருதிவி (பூமி) என்னும் புற்றுகளும் அங்கே வசிக்கின்ற ஏழு மலைகள் என்னும் ஓடுகளும் உண்டாம். ஆசையுள்ள மரீசி முதலிய மைந்தர் சூழ இருக்கின்ற தூய மறையவனாகிய பிரமா உறைகின்ற இடம் அது. பெருமை பொருந்திய ஆகாய வழியில் உலாவும் அழகிய விமானத்தையுடைய தேவ கீடங்களின் (புழுக்களின்) கூட்டங்களைப் பொருந்தும் அருகான ஆகாயத்தில் வசிக்கும் சித்தர் குழாம் ஆகிய கொதுகு (கொசு) இறைகின்ற (சப்திக்கின்ற) 'கும்'மென்ற அரவம் பொருந்தும்.

வானவர் தானவர் என்னும் தீய மக்களின் செருக்குற்ற விளையாட்டினால் உண்டாகும் ஓசை கேட்டுக் கொண்டிருக்கும். இப்படியான ஒரு மாயா மண்டபத்தில் அவ்விடத்து ஒரு பக்கத்தில் ஒரு திக்கு ஆகிய (ஒரு) வீட்டினுள் பெருமை மிகுந்த மலை என்னும் ஒரு பூமியில் மலைகளாலும்

ஆறுகளாலும் வனங்களாலும் மேலான வளப்பம் நிறைந்த கிரிக் கிராமம் என்னும் ஒரு நகரம் உண்டு. அது இடமாக வாழ்வோன் வெங்கனலோன், வேதியர்களில் மிகவும் மேன்மையானவன் -

அழகு பொருள் வயது அடக்கம் செய்கை கல்வி ஆகியவற்றில் வசிட்டனுக்குச் சமமானவன், ஆனால் அந்த வசிட்டன் என்று சொல்லும்படியான குணம் பொருந்திய (மெய்) அறிவை உடையவனல்லன். பெயரால் இந்தப் பிராமணனையும் வசிட்டன் என்று சொல்லலாம்.

அவன் பதம் பணியும் அருந்ததிக்கு ஒப்பாள், அந்த அருந்ததியின் அறிவை உடையவள் அல்லள். பொருந்திய பெயரால் உயர்ந்த அருந்ததி ஆவாள். இவன் மனைவி பூலோகத்து அருந்ததி. உண்மை அருந்ததி தேவலோகத்து இருந்தாள். இந்த இரு பெண்டிர்க்கும் நிகராக மூவுலகில் எவரும் இல்லை.

இந்த அருந்ததி கணவன் என்று சொன்ன இவ் வசிட்டன் அம் மலையில் விளங்குகின்ற தாழ்வரையில் (சாரலில்) முன் ஒரு நாள் இருந்தான். அங்கு வேட்டையின் பொருட்டு முடிமன்னன் ஒருவன் சேனைகளுடன் வந்தான். அந்த மன்னனைப் பார்த்த வசிட்டன் யோசித்தான் : "ஆச்சரியம், ஆச்சரியம்! அரசர்கள் வாழ்வு மிகவும் நன்றாக இருக்கிறது. அழகான உலகத்துக்கு அரசராய்ப், படை சூழ்ந்து வர இரண்டு கவரி (சாமரங்களை) வீச எக் காலத்தில் நாம் சுகம் அடைவோம்?

வெற்றிக் கொடிகள் நெருங்க, குடைநிழலில் வாழ்ந்து, மாதர்களின் குங்குமக் கொங்கைளில் மூழ்கிக் குளிப்பது எந்நாள்? முடிவில்லாத அப் பயன் என்று பெறுவோம்?" என்று நிறைந்த ஆசை அன்று முதல் (அரசனைக் கண்ட நாள் முதல்) முளைத்த நெஞ்சனாகக் கெடாத தனது வினைகளை வழக்கம் போல் நடத்தி வந்தான். மூப்பு, தாமரை சேர்ந்த பனி போல் அவனை அடைந்தது. அவன் மனைவி உன்னை (லீலையை)ப் போல் என் பாதம் பணிந்து அவனது சீவன் அவ் வீட்டினின்று நீங்காத வரத்தை விரும்பிக் கேட்டாள். அவ்வாறே தந்தேன். அந்தணன் வசிட்டனும் 'அரசபோகம்' என்ற ஆசையோடும் இறப்புற்றான்.

அவன் (அந்தணன் வசிட்டன்) மனை ஆகாயத்தில் சீவ ஆகாய வடிவமாக இருந்தான். முன் ஞான ஆகாய வடிவமாக இருந்த வசிட்டனே, வளருகின்ற முன்னாளில் அரச செல்வத்தில் அழுந்திய மனச் சங்கற்பத்தால் அரசனாய்ப் பொருந்தியிருந்தான். அவன் மனைவி தன் கணவன் சவம் ஆனதைக் கண்டு சோர்ந்து தன் மனத்தில் இரண்டு விதமாக நினைத்துத் தனது பருவுடலை (தூல சரீரத்தை)ச் சமானமாகிய கணவனுடன் சவமாகத் தள்ளி உயர் சூக்கும உடலோடு அந்த நாயகனுடன் போய்ச் சேர்ந்தாள்.

அந்தப் பிராமணனின் மக்கள் மனை பூமி அடவிகள் மலைகள் எல்லாம் அவ்விடத்தில் (பருவுடல் நிலையில் : in the gross state) இருக்க அவன் உயிர் பிரிந்து எட்டு நாள்கள் ஆயின. அந்த உயிர் அந்த வீட்டில் சிதாகாய இயல்பில் இருந்தது. உன் முற்பிறப்பில், இந்த அரசன் பிராமணனாக - உன் கணவனாக - இருந்தான். நீ அவன் மனைவியாக, அருந்ததி என்ற பெயரோடு இருந்தாய். அந்த மடமயில் நீ தான்.

புதுமையான சக்கரவாள இணை போலவும் பூமியிற் சேர்ந்த பார்வதி பரமேசுவரரைப் போலவும் மிகவும் நல்ல மனைவி கணவராக இருவரும் இவ்விடத்தில் ஆட்சி செய்பவர் நீங்கள், அந்த அருந்ததி வசிட்டரே.

ஆதலால் மதிநுதலாய் (லீலையே), முன் பிராமணப் பிறப்பின் அரசனாக நினைத்த மயக்கத்தைச் சொன்னோம். அவ்வாறே இந்தப் பதுமன் படைப்பு மயக்க மாத்திரமே. மூன்றாம் பிறப்பாக விடூரதப் பிறப்பு தண்ணீரில் பிரதி பலிக்கும் ஆகாயம் போல்வது அது. அது உனக்கு நன்றாகத் தோற்றியது என்று உலகத் தாயான சரசுவதி சொன்னாள்.

(முன் வசிட்ட மயக்கே பதுமனாகவும் அப் பதும மயக்கே விடூரதனாகவும் ஆனதே அன்றி, எதார்த்தமாய் இவர்களுக்கு ஒரு வடிவமும் இல்லை என்பதாம்.)

இந்த உரை கேட்ட அளவில், லீலை வினவினாள்.

இறைவியே, நீ பொய் இயம்பினை இஃது எப்படிப் பொருந்தும்? அந்தணன் வீட்டில் வசிக்கின்ற சீவன் எங்கேயோ இருக்கிறது. அன்னியமாய் (பிரிந்து) இருந்த

*நாங்கள் சேர்ந்தது எங்கே? முன் பொருந்திய அந்த வேறுலகத்தில் இருப்போர் அந்த வேறு உலகின் மலைகள் பத்துத் திசைகள் முழுவதும் கூடி வந்து இனிமையாக இவ் விடத்தில் நாங்கள் இருக்கிற வீட்டுக்குள் பொருந்தும் வழி எவ்விதம்?*

*மதர்த்த அயிராவதம் (இந்திரனின் யானை) கடுகின் ஒரு பக்கத்தில் கட்டுப் படுமோ? வட மேரு வந்து ஒரு தாமரை விதைக்குள் நுழைந்திருந்து ஒரு வண்டின் குஞ்சினால் (சிறு வண்டினால்) மிகவும் நெரியுமா? சிங்கம் அனேகம் பயந்து ஓர் அணுவுக்குள் நுழையுமோ? நீ சொன்ன சொற்கள் இவ்வாறே ஒன்றுக்கும் பொருந்தா" என்றாள் லீலை.*

*அதற்கு இறைவி (சரசுவதி) சொல்லுவாள்; நான் பொய் சொல்லவில்லை. இதன் உண்மையைச் சொல்லக் கேட்பாய். உன்னைப் போல்வார் ஈசுவர நியதியை மெய்யாகக் கொள்வதே அல்லாமல் மீற மாட்டார்கள். பிராமணனுடைய சீவனானனது அவன் ஊரிலுள்ள வீட்டில் பார்க்கப்படாமல்* (invisible) *உறைகின்றது. இந் நாடும் இப் பதும அரசாங்கமும் ஞானாகாய வடிவமேயாம். இவை அனைத்தையும் அந்தச் சிதாகாச வடிவான அவ் வசிட்டனே மகிழ்ந்து மன ஆகாயத்தில் பார்த்தான்.*

*பழைமையாகிய அந்த வசிட்ட நினைவு (அல்லது படைப்பு) உங்களுக்குத் தோற்றாமல் வேறு ஒன்றாக (பதுமன் படைப்பாக)த் தோற்றும். விழிப்பு நிலை* (Jagrat)*யின் பல வகை நிகழ்ச்சிகள் கனவு நிலையில் தோன்றுவதில்லை. வசிட்ட நிலையில் நினைவுகள் தோன்றாமல் இப் பதும நிலையும் அதன் நினைவுகளும் விஞ்சித் தோற்றும், தானாகிய சத்தினால் விளங்கும் முற்கூறிய வியாபகமான ஞான ஆகாயத்தில் ஒரு தனித்த பக்கத்தில் (மன சங்கற்பத்தில்) நினைவில், கண்ணாடியில் அடுத்த நிழல் விளங்குவது போல், கடினமாயிருக்கின்ற இவ் வுலகமானது தோற்றும்.*

*(சத்தா மாத்திரமாக விளங்கும் சைதன்னியத்தின் ஒரோவழி நினைவே (ஏகதேச ஸ்பூரணமே) உலகம் முதலிய யாவுமாம்)*

*ஒளி உருவாய்ப் பொருந்தும் உலகங்கள் அனைத்தும் தெளிந்த பரமாணுவாகிய ஞான சொரூபத்தில்* (Jnana

Reality) ஒளி பெற உள்ளுக்குள் (latent) செறிந்திருக்கும். ஆதலால் முற்கூறிய பிராமணன் இருந்த பூமி முதலானவையும் ஞானத்துள்ளே தோன்றும். வெளிபெற (பிரத்தியட்சமாக) இதனைத் தெரிந்து கொள்வாய் என்று சொன்னாள் வாணி சரசுவதி.

'அவ் வேதியன் எட்டாம் பகலில் (நாளில்) இறந்தான் என்று சொன்னாய்; அது எங்களுக்கு மிகப் பல வருடங்களாகச் சென்றது. அது எதனால்?' என்று லீலை கேட்டாள். அதற்கு இறைவி சொல்வாள்.

முன் சொன்ன சித்து விலாசமாய் (a play or mode of consciousness) விளங்கிய தேசம் எல்லாம் பரவியிருப்பது அன்று; ஆகவே உண்மை அன்று. அவ்வாறே தான் காலமும். சிறிதும் பரந்து கிடக்கவில்லை. மாயா விகற்பம் இல்லாத சிற்சுடர் (ஞானப் பிரகாசமானது) தோன்றுதல் மாத்திரம் அன்றிக் கால தேசத்தின் அளவு வேறு இல்லை. பொருந்திய பொய்யான மரணத்தினால் ஒரு கணம் மெய்ம் மறந்திட்ட சீவன் பிரிந்து போனது. முந்திய உடல் நினைப்பு (சரீர பாவனை) மறந்து இப் பிறப்பிற் பொருந்திய பாவனையை அடையும்.

இவ் விடத்தில் இது நம்மைத் தாங்குகிறது, இதனால் மிகவும் தாங்கப்படுகிறது, இது பருக்கின்ற நம் உடல்; இவன் நம் தந்தை; இறப்பது இத்தனை வருடத்தில்; இது இங்கு ஓங்குகின்ற நம் சுற்றம்; இது இன்பமாய் உறைகின்ற இடம் - என்று தேங்குகின்ற பொய்யாகிய மரண மூர்ச்சையின் தன்மை (fatal trance of such false conception) தெளிந்த பின் சீவன் சிந்திக்கும்.

ஆதலால் முற்பிறப்பு மறைபட்டு இப் பிறப்பு அறியப்பட்டது'' என்று சரசுவதி சொன்னாள். "நீ அருள, ஆச்சரியம், ஆச்சரியம், பூரணமாகத் தெளிந்தேன். என் விருப்பம் தீருமாறு இவ் வசிட்டர் முதலியோர் வசிக்கும் இடத்தைக் காட்டுவாயாக" என்று லீலை உரைக்க, வேத நாயகியான சரசுவதி சொல்லுவாள்;

அதைக் காண்பதற்கு வினை வடிவமான இந்தப் பருவுடலம் தடையாகும்.

இந்த யாக்கையை மறந்து வேறு அறிவதற்று இலங்கும் சிற்சுடராகியும் மெய்யாகியும் இருக்கின்ற அந்த நல்லறிவே (ஆனந்த போதமே) வடிவாகி, மாயாமலத்தை நீக்குவையாயின் நீ அவ்விடத்தைப் பார்த்தல் கூடும். தந்தமக்கு ஓருருவம் பிரமத்தை அன்றி வேறு இல்லாத உலகங்களாக, தங்கமே பல ஆபரணங்களாக வந்த வகையைப் போல உன் மோகம் நீக்கப்பட்ட பிறகு உணரலாம்.

மெய்யறிவை அடைதற்குச் சுத்த வாசனைகள் அன்றி உலக ஆசைகள் துணை போகா மாட்டா. உலகப் பொருள்களின் மேலுள்ள ஆசையினின்றும் நீ விடுதலை பெறவில்லை. ஆகவே நீ ஞானம் அடைதல் இயலாது. என் போன்றோர் எளிதில் தூய பிரமத்தில் புக முடியும். உன் போன்றோர்க்குத் தொடரும் மனவடிவாக வைத்த சூக்கும மெய் (சரீரம்) ஆசை நிரம்பியிருத்த லால் (மிகுந்த பாவனையினால்) பருவுடலை உண்டாக்குகிறது.

பனிக் கட்டியானது வெய்யவன் கதிரால் கரைந்து நீராதல் போல உன் மெய்ஞ்ஞானத்தைக் குறித்துப் பார்ப்பதினாலும் வாசனையை விடுதலினாலும் ஆதி பௌதிக உடம்பை (gross body) விட்டுத் திட்டமாகிய சூக்கும் மெய் (ஆதிவாகிய உடல்) நிலையாக நிற்கும். இது சீவன் முத்தி நிலையாம். அப்பொழுது பூரண அறிவு மட்டுமே நிறைந்திருக்கும். உனது இந்த உடலை அந்த மட்டும் நிறுத்தி ஆதிவாகிய (சூக்கும) உடலால் முந்தின பிறப்பைக் காண்பாய்.

என்று இவ்வாறு உரைத்த வாணியை 'அத் திறன் வர முயற்சி செய்யும் முறை என்ன?' என்று லீலையானவள் கேட்க ஆன்மிக நூல்களைக் கற்றல் கேட்டலும் (சிரவணம்) உசாவுதலும் (மனனம் : contemplation) நிறைந்த சிந்தையும் (நிதித் தியாசனம்; reflection from all points) அந்தப் பழமையான பொருட் பொருட்டாகி (நிட்டையாய்) நின்ற இன்பமும் உதாரமும் (சகலத் தியாகமும்) நிராசையும் நிறைந்து நீண்ட உலகம் என்பது ஒன்றுமில்லை என்று வேத நூல் நெறியினால் யுக்தியாய் சாதகரானோர் அனுபவமாய் அறிவார்கள்.

நான் இது என்னும் சகங்கள் இந்தப் படைப்பாதியில் உண்டாகாத படியினால் எப்பொழுதும் இல்லவே இல்லை

என்று தெளிந்த ஞானமும் காண்பவன் காண்பொருள் அற்று, திகழும் ஞானத்தால் விருப்பு வெறுப்பு முதலிய பகைகள் நீங்கி விட இன்பமும் வந்தடையும் என்று இவை பயிற்சியாகவே தொடர்வார்கள், பயிற்சியாளர்கள் (பிரம சாதகர்கள்).

காண்பொருள் இல்லாத அறிவே சைதன்னியமும் (ஞானமும்) மேல் பெறும் பேறுமாய் (ஆத்ம லாபமுமாய்) நினைத்து அந்தப் பிரம நிச்சயத்தைப் (certainty of Brahman) பயிற்சி செய்வதே தூய ஞானம் என்று அந்த இரவில் பேசின் சரசுவதியும் லீலையும் தத்தம் உடல் தடையின்றிச் சொரூப சமாதியிற் பொருந்தி அசைவற இருந்தார்கள்.

முன்பு உள்ள ஞான உடம்பில் பிரகாசித்த சரசுவதியும் தற்போது ஞான உடம்பு பெற்ற லீலையும் பத்து அங்குல அளவு மேலே எழுந்தார்கள். பிறகு உயர்ந்த விண்ணில் நெடுந் தூரம் சென்றார்கள். ஊழிக் காலத்து நெடுங்கடல் போன்ற வானத்திற் புகுந்து பின்வருவன கண்டார்கள்.

மட்டிலாததாக, தெளிந்து (transparent) மென்மையதாக, தென்றற் காற்றின் இன்பம் முட்டில்லாததாக (தடையற்றதாக) இருக்கின்ற சிதாகாயத்தில் மனவேகத்தினும் முடுகி (வேகமாக) அலைகின்ற சித்தர்கணம் நிறைந்து. எட்டுத் திசைகளிலும் அரக்கரும் பிசாசரும் கணக்கற்று நாய் போல், காகம் போல், முகம் உடைய யோகினிகள் வரிசையாக ஆகாயத்தில் சுழன்று,

களிப்புள்ள ஆடலையுடைய இடாகினித் திரள்களும் (Dakin : the elementals) கடுங் காற்றினால் திரிகின்ற வெண்மையான கங்கையும், சுவரில்லாத வீட்டிற் பொருந்தி வீணையின் பாடலில் தெளிகின்ற நாரத தும்புரு கானங்களும் எழுதப்பட்ட சித்திரத்தினைப் போலச் சத்தமில்லாமல் பொழிகின்ற கற்பாந்த மேகங்களும் மகளிரும் கூட்டங்களும் உண்டாகி,

எல்லையில்லாத யோசனை (பதின்கடிகை) தூரங்களில் பல இடங்களுக்கு, சில எவர்க்கும் அடையக் கூடாத, பாடாணத்துக்கு ஒப்பாக மிகவும் இறுகித் திரண்டிருக்கின்ற மிகுந்த கரிய இருளை உடையதாக, சில சீக்கிரமாகச் செல்லுகிற தேரை உடைய இரவியும் நெருப்பும் போல

ஒளி உடையதாக இருந்தனவாகிய அவற்றில் பற்பல இடந்தோறும் தொடர்ந்து,

கொதுகின் (கொசுவின்) பெருங்கூட்டங்கள் அத்திக் கனியிடத்தில் குமுறுவது (சப்திப்பது) போல எங்கும் பிரமன் உண்டாக்கிய உயிர்கள் எல்லாம் சேர்ந்திருக்கும் குணமுள்ள மூன்று உலகங்களை உடைய சமானமில்லாத ஆகாயத்தைக் கடந்தார்கள். திரும்பவும் ஒரு பூமியைச் சேரச் சிந்தித்து, பிரமாண்டத்தைக் கடந்து வசிட்டன் இருந்த உலகத்தில் கிரிக் கிராமம் என்ற ஊரை அடைந்தார்கள்.

ஏவலாளரும் உறவினரும் புத்திரரும் துன்பமாய் வெதும்பும் அந்தப் பிராமணனது வீட்டினுள் புகுந்தவர்கள் அவர்களுக்குக் கண்ணில் படாமல், சத்திய சங்கற்பத்தை அடைந்த லீலையானவள், வீட்டினுள்ளோர் எங்களைப் பார்க்கக் கடவார்கள் என்று சங்கற்பம் செய்தாள்

பூமகளும் மலைமகளும் போன்றிருந்த லீலை சரசுவதி ஆகியோரை வன தேவதை போன்றிருக்கிறார்கள் என்று அங்கிருந்தோர் தரிசித்துப் பூசித்தார்கள். மூத்த மகன் பார்த்து "எங்கள் தாய் தந்தையர் மரிக்க நாங்கள் அடைந்திருக்கின்ற துயரத்தை ஒழிப்பீர்களாக. மேலானவர்களை எதிர்ந்தோருக்கு (தரிசித்தவர்களுக்கு)க் கிடையாத பயன் ஒன்று உண்டோ? பேரறிவை உடையவர்களே" என்று சொல்ல ஒளி விளங்கும் லீலையானவள் அவர்கள் தலை தடவித் துயரத்தை நீக்கினாள்.

சரசுவதி லீலை ஆகிய இருவரும் அவ்விடத்தில் மறைந்தார்கள். 'உலகின் உண்மைத் தன்மையை இவ் வண்ணமாகக் கருதியது பார்த்து முடித்தோம். மேலும் உனது கருத்து யாது' என்று சரசுவதி கேட்டாள். 'மருள் சமாதியில் பார்த்த அரசவையில் உள்ளவர்கள் என்னைக் காணாத வகையும் இந்த அழகிய வீட்டிலுள்ளோர் என்னைப் பார்த்த வகையும் என்ன?' என்று தெய்விக லீலை கேட்டாள்.

ஞானப் பயிற்சியினால் அல்லாமல் இந்த உலகின் இருமை (துவிதம்) ஒருமை (அத்துவிதம்) ஆகாது. நான் என்னும் பாவனையைப் பிரியாமல் ஞானத்தை அடைந்த படியால் உண்மையான (அல்லது தானாக வருகின்ற) சங்கற்பமானது உனக்கு உண்டாக வில்லை. ஆதலால் அரச சபையில்

உள்ளவர்கள் உன்னைப் பார்க்க முடியவில்லை. இப்பொழுது நான் என்னும் பாவனையிறந்த அறிவை (சொரூப ஞானத்தை) உணர்தலினால் பேதமற நீ சங்கற்பிக்க இப் புத்திரர் முதலானோர் பார்த்தார்கள் என்று சரசுவதி சொன்னாள்.

அதன் பின் லீலை பெருமகிழ்ச்சியோடு சொன்னாள் :

சரசுவதியே, உன் அருளால் என் முற்பிறப்புகள் யாவையும் வெட்ட வெளியாக அறிந்தேன். முக் குணத்தால் எழும் பாவங்கள் அனைத்தும் கழுவப் பெற்றேன். ஒரு பிரமத்தினின்றும் வேறு உருவமாய் எண்ணூறு உடல்கள் பல வகையில் எடுத்தேன். மாயா விகற்பத்தால் (the modifications of maya) உண்டான பல உலகங்களில் தாமரை மலர் மேல் உறை வண்டாகச் சஞ்சரித்தேன். வித்தியாதர மகளாகவும் வாசனையின் தீமையால் மனித வடிவும் ஆனேன்.

மாயா விகற்பத்தின் வேறு ஓர் உலகில் அடுத்தடுத்த பிறவிகளில் இந்திராணியாக, தழை உடுக்கும் வேடப் பெண்ணாக, வலையை அறுத்த பறவையாகவும் சவுராஷ்டிர தேசத்து அரசனாகவும் கொசுகு ஆகவும் பிறந்து இவை முதலான பல பிறவிகளில் சுழன்று சோர்ந்து, சீறுகின்ற கடல் அலையில் அலைகின்ற துரும்பு போல மாயையிலே மேலும் கீழுமாகக் கலங்கின என்னை முத்திக் கரையில் ஏற்றுவித்தாய் என்று லீலை புகழ்ந்து உரைத்தாள். பின் அவர்கள் இருவரும் விண்ணில் எழுந்து சென்றார்கள்.

யோக நெறியால் ஆகாயத்தில் சென்று பதுமனிடம் சேர்ந்து, அவனது சவ வுடல் கண்டு, அதன் பின் அப்பால் ஏகி, இப் பதுமனின் இரண்டாம் பிறப்பாகிய விடூரத அரசனை அடையவும் அவ் அரசன் மேல் எதிர்ந்து வந்த கடுமையான போர் உடையவனாய் ஒரு வேல் வேந்தன் (சிந்து தேச அரசன்) அமர் தொடங்கி மிகவும் மோதினான். ஆகாயத்திலிருந்து மயில் அனைய சரசுவதி, லீலை ஆகியோர் நோக்கினர். இரு படையும் மலைந்தன.

மட்டில்லா (அளவின்றி) இருவர் படைகளும் எமன் நடுங்கும் படியாக வெம்போர் பொருதும் காலத்தில் விடூரதனின் பெரும்படை எட்டில் ஒரு பங்காகக் குறைந்தது. இறந்தவர் பிணக் குன்றால் மறைந்தானோ போரைக் கண்டு பயந்தானோ என்னுமாறு வெய்யவன் (சூரியன்) போய்

மறைந்தான். இருள் நிறைந்தது. இரு படையும் தணந்து (பிரிந்து) போயின.

பகை அரசன் படை நீங்க, மரியாத சிறு படையோடு மனம் முறிந்து திரும்பித் தளர்வை உடைய விடூரத மன்னன் மேன் மாடியில் துயின்றான். அப்பொழுது சரசுவதி லீலையும் அவ்விடம் வர நகை (பிரகாசம்) பொருந்த நிலவு போன்ற இவர்களின் ஒளியால் இளைப்பாறி, தாமரைக் கண் விழித்து எழுந்து புகழ் இறைஞ்சி, முன்னே இருந்த சரசுவதி லீலையைப் பூசித்தான்.

இவனது நல்ல குலப் பரம்பரையை லீலைக்குச் சொல்லும்படி நினைத்துச் சரசுவதியானவள் அவன் (அரசனின்) அருகே துயிலுகின்ற அமைச்சன் விழிக்கக் கடவனாக என்று எண்ணினாள். அவன் அப்போதே தன்னைக் கவர்ந்திருக்கும் துயில் விட்டு எழுந்திருந்து வணங்கப், பார்த்த சரசுவதி அவனைக் கருணை கூர்ந்து, இப் பூமிக்கு அரசாகிய இவன் குலத்தின் பூர்வ சரித்திரத்தைப் புகல்க என்று சொன்னாள். அதற்கு அமைச்சன் இவற்றைச் சொல்லத் தொடங்கினான்.

மன்னவரில் மதிக்கப்பட்ட வைவசுத மனுவின் (manu vaivasvata: The manu of this manvantra or Round) வமிசத்தில் அரசனாகிய கும்பரதனானவன் (Kumbharata or Kundaratha) மகன், மன்னன் மன்னனாகிய பத்திரரதன். அவன் அகில ரதனைப் பெற்றான். இவன் பேரிரதனைப் (பிரகத் ரதனை) பெற்றான். இவன் சிந்து ரதனைப் பெற்றான். அவன் மகன் சைல ரதன். அவ் அரசனின் மகன் காமரதன்.

இவன் மகன் மகாரதன். இவன் மகன் விண்டுரதன். இவன் குமாரன் போர் மிகந்த மனோரதன். இவன் பெற்ற விடூரதன் இராசாதிராசனாம். இவர்க்குத் தாய் சுமுத்திரை (Sumitra). பத்து வயதில் இவர்க்கு அரசைக் கொடுத்து மனம் அடங்கிய தந்தை துறந்து தவ வனம் சென்றார். இவர் செங்கோல் நெறியில் பூமிபாலனம் செய்தார்,

என்று மந்திரி சொன்ன மாத்திரத்தில் இராசாவை, நின் முதற் பிறவியை ஞானக் கண்ணினால் எளிதாகத் தெரிந்து கொள்ளக்கடவாய் என்று அன்புடன் தன் கையால் அவ் அரசனது தலையை நாமகள் (சரசுவதி) தன் கையினால்

தொட்டருளினாள். தன் பகையாகிய மனத்தில் இருக்கின்ற மாயா இருள் நீங்கி லீலையுடன் விளையாடி வாழ்கின்ற பதும அரசனாகத் தன்னைக் கண்டான். இன்பமுற வியப்புற்றான். 'மா மாயையானது இருந்த விதம் என்னே' என்றான்.

தாயராகிய இவர்களால் மாயையைத் தெரிந்தேன் என்று சிந்தித்து அவர்களின் பாதத்தைத் தலைமேல் சூடிப், போன பிறப்பின் யாக்கை நீங்கி. நாள் ஒன்றாகவும் இவ்வுடலில் புகுந்த பின்பு அதிகமான எழுபது வயது நடந்தபடியால் நடந்த எல்லாம் தெரிந்தேன். மாயம் இது என் கொல்! என்று மன்னவன் கேட்டான்.

கருணையே வடிவாயுள்ள வாணி (சரசுவதி) சொல்வாள்.

இறப்பு என்கின்ற பெரிய மூர்ச்சை (மயக்கம்) வந்த பின்பு அப்பொழுது அவ்விடத்தில் தானே, பிறப்பு என்னும் மகா மோகம் ஆனது மிகவும் உண்டாயிருக்கும். விண்ணைப் போல் நிறைந்து தூய்தான செய்தொழில் (கன்மம்) ஆகிய மயக்கமே காண்கின்றதான பொருந்த நெருங்கிய எழுபது ஆண்டு உனக்கு நீங்கினது என்பதை நீ உணர்ந்து பார்ப்பாய்.

ஒரு முகுர்த்த (நாற்பத்து எட்டு நிமிட) நேரத்தில் அனேக காலம் வருகின்ற கனவை ஒக்கும் நீங்கிய வாணாள். அது மாயையின் விகற்பத்தினால் நனவில் பற்பல விதமாகப் பரந்து தோன்றும். உண்மை உரைத்தால் உனக்குப் பிறப்பு அல்லது இறப்பு என்பது எப்போதும் கிடையாது. மெய்யறிவே உனக்குச் சொரூபம். முடிவிலாத பரமபதத்தவன் நீ. உலகங்கள் யாவையும் பார்த்தும் நீ அவை ஒன்றையும் பார்க்கவில்லை.

எல்லாமாம் இயல்பினால் உனது அறிவினால் உன்னிடத்தில் (ஆன்ம சொரூபத்தில்) இருந்து பிரகாசிக்கிறாய். பேசத் தெரியாத குழந்தைகளைத் தொட்டிற் பருவத்திற் பிடித்த பேயானது சுடலையில் நீங்குகின்ற தொன்மை போல, பொல்லாத மூடர்களுக்குச் சகமானது உறுதியாய் (சத்தியமாய்)த் தோற்றும். பொன்னை அறியாதவர்கள் அது பொன் அன்று ஆபரணம் என்ற சொல்லுவார்கள். அது போலத் தற்பரத்தை (சொரூப திருஷ்டி : Spiritual vision)க் காணாதவர்கள் அகிலம் என்பார்கள்.

யான் எனது என்னும் அகங்காரம் முதலாகக் காண்கின்ற உலகங்கள் எல்லாம் நீண்ட கனவாம். உலகத்தில் தோன்றும் இப்படியான பொருள்களும் கனவிற் காண்கின்ற பொருள் களாம் என்று உணர்வாய். அனைத்திலும் கூடி, வினையில் நிறைவாய் மகத்தாய், பரிசுத்தமாய், பரம ஆகாயமே இருக்கும்.

எல்லாம் ஆகியும் முழுது உடையதாயும் சத்திகள் (potencies) எல்லாம் இருக்கின்ற மூர்த்தி (Reality) தானே பழுதிலாது எவ்விடத்து எப்படித் தோன்றுமோ அவ்விடத்து அப்படியே தோற்றும். குற்றமற்ற உண்மை ஞான நிலையை லீலையின் பொருட்டு நாம் உபதேசிக்க நீ அடைந்தாய். கெடாத தத்துவத்துடன் (truth) தெளிந்தனை. நாங்கள் ஏகுகிறோம்'' என்று சரசுவதி நவின்றாள்.

இவ் அனுபவத்தைப் போதிக்கக் கேட்ட அரசன் விடூரதன், என்னை உதவி கருதி அடைந்தோரும் வேண்டியதைப் பெறுவார்கள். புதுமையான சிந்தாமணியை ஒத்த உங்களைப் பணிந்து புகழ்ந்தவனாகிய நான் அடைய வேண்டியது அடைதல் புதுமையோ? முன் பதும உடலை நான் அடைவது ஏன் என்று கேட்க, இந்தப் போரில் நீ மரிப்பாய், மரித்தால் அவ் உடலில் புகுவை என்ற கலைமாது அருளலும் மேல் வீட்டில் வந்து ஒருவன் சொல்லத் தொடங்கினான் :

''அம்பு மழை சொரிந்து வருகின்ற நிறைந்த சேனைக் கடலானது எங்கும் அடர்ந்து நிற்க, வெம்மையான கனற் கொழுந்தால் (அக்கினிச் சுவாலையினால்) 'அந் நகரம் சாம்பராய் வேகின்றது. இப் புதுமை காணவில்லையோ, இகல் வேந்தே!'' என்று அவன் சொல்லும் சமயத்தில் பகைவர் படையானது மூன்று உலகங்களும் நடுங்கும்படி கருச்சிக்கின்ற ஓசையைச் செவி முழுக்கக் கேட்டான் அரசன்.

பகைவரின் சேனையின் முழக்கமும் உலைந்து அலறும் நகரத்தின் ஒலியும் இடி போல முட்டி எழ, வடவாக்கினியைப் போல முழங்க அனலின் புகை எங்கும் மூடிக் கொள்ளக் கண்களும் செவியும் கெட்டன. கிளர் நகரம் அழிந்தது. இந்தக் கேடு அனைத்தையும் திட்டமுற லீலையும் சரசுவதியும் அரசனும் மந்திரியும் தெளிவாகக் கண்டார்கள்.

யுத்தத்தில் வீரமுள்ள அரசன் மனைவியானவள் பிரமித்து

நடுக்கமுற்று வந்தாள். அவளுடன் வந்த தோழி 'மன்னா, மாளிகை மகளிர் யாவரையும் பெருகிய செல்வங்களையும் எதிரிகள் கொள்ளையிட்டார்கள்' என்று சொல்லக் கேட்ட விடூரத மன்னன், 'என் பக்கத்திலுள்ள தேவியானவள் உங்கள் அடைக்கலம்' என்று போருக்குப் போனான்.

கண்ணாடியில் எதிரிட்ட தனது சாயை போல வந்த (விடூரதன்) மனைவியாகிய லீலையை, (பதுமன் மனைவியான) அந்த லீலையானவள் ஆச்சரியம் அடைந்து பார்த்து, அருங்கலை மாதாகிய சரசுவதியை நோக்கி, 'புதிது இது! நானே இவ் விடத்தில் வந்திருக்கின்ற உண்மை என்ன' என்ற கேட்டவுடன் மதி (சந்திர) நிற வாணி (சரசுவதி) அந்த மயக்கத்தை நீக்கிச் சொல்லத் தொடங்கினாள்.

உன் கணவனாகிய பதுமன் உன்னிடத்துக் கொண்ட அன்பினால் உன்னைப் பிரியாமல் வாழ்தற்கு மரண காலத்தில் நினைத்தான். அந் நினைவின் படியே அவ் விடத்தில் உன்னைப் பெற்றான். துன்ப மிகுந்த மரணத்தில் யாவர்க்கும் எண்ணியது கிடைக்கும். தன் முன்னிருந்ததன்றிக் கண்ணாடியில் வேறு தோன்றுமோ?

மரணமும் பிறப்பும் மூர்ச்சையும் (மனமயக்கும்) நனாவும் (சாக்கிரம்) கனாவும் (சொப்பனம்) சுழுத்தியும் (dreamless state) ஆகிய இவை அனைத்தும் ஒன்றினுள் ஒன்று இல்லாத படியால் (ஒன்றுக்கு ஒன்று காரணம் இல்லை அல்லது வேறு காரணம்) இல்லை. என்பது உள்ளது என்பது களங்கமுற்ற பிரமையின் அளவே, ஆகவே அளவின்றி வளருகின்றது. குற்றமற்ற அனுபவங்களானவை இரு வகை, அவற்றைக் கேட்பாய்.

முன் அனுபவத்துக்குத் தகுந்த முறையாகச் சில உண்டாயிருக்கும். பின்புள்ள புதுமைத்தாகிய பேதமாகச் சில உண்டாயிருக்கும். உனது வடிவம் உனது ஆசாரம் உன் குலம் உன் நடை (ஒழுக்கம்) என்னும்படி இந்த லீலையானவள் எதிர் நிழல் போலப் பேதமில்லாது இருந்தாள்.

அரசனின் நினைவினால் இவள் உன்னைப் போலவே உண்டானாள். விரவும் இந்தப் போரில் இறந்து விடூரதனானவன் பதுமன் என்கின்ற அரசனாவான் என்று

சொல்லிய சரசுவதியின் வாக்கியத்தைக் கேட்டுப் புகழ்ந்த புதிய லீலையானவள் பணிந்து இது சொல்லத் தொடங்கினாள்:

பண்டு நான் பூசித்த சரசுவதி போல் இருக்கின்ற நீயே, பகைவனால் என் கணவன் இறந்தால் எவ்விடத்தில் அவன் வசிப்பனோ அதைக் கண்டு நான் அவ்விடத்தில் இந்த உடம்போடு போய் வாழும்படியான தடையில்லாத வரத்தை எனக்கு அருள்வாயாக! என்று கேட்க 'ஈந்தனம்' என்று சொன்ன சரசுவதியைப் பார்த்துப் பழைய லீலை சொல்லுவாள் :

விளங்கிய என்னுடைய பழைய பௌதிக உடலோடு செல்லாமல் இருந்து வேறான ஆதிவாகிய உடலைப் பொருந்த உயர்ந்த மறுவுலகிலும் மேலான கிரிக் கிராமத்திலும் நான் நீங்கின விதம் என்ன என்று கேட்க, ஆரணத்து அன்னை (வேதத் தாய்) சரசுவதி சொல்லுவாள்.

(எனக்குச் செல்லக் கூடாது என்னும் தூல சரீரம் இவளுக்கு எப்படிச் செல்லும் என்பதாம்)

ஒருவருக்கும் நான் (காரணமின்றி) ஒன்றும் கொடுப்பதில்லை. 'உணர்வின் வண்ணமே உயிர்கள் எய்தும்' (நினைவின் படியே சீவர்கள் அடைகிறார்கள்) நீ முன்னம் நினைத்து ஞானத்தை விரும்பினை. விரும்பிய ஞானதிருட்டியைக் கொடுத்தேன். மிகுந்த ஆசையினால் இந்தப் பெண் - உன் நிழல் - விரும்பிய படி வேறான இவ் வரத்தைக் கொடுத்தேன். 'இருதயத்திலே நினைந்தது எய்திடும் எமது பார்வையால் யார்க்கும்' (மனத்தில் கருதினது எமது கருணைப் பார்வையால் யாவருக்கும் கிடைக்கும்) என்று சரசுவதி சொன்னாள்.

(ஆன்மாக்களின் பாவனைப்படி ஈசுவரன் கூட்டுவிக்கும் என்பதாம்)

திறல் உடைய விடூரத மன்னன் சினம் மிகுந்தவனாகத் தேரில் ஏறினான். சேனையோடு போர்க்களம் புகுந்து யமபுரிக்குச் செல்கின்ற வழி நெருக்கமாம் படி எதிரிகள் எல்லாம் மடிய மோதினான். இறப்பான் என்று எண்ணி அன்பு மாறாத லீலைகள் சரசுவதியின் பாதத்தைத் துதித்து இவ்வாறு கேட்டார்கள் : "அன்னையே, வீரத்தன்மை

மிகுந்திருந்தும் உன் கருணையிருந்தும் எம் அரசன் இப் போரில் மாளுமோ?''

கல்வியை உடைய விடூரதன் பர கதியை விரும்பியதால் இரண்டற்ற பரம பதத்தைக் கலந்து விடும்படி ஆயினான். எதிர்த்து வந்த இச் சிந்து அரசன் என்பவன் தன் வல்லமையால் இவனை வெல்ல வேண்டும் என்று என்னை இறைஞ்சினான். நியமித்தபடியே வென்று அவன் அரசன் ஆவன் என்று சொல்லும் சமயத்தில் விடியல் தோன்றவும் அதிரும்படி போர் செய்து மேல் நெருங்கிய வெம்மையாகிய யுத்த களத்தில் இரண்டு பக்கத்திலும் படைகள் யாவும் அழிந்தன.

(அவரவர் பாவனையே காரணம் என்பதாம்)

சிந்து என்னும் பெயரையுடைய அரசனும் திறல் உள்ள விடூரதனாகிய செல்வ வேந்தனும் சிலை (வில்)கள் ஏந்தினர். சந்திரனும் சூரியனும் திக்குகளும் வானமும் விடப்பட்ட அம்புகளால் மூடப்பெற்றன. முன் எதிர்க்கின்ற வெப்பமான பாணங்களின் திரள் எரிந்து தீ முடுகி யுக முடிவைப் போலிருக்கும், அளவில் தேரை நடத்தும் சாரதியும் தேரும் வில்லும் அற்று உயர் விடூரதன் தனியன் ஆயினான்.

பிறை நெடுஞ்சரம் (அர்த்த சந்திரபாணத்தால்) வச்சிர கவசம் சிதறி விழும்படி பிளந்து மெய்யெல்லாம் பிளந்து சிதறும் அளவில் வலிமை நீங்கிப் பூமியில் சாய்ந்தான் விடூரதன். அவனைப் பார்த்து, சரசுவதியிடம் புதிய லீலை என் நாயகன் உயிர் பிரியும் எல்லை அடைந்தான். 'இவனை அடைய யான் செல்ல அருள்' என்று சொன்னாள். இவ் அன்னை (சரசுவதி) அனுக்கிரகித்தாள். அந்த லீலையும் விண்ணில் நொய்தாகி (இலேசாகி) ஏகினாள்.

('ஈசுவர அனுக் கிரகத்தால் தூல சரீரம் அணுத்துவமானது' என்பார் 'நொய்தாகி' என்றார்).

மேக மண்டலத்தைக் கடந்து வாயு மண்டலத்தைக் கடந்து வெம்மையான சூரிய மண்டலத்தைக் கடந்து அருகான நட்சத்திர மண்டலத்தைக் கடந்து மேலே சத்திய உலகம் தேவ உலகங்களைக் கடந்து, பொருந்தும் இவ் அண்டத்தைக் கிழித்துக் கொண்டு (நீர் முதலிய ஏழ் மறைப்புகளை -

திரைகளை) ஊடுருவும் அளவும் முடிவும் அற்றதாம் உண்மை ஞான விண்ணை (தத்துவ சிதாகாயத்தை) விரைவில் அடைந்தாள்.

(ஏழ் ஆவரணமாவன : புனல் அக்கினி வாயு ஆகாயம் அகங்காரத்துவம், மதகத்துவம், பிரகிருதி என்பன.

அளவில்லாத காலம் வேகமாகக் கருடன் பறந்தாலும் கடக்கக் கூடாததாகவும் அத்திக் காடு காய்த்திருப்பன போலவும் உதித்தனவாகிய அளவற்ற பிரமாண்டங்கள், ஒன்றை ஒன்று பார்க்கக் கூடாததாகவும் இருக்கின்ற அவ் அண்டங்களுக்குள் பெரிதாக ஆவரண (மறைப்பு) பேதமானது அருகில் வளர்ந்து கொண்டிருக்கின்ற அண்டம் ஒன்றில் தற்பதம் (ஞானா காயத்தைக்) கடந்து போய்ப் பதும அரசனது சவம் கிடந்த அந்தப்புரத்தை அடைந்தனள்.

(தேவியின் அருளால் பதுமன் இடம் சேர்ந்தாள் புதிய லீலை)

இசை எழுப்பும் வண்டுகள் நிறைந்த மலர்களால் மறைக்கப் பட்ட இச் சவ உடலாகிய பூபாலனே எம் கணவன், கருணையுள்ள சரசுவதியால் எப்படியோ, முன்னமே இங்கு வந்து சேர்ந்தோம் என்று நன்றாகச் சிந்தித்து வெண் சாமரம் வீசிக் கொண்டு அவ்விடத்தில் தன் நாயகனுடைய ஒரு பக்கத்தில் அப் புதிய லீலை இருந்தாள். அதன் பின் நின்மல ஞானியான விறல் விடூரத அரசன் பொருந்திய சீவனானது ஆகாயத்திற் சென்றது.

ஞான நோக்கினரான லீலை, சரசுவதி என்னும் இருவரும் அவ் விடூரத சீவனைப் பார்த்து, விண்ணிற் சென்று பின் வருகின்ற சிறந்த மாதர்களைத் தான் அறிந்திடாமல் நீங்கின சீவனானது நகரத்தில் சென்று பதுமச் சவம் இருந்த அந்தப்புரத்தை அடைந்திட, உடன் சென்ற மாதர் இருவரும் புதிய லீலையை விரும்பிப் பார்த்தார்கள்.

பொன்னாற் செய்த மண்டபத்தில் பொருந்திய விடூரதன் சீவனைத் தடுத்து, மீண்டும் மேற்புக விடாமல் சரசுவதி தடுத்தாள்.

பழைய லீலையானவள் தனது முந்திய (ஆதி பௌதிக)

உடலைத் தேடினாள் அது காணப்படவில்லை. அது என்ன ஆனது என்று அவள் சரசுவதியிடம் கேட்டாள் :

நீ மண்டு சிந்தை போய் நிறை சமாதி அடைய, கீழே விழுந்த உன் உடலைப் பார்த்து அது இறந்து பட்டது என்று எண்ணிக் கொண்டு அமைச்சர்கள் நெருப்பில் தகனம் பண்ணினார்கள். இவ் ஆதிவாகிக உடலோடு நீ இப் பூமியின் கண் இருந்தால் முன் மரித்த லீலை தேவலோகத்திலிருந்து உடம்போடு வந்தாள் என்று யாவரும் வியப்பார்கள்.

ஆதிவாகிக உடலோடு இருந்து வாசனையை நீக்கிவிட்டபடியால் பருவுடலாகிய ஆகிபௌதிக உடலை நீ தள்ள வேண்டுவது தக்கதே என்று இந்த லீலைக்குச் சொன்னாள் சரசுவதி. அந்தப் புதிய லீலையானவள் இப்போது நம்மைக் காண்பாளாக என்ற வாக்கின் செல்வி (சரசுவதி) உள்ளத்தில் நினைந்தாள். அவ்வளவில் தெரியாதிருந்தவர்கள் கண்ணுக்குத் தெரிந்தனர். அது கண்ட புதிய லீலை தான் முன் இழந்து தற்போது காணப் பெற்ற செல்வங்கள் என்பதாகக் கருதி அத் தேவிகளின் பாதங்களைப் பணிந்து இறைஞ்சினாள்.

(பிரமப் பயிற்சி முதிர்ச்சியால் ஆதிவாகிக யாக்கை பெற்றவர்களுக்கு ஆதிபௌதிக யாக்கை மறையும் என்பதாம்)

ஞான சொரூபியாகிய சரசுவதியும் பழைய லீலையும் புதிய லீலையும் கூடியிருந்த இடத்தில் சாதி மென் மலரானது வாசனையை விட்டது போலச் சரசுவதியானவள் விடூரதன் சீவனுக்கு இட்டிருந்த தடையை விட்டு விடவும் பிராணரூபமாய் மூக்கினுட் சென்று உலர்ந்த மெய்யெல்லாம் பரந்து உலாவலும் குளிர்ச்சியாகி இரத்தம் உண்டாகிக் கண் விழித்து மரித்த அரசன் எழுந்தான்.

இங்கு நின்றிருப்பவர்கள் யார் என்று அப் பதும அரசன் கேட்டான். அங்கிருந்த பழைய லீலையானவள் அரசனை வணங்கி 'நான் உனக்கு மனைவி. என் வடிவத்தைப் போல நீ மனத்தில் எண்ணலால் நீ மகிழ வந்துளாள் இந்த மங்கை (புதிய லீலை). இவ் விடத்திருப்பவள் பரிசுத்தமாகிய சரசுவதி என்று தெரியச் சொன்னாள்.

இப்படி லீலை சொன்ன மாத்திரத்தில் சரசுவதி பாதத்தில் வணங்கிய பதும வேந்தனைச் சரசுவதியானவள் தன் அழகிய கைகளை அவன் தலைமேல் வைத்து, நீ தேவிமாரொடும்

*சிறந்த வாழ்வும் புகழும் செல்வமும் வளரவும் 'வையகம் பொலிக தீதெலாம் போக' எங்கணும் நிகழும் (விளங்கும்) மேன்மையோர் நிறையவும் நீடு வாழ்க என அருளி (நிமல வாணி) தன் இடத்திற்கு மேவினாள்.*

*'வாணி (சரசுவதி) வாழி, நாமங்கை வாழி, சொன்மாது வாழ்தி' என்று இனிமையாக வாழ்த்தி ஆதி மன்னனாகிய பதும அரசன் தேவிமார்களும் எண்பதினாயிரம் வருடம் அரசு செய்த பின் எழு வகையான பிறப்புகளை இப்போதே துடைத்து வாணி முன் இயம்பிய சீவன் முத்திப் பதத்துடன் பூமியிலிருந்து பின் ஊழி பெயரினும் சிறிதும் பெயராத விதேக முத்தியான வீட்டினை (மோட்சத்தை) அடைந்தார்கள்.*

*(சுத்த வாசனையோடு சீவன் முத்தர்களாயிருந்து பின் வாசனாட்சயமான விதேக முத்தியைப் பெற்றதாம்)*

❑

## 3:3 கற்கடி கதை*

**சுருக்கம் :**

*சைதன்னிய (consciousness) உல்லாசமாய் (விளை யாட்டாக)த் தோற்றின பிரபஞ்சம், தெய்விகப் பார்வையால் (சைதன்னிய திருஷ்டியால்) அழியும் பொருட்டு, அந்தப் பிரபஞ்சம் மாயா விசித்திரம் என்பதை முழுமையாக முன்பு அறிவித்தார் ஆசிரியர். அதற்கு இடமான சைதன்னிய திருஷ்டி (divine vision) நேர்முகம் ஆகும் பொருட்டு அதன் விளையாட்டைக் கற்கடி கதையில் நிரூபிக்கிறார் அவர்.*

**கருத்து**

*காண்பன யாவும் உண்மை (காட்சி : திரிசியம்) என்கின்ற குற்றம் அற, சொல்லிய லீலையின் கதையினால் அற்பமாகிய உலகம் என்னும் தோற்றம் உடையதாய், சத்து சித்து ஆனந்தமே வடிவாய்ப் பிரகாசிக்கும் பிரமமே உள்ளது*

* The story of Karkati

என்று அறிந்து, கெடுதற்கு உரித்தான உலகம் என்கின்ற பெருஞ்சுமையை ஒருங்கே நீக்குவாய்.

(சகத்து பிரமாணிகம் அன்று; அதுவாக விளங்கும் ஞானானந்தமே பிரமாணிகம் என்பதாம்)

அந்தப் பிரமத்துக்கு ஒப்பாகியும் உரைப்பதற்கு அரிதாகியும் அகன்று (வியாபித்து) நிறைந்து ஆழ்ந்து (transcendant) நின்மலமாக, சத்தை அறிந்தோரும் அதன் இயல்பு சொல்லக் கூடாததாகியும் உபசாந்தமாகியும் நிலையுதலாக (steady) அலையற்ற கடல் போல, காற்றில்லா விளக்குப் போலத் திகழ்கின்ற பிரமப் பிரகாசமே முடிவில்லாத மேலான சீவனாம்.

(பிரமப் பிரகாசமான அபேத ஞானமே சீவன் என்பதாம்)

நெருப்பை உண்டாக்குகின்ற மிகுந்த விறகினால் அற்ப நெருப்பு மிகுவது போல இப்படிப்பட்ட சீவன் பலவகை அனுபவத்தால் விரிந்த உணர்வினால் நான் என்று வேறுபட அறிந்து, சங்கற்ப உன்முகத்தால் அகங்காரத்தை அடையும்; பூரணமான சீவனுக்கு இவ் அகம்பாவம் காரணமாகச் சிந்தனை செய்கின்ற சித்தம் - மனம் - பிரகிருதி - மாயை முதலிய பெயர்களை அறிஞர்கள் (சத்துக்கள்) வகுத்துச் சொல்லுவார்கள்.

(பிரமத்து ஒளியை வேறுபாடாக உணரும் சங்கற்பமே மனம் என்பதாம்)

சங்கற்பங்கள் விகற்பங்களால் விரிகின்ற மனமானது பிரமம் காரணமாக இப்படி உண்டாகும். மனத்தினால் தோன்றிப் பரவின உலகங்கள் யாவும் மனத்தின் வடிவே (modes) வேறில்லை. அளவில்லாத விருத்தி ஞானம் (mental modifications) ஆகிய பேரலைகளை உடைய அறிவுக் கடல் (ஞானசாகரம்) மட்டுமே பிரகாசிக்கும். மனத்தின் வசத்தால் உலகம் உண்மையாகத் தோற்றுகிறது. இந்த உண்மை கனவுக்கு ஒப்ப நெடியதாக இருக்கின்றது

மரக் கட்டை என்று அறியாத அறிவினால் அது கள்ளனாகத் தோன்றுவது போல, யாவும் பிரமம் என்ற தெளியாமையினால் உலகம் உண்டாகிறது. அழிவற்ற பிரமத்துக்கும் சீவனுக்கும் மறந்தும் பேதம் இல்லாதது போல

நீங்காத சீவனுக்கும் சித்தத்துக்கும் பேதங்கள் இல்லை. இதைப் போல நிலையாத மனத்துக்கும் உலகங்களுக்கும் சற்றும் பேதம் உண்டாகாது.

**கதை**

இது காரணமான ஒரு கதை; முன்னம் பலம் மிக்க இராட்சதி (அரக்கி) சொல்லிய முதிர்ந்த வினாவினால் அறிய வேண்டிய பொருள்கள் யாவையும் தெளியும்படி தெரியச் செய்வதாம். அது நீ கேட்பாய். இமய மலைக்கு வட பக்கத்தில் இருப்பவள் அவள் பெயர் கற்கடி.

அவள் இராட்சதி. பிறை போன்ற பற்களும், பெரிய வாயும் உடையவள். மின் போன்ற விழியும் உடையவள்.

கறுத்த மலையையே பெண் வடிவமாக, கை கால்கள் வகுத்தது என்னும் படி திரிவாள். இடி போன்ற புன்சிரிப்பு உடையவள் ஓடாமல் சுழலும் கண்களை உடையவள் பெரிய உடம்பைத் தாங்கும் இரு தொடைகளும் பேரீச்ச மரம் போல்வன. வரும் மேகத்தைப் பிளக்கும் நகமானது வயிடூரியத்தின் சுளகு (முறம்) போன்றது.

கற்கடியின் வினாவை அறிவிக்கும் பொருட்டு அவளுடைய அவயவங்களை வருணித்தார்.

பூமியின் கண் உள்ள உயிரை எல்லாம் பகலும் இரவும் பெய்யவும் ஊழிக் கனல் போல் தணியாத வயிற்று நெருப்பால் மனம் நொந்து சம்புத் தீவில் காணப்படும் உயிர்களை எல்லாம் அற்ப ஆகாரமாக, ஆற்று நீரை எல்லாம் தன்னுட் கொண்டும் மேலும் எதிர்பார்க்கும் கடல் போல அவள் சீவன் மெலிவுற்றிருக்கும்.

(போகம் கசக்கும் பொருட்டு அதை மிகவும் அனுபவிக்கத் தோற்றினது)

மழையினால் தணியும் கானலைப் போல வயிற்று எரியும் சிறிது அவியும். பிழை வராமல் இவ் உதராக்கினியைத் தணிப்பதற்குத் தவஞ் செய்து பிரமதேவன் அருள் பெறுவோம் என்று குகைகள் நிறைந்த இமய மலைக்குப் போய் நீர் மூழ்கி எழுந்து ஒரு காலைப் பூமியில் ஊன்றி நடுவானில் பொலியும் கதிரை (சூரியனை)ப் பகலில் நேரே பார்த்து,

வருத்தமுற்று நின்று உயர்ந்த தவத்தினால் ஓராயிரம் வருடம் செலுத்த, கமலத்தயன் (பிரமதேவன்) வந்தான். 'தீயோர் எனினும் அருந்தவத்தால் பொருந்துறாத பொருள் உண்டோ?' தாமரையை உடையவன் வரவும் முன்னிருந்த படியே இருந்து இராட்சதி இதயத்து இறைஞ்சி இதை நினைந்தாள்.

தாவுகின்ற பசி தணியும் பொருட்டுச் சிறு இரும்பால் சமைந்த ஓர் உயிருள்ள ஊசி, வடிவமானால் (சீவ சூசி) உலகில் உள்ளோரின் உடல்களில் புகுந்து பொருந்தும் உணவுகள் வேண்டியவற்றைப் புசிக்கலாம் என்று எண்ணிய அவளிடம் 'உனக்கு ஆக வேண்டியதான எண்ணம் என்ன?' என்று பிரமதேவன் கேட்டான். அவனுக்குச் சொல்வாள் அவள் :

'துதிப்பார்க்குத் துணையே! நான் சீவசூசி (உயிர் உள்ள ஊசி)யாக வேண்டும் என்று கேட்க அதற்குப் பிரம தேவன் 'வி' என்னும் எழுத்தை முதற்கண்ணதாக, விசூசியாக (விசூசிகையாக★) நீ உடல் எடுத்துக் கொண்டு பாய்வாயாக. தீய சேட்டையர், மூர்க்கர், கொடியோர், கொடிய இடத்தில் இருப்போர் ஆகியோர் மனத்தில் பிராணவாயுவோடும் கலந்து இடுக்கண் (தீங்கு) உண்டாக்கு....

நல்லோரிடம் நீ சென்றால் நாம் விதித்த (உனக்குச் சிகிச்சை என்னும்) மந்திர செபத்தினால் கொல்லாது விலகுவாய்; தீயோரைக் கொன்று தின்பாய் எனப் பிரம தேவன் சொல்லி மறையும் அளவில் முன்னம் மலை போன்று இருந்தவள் சீவசூசி உருவம் எடுத்து மூர்க்கரும் மனத்தில் அச்சம் மிகுந்தவரும் நசிக்கும் வண்ணம் உள்ளுறப் புகுந்தாள்.

வாயு வடிவாய் மண்ணிலும் விண்ணிலும் உள்ள பல்லுயிர்களின் உட்புகுந்து அவர்கள் வாணாளை எல்லாம் சீவ ஊசி, வாயு ஊசி என்ற இரு வடிவாய் அனேக காலம் புசித்தாள். பின் தளர்ந்த மனத்தை உடையவளாய் "வீணாகவே சுழன்று வருந்தி ஊசியுமாய்த் தேய்ந்து போகும்படி ஆசையானது எம்மை அழித்தது சீ சீ" எனத் திகைத்தாள்.

★ விசூசிகை என்பது 'காலரா' எனப்படும் நோய் ஆகும்.

(மிகுந்தது கெடும் என்னும் வாக்கியப்படி மிகவும் அனுபவித்த புசிப்பிற் கைப்பு உண்டானதாம்.

'கொடிய மனத்துடன் நாம் வீணாகப் பல உயிர்களைப் புசித்தோம்; பொருந்திய அவ் ஆசையை நீக்கினோம்.' என்று இமய மலைக்குச் சென்று, பொருந்துதற்கு அரிதான தவத்தை அடைந்து ஒரு நினைப்பும் இன்றிச் சலனத்தை விட்டு, உணவற்று ஒருமித்து ஆயிரம் வருடங்கள் செலுத்தவும் கொடிய இருவினையும் நீங்கின.

தீமை நீங்கி மனம் தெளிவடைய, பிரமத் தியானம் தன்வயம் மேவ, இவ் உலகத்தை இகழ்ந்து விருப்பு வெறுப்பு இல்லாதவளாய் ஆயிரம் வருடம் தவத்தில் இருந்த பின், பூரண ஞானம் உதித்தது என்று பிரம தேவன் தானே வந்து இக் கற்கடிக்கு ஓர் உண்மையைச் சொன்னான்.

'சீவன் முத்தி அடைந்தாய்; சிந்தை தெளிந்தாய். பழைய இராட்சதி வடிவமாய்ப் பூமியில் ஞானமில்லாதவர்களும் கொடியவர்களும் கீழ் மக்களும் ஆகிய இவர்களுடைய உடல்களை உனக்கு இரையாகச் சீவனம் செய்து உறைக' என்று அருளி, அயன் மறைந்தான். அத்துவிதப் பிரமமே யாவும் என்னும் பாவனையைப் பொருந்திச் செயலற்ற தற்பதத்தில் இருந்தாள்.

(பிராரத்த சேடம் நீங்கும் பொருட்டு விதிப்பான புசிப்பை அனுபவிக்க அறிவித்ததாம்)

நிருவிகற்ப சமாதியில் நெடுங்காலம் இருந்தனள். சமாதியினின்றும் தன் நிலைக்குத் திரும்பினாள். நீங்காத மகிழ்வோடும் மனத்துடனும் சேர்ந்தாள். பசியை நினைத்தாள். நான் என்னும் தன்மை உலகில் இருக்கு மட்டும் உடலுக்கு உண்டாகிய இயல்பு விடாததனால் உலகில் அரக்கர் குலத் தொழிலான மாமிச ஆகாரம் புசிப்பன் என்று, பிரமன் உரை செய்ததும் அவ்வாறே ஆதலால் அந்த உரைப்படியே மூடர்கள் உடலை அமுதாகப் புசிப்பேன் என்று மகிழ்ந்து இமய மலையின் சாரலில் சென்று வெற்றி மிக வேடர்களின் நாட்டை அடைந்து அதிலுள்ள கானகத்தில் வசிக்கும் காலத்தில், நீதியுள்ள அமைச்சனோடு அங்கு ஓர் அரசன் வந்தனன்.

சந்திரன் சூரியன் நெருப்பு ஆகிய மூன்றும் ஒன்றாக

வந்தாலும் அவற்றின் ஒளி மழுங்கத் தகுந்த மிகுந்த இருள் மூடிக் கொண்டிருக்கிற இராத்திரியில், பயப்படாத அரசனும் மந்திரியும் பிசாசம் முதல் துட்டர் வரை சோதனை செய்து வரவும் அவர்களை அவ்விடத்துப் பார்த்த கற்கடி 'பசுமையான புசிப்பு ஆவர் இவர்கள் மெய்யறிவில்லாதவர், பாமரர், இவ் உலகில் உயிர் வாழின் இகத்திலும் பரத்திலும் மற்றெவ்விடத்தும் இடும்பை என்று திரும்பவும் நினைப்பாள்.

அயன் முன்பு விதித்ததும் இப்படியே. தீங்கறக் கிடைத்த பயனைக் கொள்ளாதவர் அற்ப உள்ளத்தினர் என்று மிகவும் ஆலோசித்துத் தெளிந்த அறிவையும் நற்குணமுள்ள இயல்பையும் அடைந்திருக்கின்றவர்கள் கெடும்படி கொலை செய்ய மனம் எழுமோ அன்றியும் இவர் வன்துயர் மேவுவரோ?

தக்க சான்றோர் மெய்யான நீண்ட புகழ் உடைய நீண்ட ஆயுளெல்லாம் வகுப்பரிய சுகத்தைப் பொருந்தினவர்கள் யாவரும் வணங்கத் தக்கவர்களாவர். குறைவில்லாத தனது உயிரைக் காட்டிலும் இனிமையுள்ளவர் ஆதலால் அக் குணவான்களுக்குத் துன்பம் வருமாயின் பயப்படாதீர் என்று உயிரையாவது கொடுத்து இரட்சிக்கத் தக்கவராவர், அன்புடையார்க்குத் தஞ்சமுற யமனையும் உறவுபடுத்தும் தன்மையுள்ளவர்கள்.

இராட்சதி என்கின்ற நாம் முதலாக உயர்ந்தோரை ஆதரிக்கும் அன்பு கண்டால் அன்பாகப் பொன் போல யார் தான் விரும்பாதவர்கள். இப் பூமியில் இரட்சிக்க வருகின்ற பூரண சந்திரனைப் போல அடுத்தவர்கள் மனத்தைக் குளிர்விப்பார்கள். சாராதவர்களே மிகவும் இழிவுபட்டு மரித்தவராம். சார்ந்தவர்கள் முத்தி முதலிய பயனைப் பெற்றவர்கள்.

ஆகையால் இவர்களை அறிஞரோ அறிவிலரோ ஆர்கொல் என்று ஆராய்ந்து அறிகின்ற கேள்விகளைக் கேட்போம் என்று நினைத்து இடியும் திடுக்கென்று பயப்படும் படியாக, ஆகாயத்தினின்று ஆரவாரித்து,

'கொடிய இடி யிடித்த பின்பு மழை பொழியும் மேகத்தைப் போல, சொல்லுதற்கு அரிய கொடிய காடு என்னும் ஆகாயத்துக்கு மதியும் இரவியும் ஒப்பாவீர்கள் நீங்கள். மாயை என்கின்ற வெவ்விய இருண்ட கல்லின் கீழ் மிளிர்ந்து

அழிகின்ற வட்டமாகிய கிருமிகள் போல்பவர்களே, எனக்கு உணவாக இக் கணத்தில் இறக்க வந்தீர்கள். மேலானவர்கள் போலும் இருக்கிறீர்கள்; தீயவர்கள் போலும் இருக்கிறீர்கள், நீங்கள் யார், சொல்லுங்கள்' என்று கற்கடி கேட்டாள்.

அதற்குக் 'கொலை அரக்கியே கேட்பாயாக' என்று வலிமையுள்ள வேந்தன் சொல்லத் தொடங்கினான்.

எவ்விடத்தில் இருக்கின்றாய்? நீ இவ்விடத்திற் சொல்லிய யாவும் இளவண்டின் இரைச்சல் போல அழகாகக் கேட்டோம். என்று அரசன் சொன்னான். இராட்சதியும் 'நன்று' என்று எதிரே நகைத்த மாத்திரத்தில் அவளது வெவ்விய பல் ஒளியால் அவளது வடிவை வெளியாக (பிரத்தியட்சமாக)க் கண்டு சிறிதும் வெருவாமல் அரசன் 'மைநாகம் போல வாயைத் திறந்து வீணாக நீ வருத்தப்படாதே' என்று சொல்லுவான்.

அடைகின்ற பயனுக்காக முயற்சி செய்யாதவர்கள் இல்லை என்றாலும் நொய்தான (அற்ப) காரியத்தில் நொய்தானோர் விரைவார்கள். நுட்ப அறிவினால் அமைதியுடைய அறிவுடையோர் கனமான காரியத்தைச் செய்வார்கள். கொடிய உன் போன்ற பலரைக் கொதுகு (கொசு) போல எங்கள் வீரக் காற்றானது வீசி விடும்.

ஆகையால் விரைவை விடு. உன் கருத்தை உரை. எங்கள் அருகு வந்தோர் ஆசையினால் இரந்த பொருளைக் கனவிலும் கொடுப்போம் என்று அரசன் சொன்னவுடன் ஞானமும் கல்வியும் வலிமையும் பொறையும் (சாந்தமும்) ஆகிய இவற்றில் இவர்கள் அளவில்லாதவர்கள் என்று அறிந்தாள் கற்கடி. மேன்மையான அவர்களின் உரையை மிகவும் வியந்தாள். குறைவற்ற உண்மையைப் பார்த்தாள்.

வாக்கு, முகம், கண்கள் ஆகியவற்றால் வேறுபடாமல் உயர்ந்தோர் தம் களங்கமற்ற மனம் மிகவும் உயர்ந்திருக்கும். இக் குணங்களால் உள் நினைவும் அறியலாம். மேலோர் தாமே செல்வம் போல் நேரில் வர (ஆன்மிக உண்மைகள் பற்றிய) ஐயம் தெளியாதவர்கள் கீழ்மக்களாவர். கடாவும் உரையினால் இவர்களை அறிவோம் என்று நினைத்து நீங்கள் யார், சாற்றுங்கள் என்று கற்கடி கேட்டாள்.

வினயம் பொருந்த அரக்கி இது கேட்க, அமைச்சன்

சொல்லுவான் : வேடர்களுக்கெல்லாம் இவன் மன்னன். நான் அமைச்சன். இருள் நேரத்தில் எங்கும் பார்த்து உன் போன்ற தீயவரை ஆராய்ந்து ஒறுக்க (தண்டிக்க) வும் உயிர் ஒடுக்கவும், நல்லவர்களின் உயிர் நிறுத்தவும் (காக்கவும்) வந்திருக்கின்றோம்.

என்று அமைச்சன் கூற, அந்த இராட்சதி சொல்லுவாள்.

'தீயவனாம் மந்திரியால் நல்வேந்தும் தீவேந்தாம்; தீமையில்லாத தூயவனாம் மந்திரியால் தீவேந்தும் நல்வேந்தாம்' தொடர்பு போல 'மன்னவரால் அமைச்சரும் அப்படியாகும்'. ஆதலினால் 'நேய விவேகத்து அமைச்சன் உண்டாகில் எப் பயனும் நிருபர்க்கு (அரசர்க்கு) உண்டாகும்.'

'மன்னவன் எப்படி உலகில் மன்னுயிரும் அப்படியாம்!' பெருமையும் நல் நடுவுநிலைமையும் மெய்ஞ்ஞான நூல் தெளிந்தவர்க்கே பொருந்தும். அந்த ஞான நூலைக் கல்லாதவர்கள் என்றால் அரசர் அமைச்சர் என்போர் அபத்தர் (பொய்யர்) ஆவார்கள். இத் தன்மையான ஞானநூல் பயிற்சி இல்லையாயின் எனக்கு உணவாக இளமை நலம் இன்றே இழந்திடுவீர்கள்.

## கற்கடியின் கேள்விகள்

"சிங்கம் போன்ற உங்களை நான் சொல்லுகின்ற கேள்வியாகிய கூண்டில் காவல் செய்கின்றேன். உங்கள் மதியாம் திறவு கோலினால் அக் கூண்டின் வாயிலை நீங்கள் திறந்தால் உயிர் வாழ்வீர்கள்" என்று இராட்சதி சொன்னாள். 'அது என்ன வகுத்துச் சொல்வாய்' என்று மேலான அரசன் சொல்ல, பழைய இராட்சதி நல் அமுதத் துளிகள் போல அவ் அரச மந்திரிகளுக்குக் கூறிய வாக்கியங்கள் அனைத்தையும் இராமா! நீ கேள் என்று வசிட்டர் சொன்னார் :

பரவிய கடலில் குமிழிகள் போல ஒன்றான எந்த அணுவுக்குள் பல கோடி அண்ட நிரைகள் பலவாகத் தோன்றி நின்று ஒடுங்கும்?

ஆகாயம் ஆகியும் அஃது இல்லாததாக இருப்பது எது?

வரையறவு (limit) உள்ளதாயிருந்தும் இல்லாதது எது?

சஞ்சரித்தும் சஞ்சரியாதது எது?

*இருப்பதாகியும் இல்லாதது எது?*

*சித்தாக (conscious) இருந்தும் கல்லானது (or inert) எது?*

*ஆகாயத்தில் ஓவியம் எழுதுகின்றது எது?*

*விதையிடத்தில் மரங்கள் போல எந்த அணுவில் உலக மெல்லாம் இருக்கின்றது?*

*விரிவான கடல் அலை நுரைகளைப் போல ஒரு பொருளும் வேறுபடாமல் நிறைந்த நீரையும் நெகிழ்ச்சியையும் போல எதனிடத்துத் தோன்றி இருமையும் எங்கு ஒருமை யாயிருக்கும்?*

*இவ் வினாவின் பயனை உங்கள் அறிவினால் தெரியச் சொல்வீர்களானால் வாசனை பொருந்த என் கூந்தல் மேல் எப்போதும் இருக்கின்ற மணமலர்கள் போல் ஆவீர்கள். மந்தமுறு புத்தியினால் வகுத்துரைக்க மாட்டாமல் மயங்குவீர் களானால் வெந்த வயிற்றில் எரிகின்ற கனலுக்கு விறகு ஆவீர்கள், என்ற இராட்சதி சொன்னாள்.*

## மந்திரி பதில்

*மந்திரி முன்பு சொல்லுவான் : மாசிலாப் பரம் பொருளை (பிரமத்தை) வகுத்துச் சொன்னாய். அஃது யாது எனின் மனம் முதலாகிய ஆறு பொறிகளாலும் எட்டுதற்கு அரிய தன்மையினால் முடிவில்லாத ஞான மாத்திரமாகியும், ஆகாயத்திலும் நுட்பமாகியும் பரமாணுவுக்கு ஒப்பாகியும் இருக்கும்; அந்த அணுவுக்குள் முந்தின பிரமாண்டங்கள் அனைத்தும் தோன்றி வளர்ந்து மாயும்.*

*அந்தப் பிரமத்துக்குப் புறம் இல்லாமையால் ஆகாயமாம். தனி ஞானமாக இருத்தலின் விரிந்த பூத ஆகாயம் அன்றாம். இப்படி என்று சுட்டி அறிதற்கு அரிய தன்மையினால் திடமாக இல்லாததாம். சத்தாக இருத்தலால் உள்ளதாகச் சொல்லப்படும். அது சுயமாக ஒளிரும் விளக்காதலால் ஞானமாகும். அறியும் தன்மையில்லாத நிமித்தத்தால் கல்லாம். (சடமாகிய கல்லைப் போலுமாம்)*

*மிக நொய்தாகவும் தானாகவும் இருக்கின்ற சிதாகாயத்தில் உலக நிரைகளாகிய சித்திரத்தைத் தானே எழுதும், நீங்காத உலகமெல்லாம் தனது பிரகாசம் ஆன படியால் அப்*

பொருளுக்கு வேறு அயல் ஒன்று இல்லை. நீ நான் என்கின்ற உலக வேற்றுமை உருவங்களும் இருக்கின்ற அச் சத்தின் உருவமாய் எப்போதும் பிரியாதாம். பல்வேறாகப் பொருள்களின் புணர்வால் சஞ்சரித்ததாம்; சஞ்சரிக்க வேறு இடம் இல்லாமையினால் சஞ்சரியாததாம்.

தான் அடைவதற்கு வேறு ஓர் இடம் இல்லாததால் நிற்கவில்லையாம். எப்பொழுதும் எல்லாப் பொருள் களிடத்தும் சத்தா மாத்திரமா யிருக்கின்றதனால், நிற்கின்றது என்று -

அரசனது அருகில் நிற்கும் நன்மதி அமைச்சன் சொல்லக் கேட்டுக் கற்கடியானவள் மிகவும் வியந்து அதன் பின்பு 'அரசே உன் உணர்வு உரை' என்று கேட்க, அவனும் சொல்லுவான்.

## அரசன் உரை

உலகு இல்லை என்ற உறுதியே பகுப்பற்ற ஒன்று மட்டுமே உள்ளது என்னும் உறுதியாகும். பிரமத்தின் இயல்பை இன்னும் சொல்லக் கேட்பாயாக.

மனத்தினால் சங்கற்ப விகற்பங்களை விட்டு விடுதலே பிரமத்தைக் கைவசப் படுத்துவதாகும். திருத்தமாகிய தனது சங்கற்பம் உதித்து ஒடுங்குதலே சகத்தின் உற்பத்தி ஒடுக்கமாம். வேதாந்தங்களின் பொருள் பொதிந்த மகா வாக்கியத்தின் கருத்து இதுவே, அவ் வேத வாக்கியத்திற்கு (அந்தரங்கமான அனுபூதியாகையால்) அயலுமாம். (பிரமம் என்ற நிலை) விளங்குகின்ற உள்ளது இல்லது இரண்டுக்கும் மத்தியுமாம். அந்த இரண்டின் உருவுமாகும்.

அசைவன நிற்பன உள்ள உலகங்கள் எல்லாம் மனச் சங்கற்பத்தால் நடக்கும் விளையாட்டாம். உலகமாயிருந்தும் பழமையான ஒருமையினில் (ஏகத்துவத்தில) பிரிவற்றதா யிருக்கின்ற பரிபூரண ஞான மாத்திரமாக விளங்குகின்ற பிரமமாம் பொருளை உரைத்தாய். நிராசை உள்ளத்தினர் உணர்கின்ற பிரம சொரூபமே இது" என்று அரசன் சொல்ல, இராட்சதி நெஞ்சுள் கொண்டு அமுத மழை பொழிந்ததால் எல்லாம் குளிர்ச்சி அடையும் தன்மை போல் மிகவும் மகிழ்ந்தாள். உப சாந்தம் அடையச் சொல்லத் தொடங்கினாள்.

## கற்கடி கைம்மாறு

அதிசயமாகியும் அமுதமாகியும் அறிவே யாகியும் உதயமும் மறைவும் இல்லாத ஞான சூரியனுக்கு ஒப்பாகியும் இருக்கின்ற பொற்பு மிகும் அறிவை உடைய உங்களுக்கு ஒப்பான மேலோருடைய பொன்னடியை முடி (கிரீடம்) ஆக அனைவரும் தரித்தார்கள் அல்லவா? முத்தி உலகை ஆளுகின்ற வேந்தர்களாகிய ஆன்ம ஞானிகளைச் சேர்ந்தால் சோர்வு உண்டாகுமோ? ஆன்ம லாபத்தைப் போல் வருகின்ற உங்களுக்கு இவ்விடத்தில் எல்லாம் கிடைத்திருந்தாலும் நான் செய்யும் கைம்மாறு இன்னதென்று சொல்லுங்கள் என்று கேட்டாள்.

'சிலை (வில்) அரக்கர் குலம் என்னும் எட்டிக் காட்டில் செறி தேமாங்கனிக்கு ஒப்பானவளே, உலகத்தின் கண் ஓர் உயிரையும் கொலை புரியாமல் இருப்பாய்' என்று வேந்தன் சொல்ல, 'அப்படியே கொலை செய்வதை விட்டுவிட்டேன்' என்று இராட்சதி கூறினாள். 'அளவற்ற உணவு வேண்டப்படும் நீ பசிக்கு என் செய்வாய் என்று கூறு' என்று மன்னவன் கேட்க முன்னாளில் அலைவில் சமாதியில் (நிருவிகற்ப சமாதியில்) இருந்து பசியை வென்றேன். அவ் வண்ணமே இப்பொழுதும் இருந்து தணிப்பேன்.

## கொள்ளரிய நட்பாக

தெளிவாகிய அமுத தாரணையால் வேண்டிய கால மட்டும் சீவன் முத்தியில் இருந்து அதற்குப் பிறகு தேகம் தீர்வேன் (விதேக முத்தி அடைவேன்) 'உள்ளம் நிறையுணர்வுடையேன்' ஆகிய யான் ஓர் உயிரையும் வதையேன். உண்மை' என்று சொல்லிப் போக நினைப்பவளைக் 'கொள்ளரிய நட்பு எளிதாகப் பெற்றோம். நீ எங்கள் குலப் பெண்ணாக எங்கள் அரண்மனைக்குக் கூட வந்தால் கொலை செய்யும் கள்வர் உடலை உணவாகக் கொடுப்போம். இவ் உடல் போகுமட்டும் நினைப்பு முதலிய வாதனைகள் நீங்க மட்டா.'

ஆகையினால் பாவிகளின் உடல் என்னும் புசிப்பைக் கொண்டு இருப்பாய்; அரும்பசி நீங்கி, நிட்டையில் இருப்பாய்; இவ்வாறு அன்போடு எப்போதும் இவ் வுலகில் செய்து வருக'' என்று அரசன் சொல்லவும் இராட்சதி களி கூர்ந்தாள்

*அரசன் அமைச்சர் ஆகியோருடன் சென்றாள். அவர்கள் பொன் மயமான அரண்மனையை அடைந்தார்கள். இரவி உதயம் செய்தான். மூவாயிரம் பாவிகளை ஆறுநாளில் அரசன் கொடுத்தான். இராட்சதி பெற்றுக் கொண்டாள்.*

*பூமகள் (இலட்சமி) போல அரண்மனையிலிருந்த வடிவை இராத்திரியில் ஒழித்து அரக்கர் குலப் பாவையாகிப் பாமரராம் பாதகரைத் தோள் மேல் வைத்துக் கொண்டு அரசனுடன் அமைச்சனுக்கும் உபசாரங்களைக் கூறி இமய மலைக்கு நிட்டையிலிருக்கப் போயினாள். இன்று வரைக்கும் இவ்வண்ணமே கோமகனும் கற்கடியும் நட்பாக உள்ளார்கள் என்று இராமனுக்கு வசிட்டர் சொன்னார்.*

## 3:4 அயிந்தவர் கதை*

### கதைச் சுருக்கம்

*பிரமப் பிரகாசமே சீவன் முதலான சகலமும் என்பது, போன கதையால் சொல்லப்பட்டது. அது திடமாகும் பொருட்டு அதன் உல்லாசமான மனமே சகம்* (universe) *என்பதை விளக்குவதற்கு இந்தக் கதையை ஆசிரியர் கூறுகிறார்.*

### மனமே சகம் என்பதற்குச் சான்று

*ஊசி கதை **(கற்கடி கதை)**யினால் மெய்ப்பொருள் (பிரமம்) உண்மையே உண்மை. அது ஒன்றே உள்ளது. காணப்படுவன (திரிசிய) ஒன்றும் உண்மையில் இல்லை. அளவற்ற படைப்புகளில் உள்ள யாவற்றுக்கும் காரணமாக (முதலாக) இருப்பது மனமே. இதனை விளக்கும் பொருட்டு, இராமா, உனக்கு ஒரு கதை சொல்வேன் கேட்பாயாக.*

*கேட்ட பின், சிற்சத்தி (ஞானசத்தி* : the potency of jnana) *விரிவே உலகு என்று உறுதி உண்டாகும். ஆசையின் ஏற்ற இறக்கத்தால் பொங்கியும் வடிந்தும் செல்லும் இந்தச் சிறுபிள்ளைத் தனமான மனம் வெறும் தோற்றமான* (illusory) *இந்த உலகை உண்மை என்று கற்பனை செய்கிறது. அதனிடம்*

* The story of Aindava (The son of Indu or the moon)

இவ்வுலகின் உண்மையான இயல்பைத் தெரிவித்தால் இதனைப் பிரம்ம சொரூபம் என்று அறிந்து கொள்ளும். அறிந்து கொண்ட மனத்தினின்று துன்பம் விலகும். பற்றுகள் ஆசைகளால் வரும் பல வகை விகாரங்களுக்கு (modification) மனம் இடம் கொடுக்குமேல் அதனால் மறு பிறப்புக்கு ஏது உண்டாகிறது. அவ் விகாரங்களிலிருந்து விடுபடலே மோட்சம் (விடுதலை) ஆகும்.

(சிற்சத்தியின் விருத்தியான மனப் பிராந்தியே திரிசியமும் அதன் நிவிர்த்தியே திருக்குவுமாம் என்பதாம்)

## புதிய படைப்பு : பிரம தேவன் வியப்பு

ஒரு காலத்தில் பிரம தேவன் யாவற்றையும் ஒடுக்கித் தனக்கு வழக்கமான இரவாகிய பெரும் பொழுதில் துயின்று எழுந்து புத்துணர்ச்சியோடு ஒரு புதிய படைப்பை-உலகை-படைக்கக் கருதித் தன் மனத்தினால் பரந்த ஆகாயத்தை அளவிட்டு நோக்கினான். ஆனால்! அந்த ஆகாயம் பலவகைப் படைப்புகளால் நிரம்பியிருப்பதைக் கண்டான்.

## படைப்பு நிகழக் காரணம்

நிகழ்விற்கு வியந்து யார் இது செய்தார் என்று அறிய அவாவி, அங்கிருந்த சூரியர்களில் ஒருவனிடம் தன் விரலை நீட்டிச் சுட்டித் தன்னிடம் வருமாறு சொல்லி, வந்த அவனிடம் 'உன்னையும் இந்தப் பேருலகு அனைத்தையும் ஆக்கியோர் யாவர்?' என்று கேட்டான். அந்தச் சூரியன் முறைப்படி வணங்கி, 'முடிவில்லாத உலகங்களுக்குக் காரணமான விதியாம் (பிரமாவாம்) நீர் இதனை அறியவில்லை என்றால், என்னால் முடிந்த அளவு விளக்க முயலுவேன். சுவர்ண தலம் (swarna tala-Golden Seat) என்று ஒரு நல்ல நாடு; அது கயிலை மலை பொருந்தியுள்ள நாவலந்தீவில் (சம்புத்தீவில்-இந்தியாவில் ஒரு பகுதி) உண்டு.

## பதின்மர் தவம்

அது உன் மக்களால் படைக்கப் பெற்றது. அதில் நெடிய காசிப முனிவனின் மரபில் வந்த இந்து (திங்கள்) என்ற பெயருடைய பிராமணன், சிறந்திருந்து வந்தான். அவனுக்கு

மகப் பேறு இல்லை. ஆகவே பரபரப்பான மனத்தோடு தன் மனைவியுடன் பரமேசுவரனின் கயிலாய மலைக்குச் சென்றான்.

அவன் தவம் மேற்கொண்டு நீரை மட்டும் பருகி அசைவற்ற மரம் போல இருந்து வந்தான். பரமசிவன் அக மகிழ்ந்து அவர்களிடம் வந்து 'உங்கட்கு வேண்டியது என்ன சொல்லுங்கள்' என்று கேட்டார். அவர்கள் அவர் முன் தங்களின் துன்பம் எல்லாம் தீருமாறு கலை தெளிந்த புதல்வர் பத்துப் பேர் வேண்டுமென்று கேட்டார்கள், சிவ பெருமான் அப்படியே அருளிச் செய்தார். அந்தக் கணவன் மனைவி இணை மன மகிழ்ந்தார்கள்; பத்துக் குழந்தைகள் பெறும் பேறும் அடைந்தார்கள்.

## உயர்வை ஆராய்தல்

மைந்தர் ஒரு பதின்மர் தோன்றிப் பல துறை அறிவில் நிறைந்து வளர்ந்தனர். காலப் போக்கில் அவர்களின் பெற்றோர் மறைந்தார்கள். மைந்தர்கள் கயிலாய மலைக்குச் சென்று சேர்ந்தார்கள். நம் நல்குரவு (வறுமை) தீருதற்கு மேலான படைத் தலைவர் ஆகலாமா, அந்த நிலை சிறியது ஆகவே உலகாளும் அரசர் - பேரரசர் - ஆகலாமா என்று எண்ணினார்கள். ஒன்பான் செல்வம் (நவநிதி) நிறைந்த தேவேந்திரன் ஆவோம் என்ற கருதினார்கள்.

அதுவும் நமக்குப் போதாது, தாமரை மலர் இருக்கும் பிரமதேவன் ஆவோம். அந் நிலையில் தான் நாம் மாசற்ற எல்லாச் செல்வமும் பெற்று நுகரலாம் என்று இவ்வாறாகத் தீர்மானித்து மனத் திட்பத்துடன் பத்மாசனத்தில் அமர்ந்து மன ஒருமையுடன் பதின்மரும் "யாமே பிரமதேவன், படைப்பு யாவும் உண்டாதல் நம்மிடத்தே" என்று தியானத்தில் இறங்கினர். உடல் நினைவின்றி அசைவின்றி மரத்தைப் போல இருந்தனர். பல காலம் அப்படியே சென்றது. அவர்களின் நினைப்புகள் நிறைவு பெற்றன. பதின்மரும் பிரமதேவர் ஆயினர். பத்து உலகங்கள் படைக்கப்பட்டன. (பத்துச் சூரிய மண்டலங்கள் உண்டாயின)

## மனமே உலகம் என்பதற்குச் சான்று

மன ஆகாயத்தில் இவர்கள் பத்து வகையாகச் சிருட்டி

செய்தார்கள். பத்துப் படைப்புகளான பத்துச் சூரியர்களில் யானும் ஒருவன் என்று கூறி விட்டு மறைந்து ஏகினான்.

இராமனிடம் வசிட்டர் சொன்னார். :

காணப்படும் பேருலகங்கள் யாவும் இந்தப் பெரிய மனத்தின் விரிவினால் இருந்து வருகின்றன. அந்த விதிப்படி அன்ன வாகனப் பிரமதேவன் தன் மனத்தளவாலே எல்லா உலகுகளையும் படைத்தான்.

## 3:5 வஞ்ச இந்திரன் கதை*

### சுருக்கம்

காணப்படும் உலகம் மெய்ப்பொருளின் ஆற்றலால் மனத்தால் இவ்வாறு காட்டப்படுகிறது என்பதைச் சான்று காட்டி அறிவித்த ஆசிரியர், காரணமான அந்த மனத்தைத் தவிரக் காரியமான தேகம் வேறு இன்று என்பதை விளக்குகிறார்.

### மன விலாசம்

நிகரற்ற உலகங்களைப் படைத்ததும் ஆன்மாவும் மனம் மாத்திரமே. மனத்தின் தொழில்களே தொழிலாகும். தேகத்தின் தொழில்கள், தொழில்கள் அல்ல. சூரியன் சொன்ன பிராமணர் பதின்மர் பத்மாசனத்தில் இருந்து கடுந்தவம் ஆற்றிப் பிரமதேவனாகி உலகங்களைப் படைத்தனர். மிகப் பெரிதான மனத்தின் உயர் சக்தியைப் பிரம தேவனால் அன்றி யாரால் எளிதில், உண்மையில் உணர்ந்து கொள்ள முடியும்?

### பிரமானந்தம் அனுபவிப்பவருக்கு விடய ஆனந்தம் இல்லை

மனம் உடம்பையே உன்னி (பாவித்து) இருந்தால் அதுவே

* (The story of Deceitful Indra)

உடம்பாகி விடுகிறது. அவ் வுடம்பினால் வலைப்பட்டு வருந்துகிறது. ஞானிகள் மெய்ப்பொருளைத் தியானித்தவாறு இருக்க (பிரம பாவனையால்) ஒன்பது வாயில் உடம்பில் நன்மை தீமைகளை அறிய மாட்டார்கள். முன்னாளில் சோரத் தொழில் செய்த அகலிகை என்பவளும் சோர இந்திரனும் இந்தக் கருத்துக்கு ஒப்பாவார்கள்.

(மனத்தைத் தவிர உடம்புக்குச் சுக துக்கம் இல்லை என்பதாம்)

## சோரர்

இவ்வாறு வசிட்டர் சொல்ல, நீங்கள் உரைத்த இவர்கள் யார் என்று இராமன் கேட்டான். வசிட்ட முனி அதற்குச் சொல்லுவார்.

முன்னாளில் மகத நாட்டை இந்திரத் துய்மன் என்பான் ஆண்டு வந்தான். அவனுக்கு உயிர்போலக் கூடி மகிழும் தேவி அகலிகை என்னும் பெயர் உடையவள். அதே பட்டணத்தில் விடன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் இந்திரன்.

## அரசனிடம் தெரிவித்தல்

முற்காலத்தில் அகலிகையையும் தேவேந்திரனும் கூடிய கதையைக் கேட்டு இந் நாளில் இந்த அரசி அகலிகையும் தூர்த்த இந்திரனை இனிமையாகக் கூடினாள். பிரிந்தவர் கூடும் கூட்டம் போல அவள் தூர்த்த சூடாமணியுடன் (இந்திரனுடன்) சில நாள் கழித்து ஒன்றாக இருந்தனள். அந்த நாளில் நீதியை உடைய அரசனிடம் அதனை அறிவித்தார்கள்.

## துன்பம் தோன்றாமை

கேள்விப்பட்ட அரசன் மிகவும் சினந்து ஆழமான நீருள் அமிழ்த்தியும் கோடுகளை உடைய மதயானையின் கால்களால் இடறச் செய்தும் நெடிய தீக் கொழுந்தில் குளிப்பாட்டியும் கசையடிகள் கொடுக்கச் செய்தும் வருத்தச் செய்தான்.

அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்தவாறு, வருத்தம் அறியார்களாய் நகைத்துக் கொண்டிருந்தார்கள்.

## விடய அனுபவம் உரைத்தல்

அரசன் அது கண்டு மிகவும் வியப்புற்றான். 'மிகவும் துன்பப் படுத்தியும் வருந்தாதிருப்பது எப்படி என்று சொல்லுங்கள்' என்று அவர்களிடம் வினவினான். மன மகிழ்ச்சியுடைய இருவரும் சொல்லுவார்கள்.

'மலை போன்ற தோள்களை உடைய அரசே, எங்கள் முகமாகிய மதியின் அமுதத்தை விழிகள் புசிக்க, தடைப்படாத களிப்பினால் உடம்பையே காணாதயாங்கள் வருத்தங்களைப் பார்ப்போமா?'

## மன உறுதியின் பெருமை

அரிந்த (அறுத்த) பொழுதும் உடல் துன்பம் அறியவில்லை நாங்கள்; ஒன்றில் அன்பாகிப் பற்றுகின்ற மனத்தினுக்கு உடல் அழிய நேரினும் துன்பம் தோன்றாது. தெரிந்த பொருளில் மனம் அழுந்தியிருந்தால் உடம்பின் செயலை யாவர் பார்ப்பார்கள்? விரிந்த முனிவர்களின் சாபமும் பல வினைகளும் அதைத் திருப்புதல் (மீட்டல்) அரியதே.

## மனத்தின் விசாலம்

(முந்தைய பிறவிகளில் தோன்றி) மாண்டு வீணாகக் கழிந்த உடம்புகட்கு ஓர் அளவு இல்லை. அவ் உடம்புகள் யாவும் மனத்தினால் தோற்றுவிக்கப்பட்டனவே. தண்ணீர் இன்றிக் காடுகள் உண்டோ? தூண்டும் மனமே முதல் உடம்பாம். இந்தப் பருவுடல் (தூல சரீரம்) போனாலும் மனம் தான் விரும்பும் உடல்களை விரிகின்ற கனவிற் போன்று விரைந்து எடுத்துக் கொள்ளும்.

இந்த மனம் செயலற்று விட்டால் உடம்பு எதனையும் அறிய மாட்டாது.' என்று தூர்த்தர்கள் சொன்னார்கள்.

அது கேட்ட அரசன், பரதன் என்ற முனிவரது முகம் நோக்கி, 'சிந்தை, (காம) மயல் உற்றிருந்தும் இவர்கள் ஞானமொழி சொன்னார்கள்' என்று புந்தி (அறிவு) மகிழ்ந்து, 'நீங்கள் வேற்று நாட்டுக்குச் சென்று விடுங்கள்' என்று அவர்களைத் துரத்தி விட்டான்.

(பிரமானந்த அனுபவம் உள்ள மனம் விவகாரங்களிலும் அவ் அனுபவமாய் இருப்பதே அன்றி வேறுபட மாட்டாது என்பதாம்).

## 3:6 மனத்தின் கதை*

### முன்னுரை

இன்ப துன்ப வடிவாகப் புறவுலகத்தை மனமே உண்டாக்குகிறது என்பதைக் காட்டி அந்த மனம் அகத்தில் உணர்வாகவும் புறத்தில் பிரபஞ்சமாகவும் இருக்கிறது என்ற உண்மையை ஆசிரியர் விளக்கம் செய்கிறார்.

### இருவகை உடம்பு

கள்ளக் காதல் இருவர் அனுபவித்த இன்பம் (விடய ஆனந்தம்), பேரின்பம் (பிரம ஆனந்தம்) பற்றிய மங்கலான ஒரு கருத்தைத் தெரிவிக்கும் நோக்கோடு அந்தக் கதை (வஞ்ச இந்திரன் கதை) முன்பு சொல்லப்பட்டது?

எவ்வெவர்க்கும் உடம்பு இரண்டாகும். ஒன்று நுண் உடம்பு; அது மனத்திற்கு ஆனது. மற்றொன்று பரு வுடம்பு. மனம் தன் சிந்தையுடம்பினால் மிக விரைந்து செயல்படும். அதனால் ஏறி இறங்கி அலைபடும். ஆனால் பருவுடம்பிற்கு ஒன்றும் தெரியாது; அசைவற்றுக் கிடக்கும் அது.

### மனமாகிய உடம்பு பற்றி வினாதல்

இவ்வாறு வசிட்டர் கூறலும், இராமன் "சடமாக, வடிவற்று இருக்கும் இந்த மனவுடம்பு பற்றி எனக்கு விரித்து நன்றாகச் சொல்லுங்கள்" என்று கேட்டுக் கொள்ள ஞான முனிவர் வசிட்டர்.

பிரம தேவனின் வாக்கியப்படி சொல்லுவார்.

* The story of manas ( mind)

## மனத்தின் உருவத்தைப் பகுத்துக் கூறல்

எல்லாச் சக்திகளும் உடையது முடிவற்றது ஆன்மா. அது சங்கற்பத்துடன் கூடுகின்ற வடிவே மனம் ஆகும். வலிமையுடைய சத்து அசத்து ஆகிய இரண்டின் மத்தியில் உள்ள உண்மை நிலையில் தோன்றும் தொழில்களோடு கூடிப் பழகும் எல்லாக் கருத்தும் (பாவனையும்) அந்த மனத்தின் உருவங்கள் அன்றி வேறு அல்ல.

## மனத்தைச் சித்தில் சேர்க்க

எங்கிருந்து மனம் வருகிறது, என்ன உருவில் தோன்றுகிறது அது, என்றாலும் அதைப் பற்றி ஒன்றும் இல்லை. அதனை (மனத்தை) மோட்சம் அடையும் வழியில் செலுத்தவோ ஆன்மாவில் கலக்க (சேர்க்க)வோ செய்தால் அது நன்மைக்கு உகந்ததாகும்.

பிரம தேவன் சொன்ன பழைய கதை ஒன்றைக் கேட்பாயாக?

## ஒரு பழைய கதை

கொடிய துன்பமும் அச்சமுமாக இருக்கின்ற முழுதும் பொய்யான ஒரு வனம் உண்டு.

பார்க்க அச்சம் தருவதும் கடுந்துன்பத்தின் ஆதாரமாக இருப்பதுமான, பொய் மயமான ஒரு பெருங்காடு இருந்தது. அதன் ஒரு கோடியைப் பார்க்கப் பல காத தூரம் செல்ல வேண்டும்.

அங்கே ஒருவன். அவனுக்குக் கண்களும் கைகளும் எண்ணிலாதன. சிதறி ஓடும் சித்தம் (மனம்) உடையவன். ஆகாயம் அளவு அகன்றுயர்ந்த வடிவம் கொண்டவன். விரைந்து பாயும் பலப் பல வளைதடிகளைக் கையில் வைத்திருந்தான். தன் கட்டுப்பாடு இன்றி, தன்வசம் தான் இன்றிப் பல திசைகளிலும் தன்னை மோதிக் கொண்டு தகர்ந்து வெகுண்டு ஓடி அடிபட்டு அழுது பேரிரைச்சல் இட்டான். இருளாக நடுக்கம் தரும் தீவினையாகிய ஆழ்ந்து இருந்த பாழ்ங்கிணற்றில் போய் விழுந்தான். வீழ்ந்து பல காலம் மெலிந்தான்.

திரும்ப எழுந்திருந்து வந்து உடம்பில் அடித்துக் கதறிக் கொண்டு ஓட்டமாக ஓடிச் சுழலுவான். முள் நிறைந்த கருவேலங் காட்டில் முறியும் படி விழுந்து கனலில் விழுந்த புழுப் போலத் துடிப்பான். இப்படி வாடுதலை விட்டுக் கதலி வனத்தில் களிப்புற்றிருப்பான்.

கதலி (வாழை) வனத்தை விட்டுக் கருவேல் வனத்தில் சுழலுவான். விரைந்து கிணற்றில் விழுவான். இப்படிப் பல கால் சுழலுதலைக் கண்டு நாம் (பிரம தேவன்) அவனைப் பிடித்துக் கொண்டு வீணே வருந்துகின்ற நீ யார்? என்ன செய்கின்றாய்? உன் நினைப்பு யாது? என்று கேட்டோம். அதற்கு அவன் பின்வருமாறு கூறினான் :

யான் என்று ஒருவனும் இல்லை. இங்கு ஒரு செயலும் எனக்குக் கண்டிலேன். நீ இருந்து இந்தப் பேதங்களைச் சொன்னதை நினைந்து உன்னால் வாடுகின்றேன். ஈனமான பகை நீ. உன்னால் சுக துக்கங்களை நான் என்று தெரிந்தேன் என்று அடிபட்ட தன் உடம்பைப் பார்த்தான்.

இடிக்கும் முகிலின் மழை போல மனம் இரங்கிக் கதறி அழுதான். பின் ஒரு நொடியில் அழுகையை நிறுத்தினான். நுணுக்கமான (அழகிய) தனது உடம்பைப் பார்த்து நெடு நேரம், வயிறு வெடிக்கச் சிரித்தான். அதன் பின் எமது முன்னிலையில் தன் (பல பிறவிப்) பருவுடல்களை எல்லாம் தவிர்த்து விடுபட்டான்.

## வேறு ஒருவன்

பின் வேறு ஒருவன் இவனைப் போன்றே அடித்துக் கொண்டு எம் முன் தோன்ற அவனுக்கு, முன்னவனுக்கு, ஆறுதல் தந்தது போன்றே வழிகாட்டினோம், அவன் தன் பழைய உடம்பை விடுத்துச் சென்றான்.

## வேறு ஒருவன்

வேறு ஒருவன் வந்து அந்தப் பெரிய பாழ்ங்கிணற்றில் விழுந்தான். பல காலம் திரும்ப ஏறி வரப் பார்க்கவில்லை. கலக்கம் தரும் அந்தக் காட்டில் இன்னொருவன் வரவும் அறிவோம் என்று தடுத்து ஆனமட்டும் உரைத்தோம்.

சொன்னதில் ஒன்றும் கேளாது அவன் அதட்டி இகழ்ந்து மேன்மேல் மோதி அடித்துக் கொண்டு போயினான். மூர்க்கரும் அவனைப் போன்றவர்களும் ஆகிய துன்பப் படுவோர் மிகுந்து, கூர்ந்த முட்களால் செறிந்து அச்சத்துக் கிடமாயிருக்கின்ற இருள் சூழ்ந்த பெரிய காடானது இன்றும் இருந்து வருகிறது.

அறவே கொடிது ஆகி இருக்கின்ற வெந்த அடவி என்றாலும் அறிஞர் அங்கு நறுமணம் கமழ்ந்து குளிர்ந்திருக்கின்ற நந்தவனத்தில் இருப்பது போல் மகிழ்ந்திருப்பார்கள். வலிமையுள்ள வேலை உடைய இராமா! என்று சொன்னார் வசிட்ட முனிவர்.

இந்தக் கதையின் உட்பொருளை விளக்கி அருளும்படி இராமன் கேட்க வசிட்டர் கூறுவார் :

## உருவகத்தை வெளிப்படுத்துதல்

1. அடியும் முடியும் நடுவும் இன்றிப் பொய்யின் சேர்க்கையாகி அச்சம் தருவதும் விகற்பங்கள் மிகுந்தும் இருக்கின்ற உலகத்து இயல்பே (சம்சார சுபாவமே) நாம் முன் சொன்ன காடு.

2. கோப நெருப்பின் புகை நிறைந்த (உலகம் என்னும்) காட்டில் வசிக்கின்ற புருடன் (ஆள்) என்று சொல்லப்பட்டது. துன்புற்றுச் சுழலும் மனமே யாகும்.

3. உக்கிரமான செலவுடைய மனத்தைத் தடுக்கின்ற நாம் ஒப்பற்ற விவேகம் ஆகும்.

4. மனம் தன் பகையாகிய விவேகத்தினால் (பகுத்தறி வினால்) அடைந்தது பிரம அறிவினால் வரும் அமைதி.

5. குற்றம் பொருந்திய மனம் விவேகத்தை இகழ்ந்தது. ஆகவே வேட்கை வசத்தில் (விடய வாசனை வயத்தில்) மாட்டிக் கொண்டது.

6. அடித்துக் கொண்டு செல்லுகின்ற மனங்கள் வீழுங் கிணறு என்றது. நரகம் ஆகும்

7 வாழைத் தோட்டம் என்பது இன்ப அனுபவங்கள் கொழிக்கும் சுவர்க்க லோகத்தைக் குறிக்கும்.

8. கருவேலங்காடு என்றது மோக மிக்க ஆடவர் பெண்டிர் நிறைந்த மண்ணுலகம் ஆகும்.

9. கிணற்றில் சிதறி வீழ்ந்து திரும்பி ஏறாது கிடந்தவன் என்றது பாவங்களினின்று விடுபடாத மனம்.

10. கூர்மை பொருந்திய முள் என்பது மோகமுள்ள ஆடவர் பெண்டிர்.

11. நினையாத இன்ப துன்பங்களை உன்னால் அடைந்தேன். நீயே எனக்குப் பகைவன் என்றது, அறிவினால் முடிவாக நசிக்கும் மனம் துன்புற்றுச் சொல்லியது ஆகும்.

12. ஆசைகளை அறுக்கும் வருத்தம் அழுகையாக வருகிறது.

13. கூப்பிட்டு அழுதது என்றது ஞானம் பாதி வரப் பெற்ற மனம் ஆசையை விடும் போது துன்பப் பட்டு வருந்துதல்.

14. குளிர்ச்சியாக மகிழ்ந்து சிரித்து நின்றது என்பது மனம் தூய மெய்யறிவில் (ஞானத்தில்) ஒன்றாகி விட்ட ஆனந்தமாம்.

15. நிலையான மெய்யறிவினால் மோகத்தை விட்ட மனமானது தன் நுட்பமான வடிவத்தை நாசம் செய்கையில் மகிழும். அதுவே மகிழ்வாகும்.

16. மிகுந்த வலிமையினால் நிறுத்திக் கேட்டோம் என்றது அழிவற்ற ஞான உபதேச வலிமையால் மனம் ஒருமைப் பட்டது என்பதாம்.

17. உடம்பில் அடித்துக் கொண்டது என்றது அடர்ந்த கற்பனைகளால் வரும் வலிய துன்பங்களாம்.

18. நெடுந்தூரம் ஓடினது என்றது, கெடத் தகுந்த வாசனையால் (அடிபட்டு) மருண்டு சுழல்வதாகும்.

ஒருவன் உண்டாக்கும் வாசனைகளும் சங்கற்பங்களும் ஒரு வலையாக அவனைச் சிறைப் படுத்துகின்றன.

## மனத்தைக் கெடுக்க எனல்

தத்தம் சொந்த சங்கற்பங்கள் வாசனைகளால் பட்டுப்

புழு தான் இயற்றும் கூட்டில் மாட்டிக் கொள்வது போல (யாவரும்) அகப்பட்டுக் கொள்கிறார்கள்.

பகர்ந்த இம் மனத்துச் சரித்திரத்தை மாசில்லா மனத்தால் நன்கு வரையறுத்து அறிந்து மாசுடைய மனத்தை மாய்ப்பாயாக. தெளிவுடைய இராமா! என்று வசிட்ட முனிவர் உரைத்தார்.

(மனத்தை அக முகத்திற் செலுத்தி வெகு முகத்திற் செல்லாமல் தடுக்கின் ஞான மயமாம் என்பதாம்)

## 3:7 பாலன் கதை

### முன்னுரை

ஆன்மிக ஆய்வு இல்லாதவர்கள் சங்கற்பத்தின் வடிவான இந்த உலகை உண்மை (யதார்த்தம்) என்று பார்ப்பதை இந்தக் கதை தெரிவிக்கிறது.

### அறிஞரின் மனமே பிரமம்

குற்றமற்ற ஞானிகளின் மனம் எல்லாச் சக்திகளையும் உடையது; பூரணமாயிருக்கின்றது; அது என்றும் அழிவற்று இருக்கும் பிரமம் அன்றிவேறில்லை. பிரம சொரூபம் ஆகிய அதனிடத்தில் இல்லாதது இல்லை. உரைத்தற்கு அரிய மெய்ம்மை பலவாகப் பிரகாசிக்கும். அதன் முடிவற்ற சக்திகளிலிருந்து ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு சக்தி உண்டாகிறது. வழுவிலாப் பிரமத்தினுடைய ஞான சக்தியானது அழிகின்ற உடல்களில் தோற்றும்.

காற்றிலே அசைவுச் சக்தியும், கல்லிலே கடின சக்தியும் கனலில் சுடுசக்தியும் வானில் தோற்றலாமை (சூனிய) சக்தியும் நன்னீரிலே நெகிழ்வுச் சக்தியும் அழிவு செய்யும் மாய்வில் (பிரளயத்தில்) மாய்வுச் (நாச) சக்தியும் விதையினுள் இருக்கும் மரங்கள் போல உள்ளுறைகின்ற பிரம சக்திகளாகும். பலம் மிகுந்த காலம் இடம் என்ற வேறுபாடுகளால் பூமியில் பயிர்கள் (செடி கொடிகள்) தோன்றுவது போல அவை பலவாகத் தோற்றுகின்றன.

(பிரமத்தின் வேறுபடாத சிற்சத்தியின் உல்லாசமே விசித்திரமான சகமாகத் தோற்றுகின்றது என்பதாம்).

## அசத்தைச் சத்தாகக் காணல்

இந்தப் பிரம்ம மெய்ம்மையே எங்கும் எப்போதும் இருப்பதாகும். ஆழ்நினைப்பால் அது மனமாகவும் பந்தப்படும் சீவான்மாவாகவும் விடுதலை பெற்றிருக்கும் பரமான்மாவாகவும் அவ்வாறே பேருலகாகவும் அதனுள்ளிருக்கும் சக்திகளாக எல்லாமாகவும் நிற்பதும் அதுவே.

தாமரை மலர் போன்ற கைகளை உடைய முகிலே! (இராமா!) உலகின் விகற்பங்கள் எல்லாம் மானிடர்க்கு உண்மை போல்வனவாக, உறுதி பெற்றிராத, குழந்தைக்குத் தாய் சொல்லும் கதைகள் போல உறுதி என்று தோன்றும்.

## அசத்தைச் சத்தாக உரைத்தல்

மன வஞ்சனைக்குக் காரணமான கதையைச் செல்வன் இராமனுக்கு, அருந்தவ முனி வசிட்டர் சொல்வார் :

மெய்யறிவு வாய்க்கப் பெறாத சிறுவன் ஒருவன் விரும்பி அன்னையே, நீ எனக்கு ஒரு கதை சொல்வாய் என்று கேட்டான்.

அவள் உள்ளது (சத்தியம்) போல வெறும் பொய்யேயான (முழுதும் மித்தையான) ஒரு கதையைச் சொல்லுவாள்.

இராச குமாரர் மூன்று பேர் தூய வீரமும் நற்குணங்களும் மிகுந்தவர்கள். பாழ் என்ற (சூனிய : இல்லாத) பட்டணத்தில் இருந்து வந்தார்கள்

இம் மூன்று பேரில் இருவர் பிறந்ததே இல்லை. மூன்றாமவன் மூலமாகிய கருப்பத்திலும் இல்லை. எல்லாம் அடைய வேண்டும் என்று கருதித் திரிபவர்களாக விண்ணில் அளவற்ற பழமரச் சோலையில் மேவினார்கள். அதில் செழுமையான பழ வகைகளைத் தின்று வெம்பசி தணிந்து மேலே சென்றார்கள்.

அந்தச் சோலையின் அருகில் மூன்று ஆறுகள், கரை மோதும் அலைகளோடு இருக்கக் கண்டார்கள்.

வேகமாகச் செல்கின்ற நல்ல மூன்று ஆற்றினுள் இரண்டில் நீர் கிடையாது; ஒன்று வெண்மணல் மயமானது. அந்த மூன்றாம் நதியில் அவர்கள் ஆடினார்கள் பருகினார்கள்.

சாயங் காலமாக அடுத்து வரும் பட்டணத்தைச் சேர்ந்தார்கள். அதில் மூன்று வீடுகள் கண்டார்கள். அம் மூன்றில் இரண்டு இல்லவே இல்லை. மூன்றாவது வீட்டுக்குச் சுற்றுச் சுவரோ மேற்கூரையோ இல்லை. சேர்ந்த அம் மனைகளில் சுவரில்லா வீட்டில் அரச குமாரர்கள் குடிபுகுந்திருந்தார்கள்.

ஒருவரும் பாராத நகரில் ஆகாய மனையில் இருப்பவர்களாகிய அவர்கள் மூன்று தங்கப் பாத்திரங்கள் தமக்கு அருகே இருக்கக் கண்டார்கள். அவற்றில் இரண்டு ஓடாக உடைந்தவை; மூன்றாவது தூளாகத் தகர்ந்து போனது. உருவமில்லாத இப் பாத்திரத்தில் ஆறு படி அரிசியில் பத்துப் படி (அரிசி)யைக் கழித்தது போக மீதத்தைப் போட்டுச் சமைத்தார்கள். அங்ஙனம் சமைத்ததை வாயில்லாத எண்ணிறந்த பிராமணர்க்குப் படைத்தார்கள்.

அந்தப் பிராமணர்கள் அனைவரும் நிரம்ப உண்ட பின், மிகுந்ததைத் தாங்கள் புசித்து வேட்டையாடச் சென்று மகிழ்ந்து அவர்கள் மூவரும் அந்தத் தலத்தில் வசித்தார்கள்.

கதையைச் சொல்லித் தாய் இவ்வாறு முடிக்கப் பேதைச் சிறுவன் அதெல்லாம் யதார்த்தம் என்று நம்பினான்.

இவ்வாறே அறிவிலோர் (அஞ்ஞானிகள்) இந்தப் பேருலகையும் உண்மையாக இருப்பதாகப் பார்ப்பார்கள்.

இந்த மனத்தின் விரிவே (விலாசமே) சங்கற்பம்). சங்கற்பம் தன் வேறுபடுத்தும் வல்லமையால் இந்த உலகைத் தோற்றுவிக்கிறது. ஆகவே இராமா, இச் சங்கற்பத்தை நீக்குவாய்; நிருவிகற்பனாகக் கடவாய்.

(பிரமத்தில் ஆரோபிதமாகத் தோற்றின கற்பனைகளை நீக்கி அப் பிரம வடிவான எதார்த்தமாய்ச் சஞ்சரிக்க வேண்டும் என்பதாம்)

## இக் கதையின் உட்பொருள் வருமாறு

அத்துவித ஆன்ம சொரூபத்தைத் தரணிபன் என்றும்,

*சீவ ஈசுவர சகங்களைக் குமரரோ மூவர் என்றும், மித்தையாம் பிரகிருதியில் வசிப்பவர்களைச் சூனிய நகரிலே உறைவோர் என்றும்,*

*சீவ ஈசுவரர் இரண்டும் உதித்திலர் என்பதை மூவரில் இருவர் பிறந்திலர் என்றும், உலகம் கருவிலும் இல்லை என்பதை ஒருவன் மூலமாம் கருவினும் இல்லை என்றும்,*

*சிதாகாசத்தில் என்பதை விண்ணில் என்றும்,*

*மனோராச்சியத்தில் உண்டான அளவற்ற விடய சுக அனுபவத்தை அளவறு பழமரச் சோலை மேவலும். அதில் செழுங்கனி துய்த்து என்றும்,*

*மூன்று அவத்தைகளை மூன்று நன்னதிகள் என்றும்,*

*நனவு, கனவுகளில் சாரம் இல்லை என்பதை ஓடும் நன்னதியில் இவ் விரண்டும் நீர் இல்லை என்றும்,*

*சூனியமான சுமுத்தியை ஒன்று மணலதாம் என்றும்,*

*இவ் அவத்தையில் அழுந்திச் சுகிப்பதை இதனில் ஆடி நீர் துளைந்து என்றும்*

*இனிவரும் சங்கற்ப வசம் ஆவதை மேல்வரு நகர் அடைந்தார் என்றும், சீவ ஈசுவர பிரமக் காட்சியை அறிந்தார்கள் என்பதை வீடு மூன்று எதிர்ந்தார் என்றும் அதில் சீவ, ஈசுவரர் இல்லை என்பதை அதில் இரண்டு இல்லை என்றும்,*

*நிராதாரமான பிரமத்தைச் சுவர் இலா ஒன்று என்றும், அப் பிரம ஆதாரத்தில் இருப்பவர்களை வீட்டில் குடிபுகுந்திருந்தனர் என்றும், அகோசரமான சிதாகாசத்தில் உறைபவரை ஒருவரும் காணா வெளிவீட்டு உறைபவர் என்றும்,*

*சச்சிதானந்த தரிசனத்தைக் கனக பாத்திரம் மூன்று அருகு உறக் கண்டார் என்றும், அதிற் சத்துச் சித்தின் தடிப்பை அதில் இரண்டு ஓடு ஆம் என்றும் ஆனந்தத்தின் நுட்பத்தை மிகவும் தூளாயிருப்பது (தூளியாம்) என்றும் உருவம் அற்ற ஆனந்த மயத்தைச் சொரூபம் இல் கடத்தில் என்றும் காமாதிகளைத் துரோணம் மூன்று (ஆறு மரக்கால் அளவு) என்றும்,*

இவை ஆறும் நசித்த விடத்தில் சேடித்து இருந்த தத்துவ மனத்தை, அகன்று மிகுந்து இருந்த பரு அரிசியை என்றும்,

அம் மனத்தை அனுபவத்தில் கரைத்தலைச் சமைத்து என்றும்,

அதை மகா மவுனத்தில் உல்லாசத்திற் சேர்த்தலை வாயிலாப் பனவர் (பிராமணர்) எண்ணிலர்க்கு முன் படைத்தார் என்றும்,

அவ் அருட் பிரசாதம் பெற்றதை மிகுந்தது அருந்தினர் என்றும்,

சகச நிட்டையில் எதிர் அறச் சஞ்சரித்திருக்கிறார்கள் என்பதை வேட்டைகள் ஆடி இவர்கள் மூவரும் அங்கிருந்தனர் என்றும் கூறினார்.

## 3:8 சித்தன் கதை *

### முன்னுரை

பார்வை நலம் இல்லார், பார்க்கப்படும் யாவும் மெய்யென நம்புவர் என்பதை முன்பு காட்டிய ஆசிரியர், காலம் என்பது மனத்து அளவே, காணப்படுவன மாயமாயிருந்தும் அவை சிற்சக்தியின் விலாசமே (manifestation) என்பதை வருங் கதையால் சான்று காட்டி அறிவிக்கிறார்.

### பிரமத்துக்குப் பந்தம் கிடையாது

அறிவில்லோர் (அஞ்ஞானிகள்) தங்களின் சங்கற்பத்தின் காரணமாக மிகவும் மயங்குவார்கள்; நல்லறிஞர் சுடர்விடும் தம் ஆன்ம விசாரணை அறிவு காரணமாக மயக்கமின்றி இருப்பர். அறிவினால் பொய்ம்மையை ஒழித்து மேலான உண்மையை உணர்வாயாக. உண்மையில் நீ தளைப்புற்று இருக்கவில்லை. அப்படியிருந்தும் நீ தளைப்பட்டிருப்பதாக

* (The story of a siddha)

வேறுபட்டுத் தளராதே. மாசுமறுவற்றதாக அழிவற்றதாக இருக்கும் பரம்பொருள் கட்டுப்படுமோ?

(சைதன்னியம் ஒரு தன்மையதாகப் பிரகாசிக்க அதற்குப் பந்தம் எப்படி உண்டு என்பதாம்?)

இடம், காலம், பொருண்மைகளால் முடிவு பெறாமல், ஒன்றாக, பன்மையாம் விகற்பம் அற்று, முழு அறிவாக (சின் மாத்திரமாக) இருக்கின்ற அழிவிலாப் பரம்பொருள் இருக்க, இந்த உலகில் கட்டு (பந்த)ப் படுவதிலோ விடுதலை பெறுவதிலோ என்ன இருக்கின்றது? எல்லாம் சங்கற்ப விகற்பங்களின் விரிவேயாகும் ('அனைத்தும் பாவனா விகற்பமே') நினைப்பின் விரிவே பந்தமாகும். அதனைத் தீர்த்திடல் (விடுவதே) முத்தியாகும். பொருள்கள் மீது மனத்தின் விளையாட்டினால் அணித்தும் சேய்மையாகும். சேய்மை அணித்தாகத் தோன்றும்.

(மதிக்கின்ற மனத்துக்கே சுக துக்கம் உண்டாம் என்பதாம்)

## மனமே இடம் காலமாக இருத்தல்

மனத்தின் வல்லமையால் கற்பகாலம் ஒரு கணப் பொழுதாகும். ஒரு கணம் கற்ப காலமாம். இவற்றைத் தெளிவாக அறிவிக்கின்ற கதை ஒன்று. அதனால், உலகம் என்கின்ற இந்திர சாலமானது மனத்தால் மேடை ஏற்றி நடிக்கப் பெறுகிறது; மனத்தால் மட்டுமே அது நடை பெறகிறது என்று வசிட்டர் சொன்னார்.

## சித்தன் மயக்குதல்

உத்தர பாண்டவ நாட்டில், ஓர் அரசன் அரிச்சந்திரனின் வமிசத்தில் பிறந்தவன், ஆண்டு வந்தான்.

இலக்குமியும் சரசுவதியும் புகழ்கின்ற அரச குமரன் அவன். விசயலட்சுமி (வெற்றித்திரு) வசிக்கின்ற புயங்கள் உடையவன். லவணன் என்ற பெயர் உள்ளவன். ஆலோசனை வல்ல அமைச்சர் சூழ நவரத்தினச் சிங்காதனத்தில் வீற்றிருக்க இந்திர சால வித்தையில் வல்லவன் ஒருவன் அங்கு வந்து வணங்கிப் புகழ்ந்து தன் வித்தைகளைக் காட்டத் தொடங்கினான்.

## குதிரை தோன்றியது

ஒரு மயில் தோகையை அவன் சுழற்றினான். தூய பரப் பிரம்மத்தால் பல விதமான படைப்புகளை மாயை தோற்றுவிப்பது போலச் சித்தன் சுழற்றுகிற மயில் இறகின் வட்டத்தை மன்னவன் பார்த்தான். அவன் மனக் காட்சியில் பின் வருவன அரங்கேறின :

அவ் விடத்தில் சயிந்தவ (சிந்து) தேசத்து அதிபதி அனுப்பிய தூதன் ஒருவன் தாவும் புரவி ஒன்றைக் கொண்டு வந்தான். அது தேவேந்திரன் ஏறும் புரவிக்கு ஒப்பானது என்று சொல்லுமாறு இருந்தது.

## அறிவு மயங்கல்

'மன்னவனே, உங்களுக்கு எங்கள் அரசன் அனுப்பிய வெற்றிக் குதிரை' என்று அத் தூதன் தெரிவித்தான். அப் பொழுது சித்தன், 'இக் குதிரை போன்றது வேறு எதுவும் கிடையாது. நீ இதில் ஏறுவாயாக' என்றான்.

சித்தன் சொன்னது கேட்ட அரசன் குதிரையை ஒரே நோக்காக, அறிஞர்கள் கவலை தீர்ந்த சமாதியிலிருப்பது போல ஒரு முகுர்த்தநேரம் (கன்னல் ஈரிரண்டு) நோக்கி அங்கு இருந்தான்.

## அறிவு தெளிதல்

வேந்தின் அவையில் இருந்தவர்கள் ஐயமும் வியப்பும் மிகுந்தார்கள். தடாகத்தில் குவிந்த தாமரை மலர்க் கூட்டம் போல முகம் சுருங்கியிருந்தார்கள். நான்கு முகுர்த்த நேரம் சென்றது. அவையோர் மனத் திகைப்பும் அச்சமும் உடையரா யிருக்க அந் நேரம் அரசன் சிங்காதனத்தின் முன் விழலானான். அருகிலிருந்தோர் உடனே அவனைத் தாங்கிக் கொண்டனர்.

## மனோ ராச்சியம் செய்த சரிதை

அரசன் கொஞ்சங் கொஞ்சமாகச் சுய உணர்வு பெற்றான். அவனை 'அமல நெஞ்சினை! அயர்வுற வந்தது எதனால்?' என்று வணங்கி அமைச்சர்கள் கேட்டார்கள். மயக்கம் முற்றும் விலகப் பெற்ற அரசன், சித்தன் அருகில் மயில் தோகையைப் சுழற்றிச் சில சொற்கள் சொல்லத் தலை

மயங்கி ஒரு குதிரையைக் கண்டேன். முழு நினைவுடன் அதன் மேல் ஏறினேன். வேட்டையாடுதற் பொருட்டு, நீண்ட தொலைவு கடிதிற் சென்றேன்.

அறிவறு மனத்தினால் அயர்வுறு செல்வத்தில் மயங்கிச் செல்வது போல மிக நெடுந்தூரம் குதிரை ஏற்றத்தில் சென்று தீயினால் யாவும் வெந்து பொறிகள் சிதறுகின்ற பாலை வனத்தில் புகுந்து குதிரையும் நானும் மெய் வருந்தி, சூரியன் மேற்றிசை அடையுங்காறும் இடர் உற மயங்கி நெஞ்சு இளைத்தேன்.

சம்சார (குடும்ப)ச் சுமையை விவேகிகள் கடக்கும் கொள்கை போலப் பாலைவனத்தைத் தாண்டி, நீண்ட கிளைகளை உடைய நாவல் மரமும் கடம்ப மரமும் எலுமிச்சை மரமும் எங்கும் நெருங்கிப் பறவைச் சத்தங்கள் மிகுந்து இருக்கின்ற இடும்பை தீர் வனத்தில் போய்ச் சேர்ந்தேன். அங்கு ஒரு கொடி என் கழுத்தைச் சுற்றிக் கொண்டது. அச் சமயம் வேகமுள்ள குதிரையானது கங்கை மூழ்கினவர்களின் பாவம் நீங்குவது போல என்னை விட்டு அகன்றது.

கழுத்தில் சுற்றிய கொடியில் ஊசலைப் போலத் தொங்கிக் கொண்டு காட்டில் வீசும் தென்றலால் குளிர்ந்து மிகுந்து திடமுடைய மயக்கத்தில் ஆழ்ந்து நெஞ்சு அயர்ந்தேன். நீராடலும், பூசனையும் தியானமும் நல்ல உணவும் இன்றி இரவு தன் மகிழ்வற்ற பரிவாரத்துடன்-வல்லிருள், துன்பம், பல் கொட்ட வைக்கும் குளிர் ஆகியவற்றுடன் - வந்தது.

மன இருளை நீக்கும் அறிவு போல,அந்த வலிய இருட்டை இரவி வந்து நீக்கக் கண்களால் நோக்கினேன். கழுத்திற் சுற்றிய கொடியை அறுத்தேன். அவ்விடத்தில் இறங்கிப் பொழிலுள் புகுந்தேன். அங்கு ஒருவரும் இருக்கவில்லை. கனமான மத்தியானத்தில் மூன்றே முக்கால் நாழிகை (ஒன்றரை மணி நேரம்) கழிந்த பின்பு உயர்குலம் அல்லாத ஒருத்தியை இருளைச் சந்திரன் சந்தித்தது போல அவள் முன் எதிர்ப்பட்டேன்.

கறுத்த நிறமும் கறுநிற ஆடையும் கையில் அன்னமும் உடையவளாக என் அருகில் அவள் வரவும் பசிப்பிணி பொறுக்காமல் அவளை நான் 'அன்னமே! அன்னம் தருவாய்'

என்று இரந்தேன். பசியினால் எவர்க்கும் தாழ்வு வந்துறும் என்று கண்டேன். சிந்தித்தது வருவதற்குத் தக்க தவம் செய்யாதவர்கள் விரும்பிய பொருள் போல, அப் பெண் அன்னம் கொடுக்க வில்லை.

சோலைகள் தோறும் சுற்றிச் சென்ற அவள் பின்னே தொடர்ந்து வாடுகின்ற என் பசித் துன்பத்தைச் சொன்னேன். அந்தக் கரியவள் சொல்வாள் : நான் நீசக் கன்னிகை. உனக்கு என் அன்னம் ஆகும் என்றால் எங்கள் ஊரில் என் தந்தையின் முன் வந்து என்னை மாலையிட்டுச் சேர்வையானால் இச் சமயத்தில் (அன்னம்) அளிப்பேன் என்று சொன்னாள். அதற்கு நான் இசைந்தேன். விருப்போடு அன்னம் அளித்தனள்.

அவள் கொடுத்த பாதி அன்னத்தை அருந்தி, நாவற் பழக் கனிச்சாறு பருகி, தளர்ச்சிக்குக் காரணமான பசித் துன்பம் நீங்கி இருந்தேன். நான் நல்லவன் என்ற சொல்லி என்னைத் தன் கையில் பிடித்துக் கொண்டு, ஒருவனுடைய சூக்கும உடம்பை நரகத்துக்கு இட்டுச் செல்வது போல என்னை அழைத்துத் தன் தந்தை முன் கொண்டு போயினாள்.

எனக்கு நட்புள்ள இவனை என் கொழுநனாக எனக்குக் கொடுப்பாயாக என்று அந்தப் பெண் கேட்கத் தடையின்றித் தந்தையும் இசைந்தான். பைசாசங்கள் உலாவும் அந்த வனத்தை விட்டு, யம தூதன் போன்ற அந்தக் கரிய நீசன் அழைத்துச் சென்று, உண்ணும் புலால் நாற்றம் வீசும் அவன் ஊரில் திருமணம் செய்விக்கக் கொண்டு போனான்.

குரங்கும் குதிரையும் கோழியும் காக்கையும் பன்றியும் என்று பல வகைப்பட்ட மாமிசங்களை அரிந்து தோரணங்களாகக் காயப் போட்டார்கள். பறவைகள் வீழ்ந்து அவற்றை அலைத்தன. உலாவிய சிறுவர்களின் கையிலிருக்கும் மாமிசங்களில் ஈன ஈக்கள் மொய்த்தன. இரத்தமும் எலும்பும் அளவற்றிருக்கின்ற சிற்றூரில் வாழை மரங்களைக் காலாக நாட்டிய குடிலில் களிப்புடன் புதுமையான திருமணம் தொடங்கினார்கள்.

வீட்டின் கூன்கிழ மாமியானவள் பெரிய தசையாலான தன் கண்களால் விழித்து நோக்கி மருமகன் நல்லன் என்று மகிழ்ந்தாள். அங்குக் கடையர் அனைவரும் கூடினர். பறைகள்

முழக்கினர். ஊனும் கள்ளும் தாராளமாக வழங்கப்பட்டன. ஒருவன் செய்யும் பாவமானது நரகத்தில் வருந்தும் 'யாதனா சரீரத்தை' (body of suffering)க் கொடுப்பது போல அந்த நீசன் கன்னிகாதானம் செய்தான்.

அவர்களின் வழக்கப்படி திருமணம் ஏழு நாள் நடைபெற்றது. கடிய பாவங்கள் உருவு கொண்டது போல, திருமணம் முடிந்ததும் அந்தப் பெண்ணுடன் எட்டு மாதம் கழித்தேன். முகை போன்ற தனங்களுடன் பூத்திருந்த அவள் என்னுடன் புணர்ந்து சுகிக்கும் காலத்தில் கொடிய விபத்து ஆக ஒரு குழந்தையைப் பெற. அக் குழவியும் உருவு கெட வெந்த விறகைப் போன்ற கரி நிறத்தோடும் மூர்க்கர்தம் மனம் போலும் வளர்ந்தது

அறியாமையைக் கொடுக்கின்ற பிறவி போலப் பின்பு மூன்று ஆண்டில் ஒரு மகப் பெற்றாள். ஆசையில் தோன்றும் அனர்த்தம் (துன்பம்) போல அவள் திரும்பவும் ஒரு குழந்தையையும் அளித்தாள், இம் மனைவி மக்களோடு நான் நெடுங்காலம் கூடியிருந்தேன். குடும்பச் சுமையின் இன்னல்களாலும் குடும்பத்தார் படும் வருத்தத்தினாலும் நான் வருத்தப்படும் துன்பத்தினாலும் என் யாக்கை மூப்படைந்தது.

வெம்புறு மூப்பால் மெலிந்திருக்கும் காலத்தில் அந்த விந்திய மலையின் அடிவாரப் பக்கத்தில் மழை பொழியாமல் மண்ணின் நீர் சுண்டிப் பசியினால் உயிரெலாம் துடிக்கக் கிளைகளை யுடைய மரங்களும் படரும் கொடிகளும் புல்லும் எரிந்து எங்கும் கோடையால் புழுதியாகும் படி வரவும் எம் புது உறவினர் பலர் இறந்தனர். பலர் பல தேயங்களுக்குச் சிதறி ஏகினர்.

என் புத்திரர்களில் இருவர் தோள்களிலும் மற்றொருவனைத் தலை மேலும் இருக்கும்படி தாங்கிக் கொண்டு என் மனைவியோடு ஏகி உடம்பை வெப்பக் கதிர்கள் எரிக்க; இறந்து விடாமல் அந் நாட்டை அகன்று ஒரு பனைமரத்தடி நிழலில் மைந்தரை இறக்கி விட்டுப் பழைய நல்வினையுடன் பொருந்திய சுகத்தைப் போலச் சற்று நேரம் பதைப்பு ஒழிந்து இருந்தேன்.

வளைதரு மூப்பாலும் வழிவரும் துயராலும் மைந்தர்கள்

இருவரையும் கட்டிக் கொள்ள மயக்கமோ உறக்கமோ என்னும்படி என் மனைவி சாய்ந்தாள். அவள் இறந்தது கண்டு உளம் கரைந்து நான் இருந்தேன். இளைய மகன் துயிலாமல் இரு கண்களிலும் நீர் பெருக அழுது, இரத்தமும் கறியும் யான் புசிக்க வேண்டும் இப்போது தா என்றான்.

பிரியம் உள்ள இளைய குழந்தையானவன் என் கண் முன் துடிக்க நான் செய்வது ஒன்றும் இன்றி, உயிர் பிரிந்திருக்கும் கட்டை போல் இருந்தேன். விடாமல் அவன் அழுத கண்ணீரைப் பார்த்து மிகவும் கரைந்து இவன் பிழைத்தல் அரிது என எண்ணி நானும் உயிரை விடும் பொருட்டுக் காட்டாக்கினியை (வனக் கனலை) வளர்த்து அதில் வீழும்படி நெருங்கி நின்று உகைத்தேன் (எழுந்தேன்). இச் சிங்காதனத்திலிருந்து கீழே விழுகின்ற சமயத்தில்,

## சீவ அவத்தைகளை அறிந்தேன் எனல்

என்னைத் தாங்கின நீங்கள் அனைவரும் 'சய! சய!' என்று சொல்ல, தாக்கப்பட்ட பல இசைக் கருவிகளும் முழக்கமிட இங்கு உணர்வு அடைந்தேன். நீசன் அல்லாதவனாக, லவண மன்னன் ஆனேன். இந்தச் சித்தனின் வசிய சக்தியால் நான் என் உணர்வுகளை இழந்திருந்தேன். சீவனுக்கு (the ego of the man) அவத்தைகள் (states of experiences) பல உரிமையாக இருக்கின்றன என்று தெரிந்து கொண்டேன். இவ்வாறு அரசன் இயம்புகையில் சாம்பரிகன் என்ற அந்தச் சித்தன் ஒளித்தனன் (மறைந்தனன்).

## சித்தன் நீங்குதல்

அவையில் இருந்த அமைச்சர்கள் சித்தன் என்ற இவன் யார் என்று விசாரிக்கவும் கண்ணிமைப் பொழுதில் அவன் காணாமற் போயினான். பொருந்திய உலகமான மனமே என்று வேறே புலப்படக் காணும் பொருட்டு விடுத்த திருத்தமான தெய்வ மாயை இது (இந்தச் சித்தன்) ஆகும். சொல்லப்பட்ட இச் செய்கைகளினால் தீரமுள்ள அரசனே, பிரமத்தின் தற்பிரகாசமே (the self light of parabrahman) மனமாகிய பெரிய சகமாம். (appearing as mind or this universe) என்று அறிஞர்கள் சொன்னார்கள் என்று வசிட்ட முனி சொன்னார். □

## 3:9 உற்பத்திப் பிரகரண முடிவுரை*

"மனத்தின் செயலே செயலாம்; மனத்தினால் விடுபட்டதே விடுபட்டதாம். உண்மையான மனத்தின் அலைவு (சஞ்சலம்) விடுத்தவர்கள் மிகவும் உத்தமமான நிட்டையுள்ளவர்கள். மனம் கெட்டால் மந்தர மலையால் சுழலாத பாற்கடல் போல (அறிவு உலைதலின்றி)ப் பிறப்பு இறப்பு என்கின்ற மாயை மயக்கம் (சம்சார மயக்கம்) கெடும்".

என்று வசிட்ட முனிவர் மீண்டும் உரை செய்வார்.

பல போகங்களினது சங்கற்பம் அடைந்திருக்கின்ற மன விருத்தி (mind's modifications) என்னும் முளையினால் மகா மாயா மோகம் என்னும் நச்சு மரமானது வளரும். மன நோய்க்கு மேலோர் விதித்த மருந்தானது வருத்தமில்லாமல் சுளுவாக மனத்தினால் செய்யப்படும் இதைக் கேட்பாயாக.

(மனச் சங்கற்பமே மாலை முதலியவைகளாகத் தோற்றும் என்பதாம்)

மிகவும் விருப்பம் தரும் பல் பொருள்களையும் மேவாது நீக்கினவர்கள் மனத்தை வென்றவர்கள். சுகமாகவும் இலகுவாகவும் தனக்குரித்தாகவும் இருக்கின்ற துக்கமற்ற வயிராக்கிய ஞானம் (நிராசை அறிவு) பெறாதவர்கள் உலகின்கண் உள்ள மானிடக் கிருமிக்கு இணையாவார்கள். சான்றோரின் உபதேசத்தாலும் ஈசுவரன் உரைத்த சுருதி முடிவாகிய மகா வாக்கியப் பொருளாலும் ஆன்ம சாதனம் பழகி நான் என்னும் சங்கற்பம் இறந்த மனத்தினால் புறவயமாய் வருந்து மனத்தை உள் முகமாகச் சுகிக்கத் திருப்பலாம்.

(சுருதி யுக்தி அனுபவம் உள்ள மனத்தினால் அவையின்றிய மனத்தைக் கெடுக்க வேண்டும் என்பதாம்)

இரும்பால் (அரத்தால்) இரும்பு திருத்தம் உறுவது போல் சன்மார்க்கத்தின் முயலுகின்ற (சுத்த) மனத்தால் (அசுத்த) மனம் திருந்தும். மீளாத இச்சைத் தியாகமே உருவாகியும் பொருந்திய தனது முயற்சியினால் சாதிக்கத் தக்கதாகியும்

* The conclusion of Utpati Prakarana

மோட்ச விருப்புடையவர்களுக்கு எளிதாயும் இருக்கின்ற வெய்ய மனத்தின் ஒழிவே பெரும்பாரம் நீங்கிய பர கதியாம். பிறிது ஒரு கதியும் நன்மை ஆகாது.

ஒன்றை விட்டு ஒன்றில் தாவுகின்ற மனத்தைச் சங்கற்பமின்மை என்ற வாளால் அறுத்தால் எவ்விடத்தும் நிறைந்து யாவும் அதுவாம் பொருள் தோன்றும். இந்த வழியிலிருந்து அறிவால் விரும்பத் தக்க மனத்தை விழுங்கி அதற்கு மேலானதாகச் சம்சார விகற்பம் இல்லாத சகலத் தியாகமான அறிவினால் ஆன்ம ஞானத்தை அடைந்து மனத்தை விழுங்கும் (ஐக்கியம் செய்கின்ற) பொருள் (சொரூப ஞானம்) அறிந்து கொள்வாய்.

(மனச் சங்கற்பம் இறந்த விடத்து அப் பரம சுகம் உண்டாம் என்பதாம்.)

கேட்டல் (சிரவணம்) முதலிய வகைகளால் வருந்தி முயன்று மனத்தைக் கெடுத்து இல்லை (அசத்) உண்டு (சத்) என்று உரைக்கக் கூடாமல் சுயமா யிருந்த பிரம பதத்தில் இருப்பாய், துன்பமற்ற மோட்சச் செல்வத்தை இடரின்றித் தைரியத்தினால் அடைய வேண்டும். மனத்தை வென்றால் மூன்று உலகமும் துரும்பாம். திருந்த, இனியவை என்ற சொல்லப்பட்ட விடயங்கள் யாவும் தீமையாகத் தோற்றினால் மனம் மாளும்.

இருதய ஆகாயத்தில் (சித்த விண்ணில்) திகழ்கின்ற ஞான நிட்டையால் உண்டாகும் பரஞானம் என்கின்ற உரிய சக்கராயுதத்தினால் ஐயம் அற மனத்தை அறுப்பாய் (கெடுப்பாய்). கெடுத்த பின்பு மெத்து (மிகுந்த) துயர் நீங்கும். அவன் நான் என்றும் இவன் நான் என்றும் பொருந்தப்பட்ட யாவும், அது எனதாகவும் இது எனதாகவும் வைத்திருக்கின்ற இவையே மனமாகும். இம் மனத்தை அபாவனம் (non-thought) என்னும் வாளால் அறுத்திடுவாய்.

(ஞான திருட்டியினால் அவ் விடயம் கெடும் என்பதாம்)

மிகவும் கூட்டமான மேகங்கள் அனைத்தும் பெருங்காற்றால் நீங்குவதைப் போல வரும் கற்பனை நாசத்தால் மனமானது (சித்திற்) சென்று இறக்கும். மனம் இறந்தால் மோதுகின்ற ஊழிக் காற்றும் பொங்கு கடலும் புவி முழுதும்

உருகும்படி எரிக்கின்ற பன்னிரு சூரியரும் ஏக காலத்தில் வந்தாலும் துன்பம் உண்டோ?

(முடிவற்ற இடர்கள் உண்டாயினும் அவ் இடர் இல்லாதிருப்பதே மனம் இறந்த குறி என்பதாம்.

மனத்தைக் கொண்டே மனத்தைக் கெடுத்தால் தானாகி உலகங்கள் அனைத்திற்கும் முதன்மையான தலைமை போல் ஆனந்தமானது முதிர நிறைந்து கற்பனையற்ற மோட்சப் பேரரசுக்கே நெருங்கித் திகழ்கின்ற தற்பதம் (பிரம பதத்தை) சேர்ந்து சுகத்தை அடைவாய். பல விதமாக நினைத்து மிகுந்த பொய் என்னும் செல்வமுடைய மனமே ஆன்மாவுக்குப் பகையாம்.

மனம் என்னும் பகைவன் பல விதமான உறுகாட்சிகளால் (பொருந்திய விடய அனுபவங்களால்) உன்னை வெல்லாமல் தெளிவாதற்கு உரிய சந்தோடம் என்னும் செல்வமுடைய நிராசையினால் கள்ளமுள்ள தனிமையான மனத்தை வெல்வாய். கற்றோர்க்கு அன்பாகவும் நின்மலமாகியும் மிகவும் குளிர்ந்து இருக்கின்ற பூரண பாவமானது (all - full Bhava state) அகம்பாவத்தினால் கூறு ஆகாது.

குறைவும் நிறைவும் இல்லாத பூரண பாவத்தால் (all-full Bhava) பிறப்பில்லாத பிரம ஆனந்தத்தைக் கொடுக்கின்ற பிரம பதமானது அழிவற்ற பதமாகும். ‘அலைவால் வீழ்வுறாத மனம் அரிதாம்’ வெம்மையானது கனலை விடாதது போலத் தாழ்வு செய்யும் அலைவு (fluctuation) ஆனது மனத்தை விட்டு நீங்காது. “அறிவின் அலைவு மனமாம்” (ஞானத்தினுடைய சலன சக்தியே மனமாம்).

“அலையும் அந்த மனம் உலகாம். அலைவு போகில் (சலனம் அற்றால்) மனம் கெடும்”. இந் நிலையே நிட்காம தவமும் ஆன்ம ஞான நூல்களின் அந்தரங்கமும் நிருமலமான வீடும் (மோட்சமும்) துணி பொருளுமாம். மனத்தின் நீங்காத சலனமே மாயை என்றும் தொடர்கின்ற அசுத்த வாசனை என்றும் பெயர் பெறும். அலையும் மனமும் அச் சலன சக்தியேயாம். மாறா ஆன்ம விசாரத்தால் அந்த மனச் சலன சக்தியைக் கெடுப்பாயாக.

(ஆன்ம விசாரத்தால் மனச் சலனத்தைக் கெடுக்க வேண்டும் என்பதாம்)

அற்பமாகி நின்ற விரும்பு பொருளை விடுதலால் (இஷ்ட வஸ்து தியாகத்தால்) மேலாம் நலம் (பரம இன்பம்) உண்டாகும். உள்ளதாகிய பிரமத்துக்கும் இல்லாததாகிய சகத்துக்கும் நடுவிலிருந்து சித்திலும் சடத்திலும் பொருந்தி நடுநின்று அலைவதே மனமாகும். இம் மனமானது அறிவின் முயற்சியாகும் சித் (ஞான சொரூபம்) ஆகும். அறியாமையின் (சடத்தின்) முயற்சியினால் சடம் (சகம்) ஆகும்.

"ஊக்கம் உளதாய் மனம் ஒன்றில் உறைக்கில் அதுவாம்" (முயற்சி யுள்ளதாய் மனமானது ஒன்றில் அழுந்தினால் அப் பொருளேயாம்) ஆதலால் (விடயத்தில்) பாய்கின்ற மனத்தை (ஆன்ம ஞான) மனத்தால் நீக்கி மேற்சென்று தளர்வின்றிச் செல்வம் என்னும் அழிவற்ற பரமபதத்தை விரைவில் அடைவாய்.(சலனமுள்ள) மனத்தை (சலனமற்ற) மனத்தினால் (அரசர்களைத் தன் ஆக்கினையில்) நிறுத்துகிற பேரரசன் நெறி போல நீக்கித் தன்னிலையில் நிறுத்தல் வல்லமையான தன்மையாம்.

பிறவியாகிய கடலில் காதல் (ஆசை) என்கின்ற பெருவாய் உடைய முதலையானது பிடித்து ஈர்க்க மரணம் என்னும் .சுழலில் அகப்பட்டுச் சுழல்கின்றோம் என்று அறிபவர்களுக்கு மனம் என்னும் கப்பலானது எட்டும். வீரமாக (அசுத்த) மனத்தைத் (தூய) மனத்தால் மாய்த்துப் பிறப்பில் வருந்தாமல் தூய மனத்தை உறவாகக் கொண்டு உன்னை (ஆன்மாவை) இராமா நீ உய்விப்பாய் (ஆனந்த வாழ்வில் அடைவிப்பாய்) "உயிர்க்குப் பிறரால் உய்வுண்டோ?" (ஆன்மாவுக்கு வேறு ஒருவரால் வாழ்வுண்டாகுமோ?

எந்த எந்த வாதனைகள் (வாசனைகள்) (pain or impediments) மனத்தின்கண் உதித்தனவோ அவ் வாதனைகள் யாவும் அந்த அந்த இடத்தில் அழிக்கப்படல் வேண்டும். அந்த அழிப்பே மாயைக்கு அழிவாகும். போகம் (enjoyments) என்றும் பேதம் (conceptions of heterogeneity) என்றும் சொல்லிய இவ் இரண்டு வாதனைகளையும் நீக்கி வந்திருக்கின்ற பாவம் (Bhava : existence) அபாவம் (non-existence) என்றும் இரண்டையும் மாற்றி நிருவிகற்பமாய் (without least stain) நீ மகிழ்ந்திருப்பாய்.

(சங்கற்பம் உதித்த இடத்து ஒடுக்குவதே அதைக் கெடுக்கும் வழி என்பதாம்)

காண்பொருள்களின் மேல் விருப்பு அற்றால் அது (இச்சாத் தியாகமே) அஞ்ஞானமும் மனமும் மாண்டதுவாம். "பொறி பயில் ஆசையே துன்பமாம் நிராசையே புகலரும் முத்தியாம் இன்பம்" (Desire for objects is pain; non-desire is Nirvanic bliss) தடையற்ற தனது முயற்சியால் அது உண்டாகும். பேதையர் உண்டென்பதாயும் நிறைந்து பொய்யாயும் பெயர் மாத்திரமாயும் இருக்கின்ற அறியாமையானது சித் எனத் தேர்ந்திடில் (சகலமும் சைதன்னியம்-consciousness என்று உணரில்) இல்லாது போம்.

(நிராசை வடிவான ஞான திருட்டியால் அச் சங்கற்பம் நீங்கும் என்பதாம்)

இவ்வாறு வசிட்டர் சொல்லக் கேட்ட இராமன் 'அறியாமையின் செல்வத்தில் உண்டாகி மிகவும் நெருங்கி யிருக்கின்ற இவ் இருள் (அறியாமை) தான் இங்கு ஒன்றும் இன்றி எப்படிப் போய் விடும்?. மேலும் நீங்கள் உரைத்தருள வேண்டும்' என்று கேட்டான்.

வலிமையான தவமுடைய வசிட்டர் சொல்வார்.

வலிய துயர் என்னும் முள் நிறைந்த கொடிய பிறப்பு என்னும் மலைச் சார்பில் நிலைபெற்ற ஆன்மாவை ஒன்றத் தள்ளி அதனோடு கூடத் தானும் வீழ்கின்ற மாயையானது உள்ளது என்று பார்க்கின் உண்மை நோக்கு (vision of reality) இல்லையாம்.

பிறப்பென்னும் அவித்தையின் முடிவாய் எங்கும் நிறைந்திருக்கின்ற பெரும்பொருள் தோன்றில் "ஆசைகளே மாயையின் வடிவம், மாயை அழியின் மோட்சம்" என்று உணர்வர். தாழ்ந்த சங்கற்பம் நீங்கின் அவித்தை அழியும். ஞான சூரியன் இதயத்தில் உதிக்க அஞ்ஞான இருள் அக்கணமே விலகிவிடும்.

(ஞான ஒளி உதயத்தில் அறியாமை இருள் நீங்கும் என்பதாம்)

"கண்டன அனைத்தும் மாயையே என்றீர்கள். கண் (ஞானம்) என்கிற ஆன்ம பாவனையால் தடையின்றி அந்த மாயையானது கரைந்து போகும் என்று சொன்னீர்கள். தத்துவமாவது (ஆன்மா என்பது) யாது?" என்று இராமன் கேட்டான்.

எண்ணத் தக்க தவத்தை உடைய வசிட்டர் உரைப்பார்.

காண்பவற்றிடைச் சமமாயும் உள்ளது என்று சொல்லப் பட்டதாகியும் பெயரில்லாததாகியும் இருக்கின்ற உயர்ந்த உணர்வு (மேலான ஞானமே) தற்பரமாம் உணர்வே (பிரம ஞானமே யாம்)

(சம திருட்டியான ஞானமே காண்பவற்றை-திரிசியத்தை- அழிக்கும் என்பதாம்)

இவை என்று சுட்டப்பட்ட அனைத்தும் ஞான வடிவாகியும் நித்தியமாகியும் இருக்கின்ற பிரமமன்றி வேறில்லை. நவையுறு மனமாகிய கற்பனையில்லை. மரணமும் பிறவியும் என்று சொல்லப்பட்ட இவை எல்லாம் மூன்று உலகங்களிலும் இல்லை அறுவகை (பிறப்பு, இறப்பு, திரிபு, வளர்ச்சி தேய்வு மாய்வு,) விகாரமும் இல்லை. இரண்டற்ற பூரணமாகிய அடையாளம் பெற்றிருக்கின்ற அறிவு மாத்திரம் காண நின்றுள்ளது (பிரத் தியட்சமாயிருக்கும்).

முழுமையாகியும் தனி (சுய) ஒளியாகியும் அழிவற்றதாகியும் தூயதாகியும் விரிவாகியும் விரிவற்ற அறிவு மாத்திரமாகியும் துன்பம் சற்றும் இல்லாததாகியும் ஆறியும் (உபசாந்தம் ஆகியும்) பொருந்துதற்கு அரிய இனியன யாவும் கலந்து, அதனால் வேறுபாடு அற்றதாகியும் இருக்கின்ற ஞானான்மாவில் தாவுதற்கு அரிய தன் சங்கற்பத்தையே (நினைவை) விரும்பித் தன் வயத்தில் ஓர் அறிவு (an intelligence) எழுந்தது)

(சின்மாத்திரமான பிரமத்தினின்றும் தனது நினைவான ஒரு போதம் உதித்தது என்பதாம்)

சொல்லிய ஞானமானது அளவற்ற சங்கற்பத்தைச் செய்து அதில் செல்லும் அறிவானது இந்தப் பிரமத்தின் மனமே யாம், இப் பிரமத்துக்கு அளவற்ற சக்திகள் உண்டாயிருக்கும். இரண்டில்லாமல் எவ்விடத்திலும் சமமாகச் செய்யும் வேகமான இம் மனத்தில் நீரில் உண்டாகும் அலைகளைப் போலப் பலவகையான வல்லப சக்திகள் (diverse supreme sakthis) தோன்றும்.

உள்ளே பொருந்திய சங்கற்பத்தினால் உண்டாகிய (பேத ரூபமான) மனவடிவானது அச் சங்கற்பத்தினால், தள்ளுறு

காற்றால் உண்டாகிய தீக் கொழுந்து ஆனது, காற்றினால் அணைவது போல ஒடுங்கும்.

"நான் நடுவான பிரம சொரூபம் அன்று" என்று பார்ப்பதே மனத்திலுள்ள பந்தமாம். 'எள்ளளவாகிலும் பிரிவிலாப் பொருளே (பிரம சொரூபமே) நான் என்கின்ற திட பாவனையே முத்தியாம்.'

நான், மடமையும் துயரும் உறுப்புகள் அமைந்த வடிவமும் ஆகிய இவற்றை உடையேன் என்று பரவி யிருக்கின்ற அவற்றுக்கு இசைந்த பலவிதமான நடைகளினால் ஆசையும் கட்டுப் படுதலும் (பந்தமும்) உண்டாகும். சடமாகிய இவற்றில் யாதொன்றும் நான் அல்லேன், ஊன் நரம்பு அஸ்தி (எலும்பு) புண்ணீரும் நான் அல்லேன், உடலின் மேலான பரமம் (பிரம சொரூபமே) நான் என்கின்ற உறுதி உடையவர்கள் மாயையை அறுத்துத் தன்னை அறிவார்கள்

தான் அல்லாதனவாகிய உடல் முதலிய பொருள்களில் நான் என்கின்ற பாவனையாகிய ஈனமாகிய மாயையை உண்டென்று உணர்விலோர் நியமிக்க, உண்மையாம் உணர்வுடையவர்களுக்கு அம் மாயை இல்லாததாம். மனம் எண்ணினதை அரசர்களுக்கு மந்திரியைப் போல விரைவில் ஐம்பொறிகள் செய்யும். ஆகவே நன் மதியாலும் நன் முயற்சியாலும் போகத்து ஆசை என்றும் வாசனையை வேருடன் கெடுப்பாய்.

(விடய போக இச்சைத் தியாகத்தால் பிரம அனுபவம் உண்டாம் என்பதாம்)

என் மைந்தர் என்றும் என்னுடைய திரிசியம் என்றும் நான் என்றும் இவன் என்றும் அவன் என்றும் இது என்றும் அது என்றும் சொல்லப்பட்ட மிகுந்த வாசனையானது மின்னலைப் போல் உடைகின்ற நிலைமையுள்ள இந்திர சாலத்தைப் போன்று வளரும். நன்மையுள்ள அறிபவன் ஆகி அழிவுற்ற மாயையிலிருக்கும் நினைப்பை விடுப்பாய். உன்னுடைய வடிவில்லாத அவற்றை (மைந்தர் முதலிய அம் மாயா சம்பந்தங்களை) நீ என்று எண்ணி அஞ்ஞானிகளைப் போல் வருத்தப்படுவது என்ன?

மூடமாகியும் சடமாகியும் இருக்கின்ற உடம்பு என்பது

யார்? அதன் பொருட்டு சுக துக்கங்களில் மூழ்கி ஒரு பயன் அற வருந்தும் நீ என்பது யார்? ஆச்சரியம், ஆச்சரியம்! இந்த ஒரு விசித்திரமானது இருந்த வகையைக் காண்க. ஒன்றாகியும் மெய்யாகியும் இலங்கும் பிரம சொரூபமானது எவ்விடத்திலும் நிறைந்திருக்கவும் தோன்றாமல் துன்பமாகியும் பொய்யாகியும் விளங்குகின்ற மாயையானது தோன்றாமலிருக்கவும் தோற்றும்.

(ஆன்ம சொரூபம் அன்றி இத் தேகம் அன்று என்பதாம்)

நல்ல படிகங்கள் (crystals) அவற்றை ஐந்து நிறங்கள் பற்றிப் பாய்ந்திருக்கத் தாம் அவற்றைப் பற்றாமல் இருத்தல் போல் அளவில்லாத செய்கைகள் இருந்தும் பதில் விருப்பம் இன்றி அத் தொழிலை நடத்து என்று அருந் தவ வசிட்டர் நெடிது உரைத்தார். வால்மீகி சொல்கிறார்; பரத்து வாசரே, கேட்பாய் நிறை குணத்து இராகவன் கேட்டுக் குற்றமற இதயத் தாமரை மலர்ந்து வசிட்டரை நோக்கி, இதைச் சொன்னான் :

ஈது ஓர் அதிசயம் இருந்தவாறு என்னே! தாமரைத் தண்டின் நூலால் மலைக் கூட்டங்கள் பிணிக்கப்பட்டு மிகவும் நெரிபடுவது போல் வெறும் பொய்யான மாயையினால் பற்பல துயரம் அனுபவித்தலாம்! துரும்பானது பருத்த வயிரத்திலும் வலிமை அடைவது போல உலக சிருட்டியானது பொய்யாய் விளங்கும் அம் மாயையினால் உறுதியைப் பொருந்துதலாம் என்று சொல்லித் திரும்பவும் இராமன் உரைப்பான் :

இன்னும் ஓர் ஐயம் என் மனத்து உள்ளது. முன் சொன்ன லவண மன்னன், பெரிய துன்பம் அடைந்தது என்ன காரணம் என்று இராமன் கேட்க, வசிட்ட மாமுனியானவர் உரைப்பார்.

## லவணனின் மனவேள்வி

குற்றமற்ற மனத்தினால் செய்ததனால் அச் செயலின் பயனை உடல் அனுபவிக்க வில்லை. சொல்லப்பட்ட அவ் அரசன் ஒரு நாளில் சிங்கார வனத்தில் ஒருவனாயிருந்து கொண்டு மனத்திற் சிந்திப்பான்.

நம் பாட்டன் ஆகிய அரிச்சந்திரன் தேசத்தோடும் செய்த

பெருமையான இராச சூய யாகத்தை நாம் மனத்தினால் செய்வோம் என்று நினைத்த மனத்தினால் வேள்விக்கு உரிய கலப்பைகளையும் அனைத்துத் திரவியங்களையும் உண்டாக்கி (சங்கற்பித்து)ச் சுருதி நூல் வழி வேள்விச் சாலையில் புகுந்து முனிகளை வரித்து (நியமித்து) அருச்சித்து வாருங்கள் என்று தேவர்களை மறை மொழியால் (மந்திரங்களால்) வரவழைத்து மிகுந்த அக்கினி வளர்த்தான்.

தேவர்களுக்கும் தவசிகளுக்கும் அந்தணர்களுக்கும் ஆராதனைகளைக் கடைப்பிடித்து ஒரு வருடம் தொடர்ச்சியாக நடத்தித் தன் பொருள் முழுதும் தொலையத் தானமாய் வழங்கித் திடமுறும் மனத்தினால் யாகத்தை நிறைவேற்றினான். பகற் பொழுது சென்றது. தன் அகமுகம் (intense reverie) நீங்கியதும் இரவு வருவது அறிந்தான். இந்தக் கதையால் நீ அறிய வேண்டுவது, ஒன்றைச் சார்ந்த மனமே இன்ப துன்பங்களை அடையும்படி அனுபவிக்கிறது என்பதாம்.

(சுக துக்கம் மனத்துக்கே அன்றி உடம்புக்கு இன்று என்பதை அறிவித்ததாம்)

## சித்தன் கதை

சாம்பரிகனின் (சித்தனின்) குணத்தைச் செப்பிடக் கேட்பாயாக. தெளிந்த லவண அரசனது சபையில் முன் அடைந்து இந்திரசால வித்தையால் மயக்கம் செய்து மறைந்தான். அவ் விடத்தில் இத்தனை செயலும் கண்டு கூட, இருந்த என்னை (வசிட்டரை) இது என்ன காரணம் என்று கேட்க வல்லமையுடைய அவ் அரசனும் மந்திரி முதலிய யாவரும் கேட்க உள்ளத்தில் முக் காலத்தையும் உணர்ந்து பின் வரும் விளக்கம் சொன்னோம்.

இவ் விடத்து இத் துன்பம் வந்த காரணத்தைச் சொல்ல இர்ாகவ, கேட்பாயாக. இராச சூய யாகத்தைச் செய்த யாவரும் பன்னிரு வருடம் வலிய துன்பத்தில் தீங்குறு வருத்தம் அடைவர். லவணனும் தனக்கு உரித்தான மனத்தினால் இராச சூயம் கூட்டிச் செய்த படிக்கு இந்திரன் துன்பம் கொடுக்கு நிமித்தம் விண்ணுலகத்தினின்று ஒருவனை ஏவினான். அத் தேவதூதன் சித்தனாக வந்து (யாகம் செய்து) லவண

அரசனுக்கு அரிய துன்பத்தை கொடுத்து மீண்டு தனது இருப்பிடம் போயினான்.

(லவணன் துன்பம் அடையும் நிமித்தம் வந்த காரணம் உரைத்ததாம். இராச சூயம் செய்தவர்க்குத் துன்பம் வரும் என்பதற்குப் பிரமாணம் அரிச்சந்திரன், தருமபுத்திரன் முதலியோர் எனக் கொள்க)

## ஞானமும் அஞ்ஞானமும்

இன்னும் ஒன்று சொல்லக் கேட்பாய். மடமையாம் (அஞ்ஞான) பூமி ஏழு. முடிவாகிய ஞானபூமி ஏழு. இவ்விரண்டும் தம்மில் ஒன்றுக் கொன்று பற்று (சம்பந்தம்) உள்ளவை. ஒன்றோடு ஒன்று அளாவி (வியாபித்து)ப் பயில்வனவான வழிகள் அளவில்லாதனவாம். 'சொரூப நிலைபெறல் வீடு ஆகும். அதின் நழுவுறுதல் நான் எனல்' (கண்கூடான சொரூப நிச்சயம் பெறுவதே மோட்சமாம். அச் சொரூபத்தை விட்டு நழுவுதல் உடல் முதலியவற்றை நான் என்கின்ற பந்தமாம்).

இப் பூமிகளைச் சுருக்கமாக உரைத்தனம். அதனை- மெய்யை - உணர்ந்தவர்களுக்கும் உணராதவர்களுக்கும் நல்ல அடையாளங்களாவன; தொடக்கம் இல்லாச் 'சத்'தா மாத்திரமாயுள்ள அறிவின் சொரூபத்திலிருந்து அசைவில்லாதவர்களே விடுதற்கு அரிய காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்று குற்றங்களையும் கடந்தவர்களாம், மெய்யறிவில்லாதார், காமம் முதலியவற்றைக் கடக்க முடியாதவர்களாம். சலனம் உள்ள உடல் பொறிகளில் செல்கின்ற அறிவு பார்த்தற்கு அரிய சொரூபத்தினின்று நீங்குதலாம்.

"சொரூபம் விட்டு அகலல் மோகமாம்" (ஆன்ம சொரூபத்தை விட்டு நீங்கும் அறிவே மோகம் என்று சொல்லப்படும்) வேறே மோகம் உண்டு என்று சொல்ல முன்னும் பின்னும் இல்லை. ஒரு (விடயம்) பொருளின் நினைவை விட்டு மேல் அப்பால் ஒரு பொருள் (விடயம்) நினைக்குமிடத்தில் அந்த இரு பொருள் மத்தியில் சங்கற்பம் இன்றி (நினைவற) இருக்கும் இந்த ஞானமே சொரூபத் தன்மையாகும். இந்த ஞானம், பொருந்திய கற்பனை மாண்டு

அசைவில்லாத கல் போலாய் வருகின்ற நனவிலுள்ள விருத்தி ஞானமும் சுழுத்தி அவத்தையில் உள்ள அஞ்ஞானமும் தீர்ந்த சொரூபமாம்.

தேகம் நான் என்கின்ற பிரிவும் சீவ ஈசுவர பேத ஞானமும் அற்று, நல்லறிவாய் அசையாத மனத்திட்ப நிலையே ஆன்ம ஞான சொரூபமாம்.

## அஞ்ஞான நிலை (பூமி) ஏழு

முன் சொன்ன மடமையாம் (அஞ்ஞானமாகிய) புவிபதம் (பூமிகளைக்) கேட்பாயாக. அவை விந்து நனவு (Bindu Jagrat) மேல் நனவு (jagrat) மாநனவு (maha jagrat) அந் நனவிலான கனவு (சாக்கிர சொப்பனம். (Jagrat swapna) கனவு (swapna) கனவில் அடர் நனவு (சொப்பன சாக்கிரம் : swapna Jagrat) சுழுத்தி (susupti) என்பனவாம்

இத் தன்மையான அஞ்ஞான பூமிகள் ஏழும் ஒன்றோடு ஒன்று கலந்து இப் பூமிகள் பல பெயர்களை அடையும். ஆன்ம ஞான (சித்) திலிருந்து ஒரு ஞானமானது பெயரின்றி, செறி மலம் இன்றி, மேல் வந்த விருத்தி அடைகின்ற மனம் சீவன் முதலான பெயர் செயல்களுக்கு இடமாகியும் வித்து உருவமாகியும் நிற்கின்ற அதனால் முதற்பதம் (பூமி) விதை நனவு (விந்து சாக்கிரம்) ஆகும்.

இவ் விந்து சாக்கிரமானது பிரம ஞானத்துக்கு முதல் அவத்தையாம் (primary state). உரிமையாகச் சீவன் உண்டான பின்பு இவன் என்றும் நான் என்றும் இது எனது என்றும் முன்னில்லாதன இப்பொழுது நொய்தாய் (அற்பமாக) உண்டாயிருக்கின்ற அறுதியே (நிச்சயமே) நன்வாம் (சாக்கிரமாம்). இதை அன்றி இவன் நான் என்றும் அவன் என்றும் இது என்னது அது என்னது என்றும் சிந்திக்கப்பட்ட இது முதலாகிய பிறப்புகளின் தொடர்ச்சியாகப் பெருக்கின்ற இந்த நிச்சயமானது பெரு நனவு ஆம்.

(பொதுவாய் உண்டான அறிவுக்கு முன் இல்லாத பேதம் சூட்சமமாய் உண்டான இடமே சாக்கிரம் என்றும் அவ் வாசனை வளர்ந்த இடமே மகா சாக்கிரம் என்றும் கூறப்பட்டதாம்)

முன் வாதனையினால் அறிந்ததானாலும் அறியா்ததா னாலும் தோற்றினதில் அழுந்த, தான் அதுவாகி, நெருங்கிய நனவில் மனோராச்சியம் செய்வது நனாக்கனவாம் (சாக்கிர சொப்பனமாம்). அலைகள் வீசும் கானலில் நீரும் கிளிஞ்சலி ல் வெள்ளியும் இரண்டு சந்திரனும் ஆகிய இவை முதலாகப் பல விதங்களாகப் பிரிந்த வேற்றுமைகளை நனவில் (சாக்கிரத்தில்) அனுபவிக்கின்ற தன்மையால் கனவு பலவகைப்படும்.

(நனவில் முன் பார்த்ததையும் பாராததையும் கற்பித்துப் பயனின்றி வீணாக மனோராச்சியம் செய்வதே சாக்கிர சொப்பனம் எனப்படும்).

கணப் பொழுதில் அளவில்லாத தொழில்களைக் கண்டறிந்தோம் என்னும் கனவு ஒழிந்து முன்னடந்த செயல்களை நினைவது கனவாம்; முன் பார்த்த பொருளைப் பல நாள் கழித்துப் பின்பு பார்க்கின்ற பொருள்களை மறந்து வெகு நேரம் அறிவு வரப் பார்க்கின்ற சொப்பனமானது நனவு போல் நனவுக்குத் தோற்றுகின்ற இத் தொழிலே கனாநனவு (சொப்பன சாக்கிரம்) ஆகும்.

(நனவிற் கற்பித்த வடிவைக் காண்பது சொப்பனம் என்றும், மறந்ததை நினைப்பதே சொப்பன சாக்கிரம் என்றும் சொன்னதாம்)

இவ் ஆறு விதமான அவத்தை (states)களை நீக்கிய சீவன் ஆனவன் பெற்றிருக்கின்ற அவத்தைகளின் தன்மையானது. பொருந்துகின்ற சடத்துவம் ஆகி மேல் உண்டாகின்ற துக்க மிகுந்த அறிவுள்ளதான இதுவே சுழுத்தி நிலையாம். உலகங்கள் இவ் அவத்தைகளில் உண்டான மாயையாம் இருளில் உண்டாகித் தொலைவுறும். இவ் அஞ்ஞான பூமிகள் ஏழும் அடையும் பேதங்கள் அளவில்லாதன. இந்த ஏழும் பேதைமை அவத்தை (அஞ்ஞான பூமி) களாம்.

(ஆத்மம் பிரதிபிம்பமாய் எதிரிட்ட விடயத்தைச் சுகம் என்றதில் அழுந்திப் போவதே சுழுத்தி என்பதாம்)

(மாயா விசித்திரத்தை அறிவிக்கும் பொருட்டு அஞ்ஞான பூமியைச் சொல்லியதை விடுத்துச் சித்தை அடையும் பொருட்டு ஞான பூமியைப் பகுத்துக் கூறுகிறார்.)

## ஞான நிலை (பூமி) ஏழு

ஞான பூமிகளை அளவில்லாத பேதங்களாக வாதியர் (வாதம் செய்பவர்கள்) சொல்லுவார்கள். அவற்றில் இப்படி (ஏழாக)ச் சொல்லப்படுபவை நமக்கு நல்லதாம். இந்த ஞான பூமியின் சொரூபத்தை உணர்தல் ஆன்ம ஞானமாகும். அறிந்த இவற்றின் இலக்கு அழிவற்ற வீடாம் (நிருவாணமாம்). அவை சுபம் விரும்பல் (சுபேச்சை : spititual longing for the bliss spoken of in vedas); விசாரம் (விசாரணை : inquiry therein) மனம் சிறுகல் (தனுமாநசி : Thanu manasi; the melting of the mind in inquiry) உண்மையிலே மன்னி நிற்றல் (சத்துவாபத்தி Sathuvapati; the passage of the mind in Truth) சங்கற்பம் அறல் (அம்சத்தி : Asamsakti; being without samkalpa) பதார்த்த எண்ணம் அறுத்திடல் (பதார்த்த பாவனை : Pathartha Bhavana : knowledge of truth), துரியம் (Turuya) என்று ஞானபூமிகள் ஏழு வகைப்படும்.

இந்த ஞான பூமிகளை உணர்ந்தவர்கள் மோகம் (மயக்கம்) என்கின்ற சேற்றில் அழுந்தார்கள். இவற்றின் இயலான முத்தி வருமானால் இடர் மீண்டு வராது. குற்றம் பொருந்திய மோகத்துடன் நாம் பெற வேண்டியது என்ன? பிரமத்தை அறிந்தோராலும் ஆன்ம ஞான நூல்களாலும் அனுபவ ஞானச் சுவையை அடைவோம் என்று வயிராக்கியத்தினால் (the path of indifference) எப்போதும் நாடுகின்ற விருப்பமே சுபம் விரும்பலாம் (சுபேச்சையாம்).

இந்தச் சுபேச்சை முதிர்ந்து இரண்டற்ற நல்லோர் இயற்கையும் ஆன்மிக ஒழுங்குகளும் கைவருதல் விசாரணையாம்.

(எப்போதும் பந்தத்தைக் கொடுத்து முத்தியை அடைய விரும்புவது சுபேச்சை என்றும் அஃது அடையும் பொருட்டு ஆன்ம - அனான்ம - ஆராய்ச்சியே விசாரணை என்றும் சொல்லப்பட்டதாம்.)

இவ்வாறான சுபேச்சை, விசாரணை என்று சொல்லப்பட்ட இரண்டு நிலைகளிலும் சாதனை நிறையவும், விடய் ஆசைகளைத் தள்ளி, நினைவு குவிவது சித்தம் சிறுகலாம் (தனுமானசியாம்). சொல்லிய இம் மூன்று

சாதனத்தினாலும் மனத்தினிடம் உண்டாகும் அந் நிராசையினை உண்மைப் போதம் (தத்துவ ஞானம்) பொருந்துதலே உண்மை மருவலாம் (சத்துவா பத்தியாம்), அத் தன்மையான இந் நான்கு பூமியின் பயிற்சியாலும் மெய்யறிவில் அழுந்தி வேறாகிய விடய சங்கம் (association with objects) இல்லாததே அசங்கம் (அசம்சத்தி) யாகும்.

(மனம் ஆத்ம விசாரத்தில் கரைவதே தனுமானசி என்றும் தத்துவ ஞானம் ஆதலே சத்துவாபத்தி என்றும் அஃது ஒன்றிலும் பற்றற்று இருப்பதே அசம்சத்தி என்றும் சொல்லப்பட்டதாம்.)

சொல்லப்பட்ட இவ் ஐந்து பூமியின் முதிர்ச்சியினாலும் தானாகிய ஆன்ம ஞானத்தில் அழுந்திய இன்பத்து அமைதியால் புறனும் உள்ளும் இருக்கின்ற விடயங்கள் (பதார்த்தங்கள்) விடுபட்டுப் பக்கத்தில் இருப்பவர்களின் வன்பினால் (சுய) உணர்வுக்கு வருவதே பதார்த்த நினைவொழிதலாம். (பதார்த்த பாவனையாம்). நிறைவாகிய இவ் ஆறு பூமியின் அனுபவத்தினாலும் காணப்படுபவன், காட்சி (திரிஸ்ய) வேறு பாட்டை நீக்கி நிலைபெறும் தனது சொந்த சொரூபத்தில் (own self) நிற்பதே மறைந்திருக்கும் தன் ஆன்ம ஞான சொரூபத்தை வெளியாக்கும் துரியமாம். களங்கம் அற்ற சீவன் முத்தர்களது வழி இத் துரியம் ஆகும்.

துரிய வாழ்வானது சொல்லிய சீவன் முத்தித் தன்மை. அதற்கு மேலான விதேக முத்தர் (உடல் இறந்த முத்தர்) பொருந்துவது துரியாதீதப் பதமாம் (The state beyond the fourth). "தன்னுணர்வால் தனையறிந்த பெருமை சான்ற தலைவனால் எய்தலுறும் தன்மையாகும்'' (ஆன்ம ஞானத்தினால் தனது சொரூபத்தை உணர்ந்த மான்மியத்தை உடைய (mahat man - great soul) வர்களால் அடையப் பெறும் தன்மை உடையதாம்).

மன்னிய (நிலைபெற்ற) இப் பதம் அடைந்த சீவன் முத்தர்கள் மகிழ்ச்சி மறுக்கத்து (சுக துக்கங்களில்) அழுந்தார்கள். இம் முறையினால் பக்கத்தில் உள்ள சீடன் முதலானவர்களால் உடல் பாதுகாப்பு நலனும் நாட்கடமையும் செய்யும்படி சொல்லுகின்ற வழிப்படியே, துயில் விட்டு எழுந்தவர்களைப் போல (அடுத்து) நிகழ்

காலத்துக்கான குணங்களைச் செய்தும் செய்யாராகி (நிருவாண சுகமாய்) வாழ்வார்கள்.

இந்த ஞான பூமிகள் ஏழும் நிறை ஞானம் அடைந்தவர்களுக்கே அன்றி மற்றவர்களுக்குத் தோற்றாது. இந்த ஞான பூமிகளை அடைந்தால் அஞ்ஞான மிருகமாயினும் ஆசாரம் இல்லாதவனாயினும் உடம்போடு கூடியவனாயினும் மரணம் அடைந்தவனாயினும் முத்தன் (emancipated) என்பதற்கு ஐயம் இல்லை. "மெய்ஞ்ஞானம் என்பது தம் மனத்தின் கட்டு விடுதல்" (தத்துவ ஞானம் என்பது தன் மனோபந்தம் விடுதலாம்; இது பெற்றால் இதுவே வீடுபேறாம்) அஞ்ஞானமானது கானலின் நீர் முதலாகிய மயக்கங்களை உடைய பொய் என்று பார்க்க அதில் மயக்கம் விலகும்; அறிவின்மையும் பொய் என்று அறிந்தால் அது அழியும்.

தன்னை அறியும் சமாதியை உடையவர்களுக்கு அடையத் தகுந்த தத்துவ பூமிகள் (ஞானபூமிகளை) அறிந்த தலைமையான மேலோர்கள், யாவரும் நினையவும் வணங்கவும் உரியராம். பொறிகள் என்னும் நெடும்பகையை வென்றவர்கள், அழிவற்ற நிலையில் இருந்தவர்கள், மிகுந்த பல சீலர்களும் வணங்க மேலாய் வாழும் தேவேந்திரரும் சக்கரவர்த்திகளும் துரும்பாய்த் தோன்றும் பெரும் பரமபதத்தை அடைந்தவர்களாவார். ஞான பூமிகளை அடையாதவர்கள் பிறவிக் கடலில் மூழ்கிக் கிடப்பவர்களாவர்.

"உளம் ஒடுங்கும் உபாயமே யோகம் ஆகும்" (மனம் அடங்குகின்ற தந்திரமே ஞானமாகும்) ஞான பூமிகள் அந்த மனம் அடங்கும் உபாயமாம். மாட்சிமை மிகுந்த இந்த ஞான பூமிகளை அல்லாமல் இப்பொழுது சொல்லிய பெரிய பிரமபதத்தை அடைய முடியாது. மட்டின்றி நீ என்றும் நான் என்றும் தான் என்றும் அன்னியம் என்றும் சொல்லப்பட்ட ஒன்றும் ஆகாமல், பேதம் இலதாகவும் தோடம் இல்லாததாகவும் காரணம் இல்லாததாகவும் கிளர்சுகமாகவும் சாந்தமாகவும் அறிவாகவும், ஒன்றாகவும் கேடில்லாததாகவும் பெயர் இல்லாதநாகவும் கீழ்மேல் இல்லாததாகவும்

பாவனை அபாவனை (being or non-being), முதல் முடிவு,

பற்றுதல் உள்ளது இல்லது (positive or negative) பலவும் தேசும் (பிரகாசமும்) பொருந்திய அறிவு அறிவின்மை-என்று சொல்லப்பட்ட இவை இல்லாததாகியும்.

விண்ணிலே (சிதாகாசத்தில்) இருக்கின்றதாகியும் விசாலமாகியும் யாவதுமாகியும் அல்லாததாகியும் மனத்தால் வாக்கால் எட்ட அரிதாகியும் -

இன்பத்தில் இன்பமாகியும் நீங்குதற்கு அரிய நிறைவின் நிறைவாகியும் அவா இறந்த இடமாகியும் தானே தானாய் அறிவதாகியும் விளங்குகின்றது ஒன்றேயாம்.

(மனம் அடங்கின இடத்து உண்டான சுவானுபூதி விலாசத்தை அறிவித்ததாம்)

ஏழு வகையாம் பூமியினால் பெறும் பிரம சொரூபம் இத் தன்மையது. இனி மாயையின் பெருமையை, இராமா, கேட்பாயாக.

## மாயையின் பெருமை

சிறப்புடைய லவண அரசனானவன் உடலை மறந்து (மயக்கத்திலிருந்து விழித்து) மனம் என்னும் கண்ணாடியில் முன்னம் பார்த்த விந்த மலையினது பக்கத்திலுள்ள காடுகளை, இவ் உடலோடும் சென்று பார்த்தால் அவை கண்ணிற்படுமா என்பதை அமைச்சருடன் ஆலோசித்தான். பிறகு படைகளோடும் அமைந்து சென்றான்.

தெற்குத் திசையில் சென்றான். திரும்பவும் திக்குவிசயம் (திசைகளை வெல்லச்) செல்வான் போல எதிரில் விளங்கும் விந்த மலைக்கு முன் வந்தான். வட திசை அல்லாத மூன்று திசைகளில் நெருங்கி வளர்ந்துள காடு அனைத்தும் சுற்றிப் பார்த்தான். மிகவும் வருந்தினான். அப்பொழுது நினைத்த நினைப்பு உருவெடுத்தது போல் இருக்கின்ற முன் அனுபவித்த அடவி (வனத்தைப்) பார்த்தான்.

யமபுரம் போன்ற அந்தக் கொடிதான காட்டில் உலாவும் அளவில் நீசர்கள் செய்கை போல் அந்த லவணன் முன் சஞ்சாரம் செய்த இடங்களையும் அவ்வூர்களையும் நன்றாகப் பார்த்தான். மிகவும் அதிசயித்தான். முன் கண்ட நீசர்களையும் நீசர் பெண்களையும் குடிசைகளையும் தவிராமல்

அரசர்க்கரசனான லவணன் பார்த்து வியப்பினால் மனமயக்கம் அடைந்திருந்தான்.

மனம் தளர்கின்ற துயர் கரைக்க, கண் கரையும் படி நீர் பெருகி மெய் கரைந்து கதறி அழுகின்ற மூப்புள்ள நீச மாதர்கள் குழாத்தில் மிகுந்த மெலிவால் (விசனத்தால்) வாய்விட்டு விம்மி விம்மி ஒருத்தி, முதல் நாள் இறந்த தன் கிளைஞர் (மக்கள்) பெயரெல்லாம் உரைத்துப் பருத்த நெடுங்குரலால் இப்படிப் பலவகையாக அழுதாள்.

"என் மடியிலிருந்து நீங்கி மடிந்து போகும் மைந்தர்களே, மாறான விதியினால் என்னைப் பிரிந்து எவ்வளவு தூரம் போனீர்களோ, யார் முகத்தைப் பார்த்துத் தவிக்கிறீர்களோ, சிவந்த மணி மாலை தரித்திருக்கின்ற தோளால் குளிரத் தழுவி ஆறாத என் துயர நெருப்பை மகளே, ஆற்றுவாயோ, ஐயோ ஐயோ,

நாங்கள் முன்னம் (பூர்வத்தில்) செய்த தவத்தினால் தேடாமல் கிடைத்த திரவியத்தைப் போல எங்கள் முன் வந்தடைந்து இலக்குமி போன்றவராகிய நின் குலத்தோரான மகளிரது மயலை விடுத்து என் மகளைக் கூடிச் சுகித்த மன்னனாம் மருமகனே, மதி முகத்தை இவ் விடத்தில் வந்து காட்டாய். என் பெண்ணுக்கு நாயகனே உமக்கு என் பெண் செய்த சிறு பிழையால் மனம் வேறுபட்டாயோ?

வலிய பிறவி என்னும் பேராற்றில் கொடிய வினைகளாகிய அலைகளானவை வந்து பொருந்தித் தனக்கு உண்டான அரசு இயற்கையை விட்டு என் தையலுக்குத் தலைவனாகிப் புன்பிறவிப் புலையரைப் போல் பூதலத்துப் புரந்தரனும் புன்மை பூண்டான். மின் போன்ற பிறவி நிலையில்லாதது. விதி மிகக் கொடிது" என்று அழுதாள்.

இப்படி அவள் அழுது புலம்பிச் சொல்லிய எல்லாவற்றையும் மிகவும் கேட்ட லவணன் அவ் விடத்தில் கூட இருக்கின்ற தன் பாங்கிகளால் அவளது துன்பத்தைத் தணித்து அன்புடன் 'வருந்திய நின் இடர் யாது? நீ யார்? நின் மகள் யார்? உன் மக்கள் யாவர்? ஒன்றும் விடாமல் சொல்லுவாய்' என்று இவ் அரசன் கேட்கப் புலைக் கிழவி கூறுவாள்.

இது புலைச்சேரி. இதில் ஒரு புலையன் என் கணவன்.

இவனுக்கு இங்கு ஒரு பெண் பிறந்தாள். அப் பெண்ணைத் தேவேந்திரன் போல இருக்கும் ஓர் அரசன் வந்து சேர்ந்தான்! நெடுங்காலம் ஊழினால் அப் பெண் மூன்று பிள்ளைகளைப் பெற்றாள். காரணமாகிய நல்ல ஊழினைப் போல் கொடிய ஊழ் வந்து என் மக்கள் இறந்து போனார்கள்

நெடுங்காலம் என் மகள் முதலானவர்கள் வாழ்ந்திருந்த பின்பு கரிய மேகத்தின் துளி வறண்டு மழையின்றி நன்னீர் வற்றிக் கொடிய யமனை ஒத்த கருப்பினால் (கலியினால்) திசைகள் எல்லாம் போய்க் கடையர் எல்லாம் இறந்தார்கள். நடுங்குகின்ற துன்பத்தையும் தனித்திருப்பதையும் நாங்கள் துணையாகப் பெற்றோம் என்று சொல்லக் கொல்லும் யமனைப் போன்ற வேலாயுதத்தை உடைய வேந்தன் அமைச்சரைப் பார்த்துப் பரவசனாய் வியப்புற்றான்.

(சாக்கிர சொப்பனத்தில் உள்ள மயக்கங்களைச் சாக்கிரத்தில் தெளிவாகப் பார்த்து அதிசயித்ததாம்.)

வேண்டியவற்றைக் கொடுத்து இவளைக் கொடிய துயர் தீர்த்து, அவ்வூரினின்று திரும்பித் தன் நகரில் வந்து நெடிய உலகத்து இயல்பும் மாயையின் வல்லபமும் அந்த லவண அரசன் நன்றாகப் பார்த்துக் காண்தகைய பரம் பொருளும் (மேலோர் தரிசிப்பதற்கு உரிய பிரமப்பொருளையும்) நாம் உரைக்கத் தெரிந்து அமைதி பெற்றான். கருணை வள்ளலாகிய இராமா, ஈண்டிய (நெருங்கிய) இம் மகா மாயையானது கடப்பதற்கு அரிய வலிய மோகத்தைக் கொடுக்கும் கண்டாய்.

இம் மாயை வல்லமையினால் “இலது உளதாகும்; உளது இலதாம்” (அசத்து சத்தாகும்; சத்து அசத்தாகும்) என்று வசிட்ட முனிவர் சொல்லவும் கலக்கமுள்ள சொப்பனத்தில் (மனோராச்சியத்தில்) பார்த்த அனைத்தும் சாக்கிரத்தில் (பிரத்தியட்சமாக) பார்த்ததென்ன. குல முனிவரே! என்று கேட்டான் இராமன்.

அதற்கு வசிட்ட முனி சொல்லுவார். கொடிய மாயையானது அளவற்ற மயக்கத்தைச் செய்கின்ற காதி கதையினாலே இம் மாயா விசித்திரத்தை இனி அறியலாம்.

காக தாலீயம் போல் (காக்கை உட்காரப் பனம்பழம் விழுந்தது போல) வாசனை வசத்தில் மனமானது நமக்குள்ளே தாம் ஒன்றாகக் கலந்து இருக்கும் என்று அறிவின் உறுதிப்

பாட்டில் நின்றவர்களாகிய மேலோர் சொல்லிக் கொண்டிருப்பார்கள். ஆகலினால் முன் நாளில் இந்திரசால வித்தையுள்ள சாம்பரிகனால் புலையூராகக் காணப்பெற்ற மயக்கத்தையே நாம் மொழிந்த லவண வேந்தன் பின் நாளும் கண்டதே அன்றி வேறு அன்று.

மன்னன் பார்த்திருக்கின்ற கனவில் (சாக்கிர சொப்பனத்தில்) உண்டான மதி மயக்கத்தையே மலைச் சாரலில் இருக்கின்ற அன்னவரும் (அச் சண்டாளரும்) நல்லறிவினால் அறிந்தார்கள். லவண அரசன் என்னும் அறிவின் உதயமானது நெருங்கி வரும் கடையர் (சண்டாளர்) மனங்களில் தோன்றக் கடையர் என்று தோற்றுகின்ற அறிவானது இவ் அரசனுடைய மனத்தில் உண்டான படியால் மகா மாயையானது என் செய்ய மாட்டாது?

ஒருவனது சொப்பனம் மற்றொருவனுக்குச் சாக்கிரம் (waking reality) ஆகவும் ஒருவன் சாக்கிரம் மற்றொருவனுக்குச் சொப்பனம் ஆகவும் ஆவது போல, அரசன் மனோராச்சியம் முன்னுள்ள சண்டாளருக்கு யதார்த்தமாகவும் சண்டாளர் சாக்கிரம் அரசனுக்குச் சாக்கிர சொப்பனமாகவும் தோற்று வித்தது மாயா விசித்திரம் அன்றி வேறு அன்று என்பதாம்.

தோன்றுகின்ற மாயைப் பொருள்களானவை ஞான விளக்கத்தால் உள்ளனவாகும். ஐம்பொறிக்கும் தொடர்பாய் நிற்கும் ஆன்ற பதார்த்தங்கள் யாவும் ஞானத்தினால் அல்லாமல் உள்ளவை ஆக மாட்டா. அறிவான் (ஞாதா) அறிபொருள் (ஞேயம்) ஆகிய இரண்டின் இடையில் அறிவானுக்கு (ஞானாத்மாவுக்கு) இசைந்த வடிவம் (நிலை) உள்ளது. ஆகவே அறிபொருள், அவற்றை அறிவான், அறிவு ஆகிய மூன்றும் இல்லாததாகியும் இவற்றில் பொருந்துவதாகியும் இருக்கின்றதே மேலான மோட்சமாம்.

ஓர் இடம் விட்டு ஓர் ,இடத்தில் உள்ளம் பொருந்தினால் அவற்றின் நடுவில் உண்மையாகியும் பெயர் இல்லாததாகியும் அறிவில்லாததாகியும் சடம் (விடயம்) இல்லாததாகியும் இருக்கின்ற அது என்னும் பிரமமும் நீ என்னும் கூடஸ்தனும் (kutastha) ஐக்கியமான சிதானந்த சொரூபமாய் எக்காலமும் பிரிவற்றிருப்பாய். மிகுந்த நுட்பமாகிய அறிவினால் யுக்தியாய் விசாரித்து நான் குடும்பி (சம்சாரி) என்கின்ற குறிப்பை மாற்றி,

வேரோடே கெடும்படி மனத்தின் துவக்கு (தொந்தம்) அறுத்து இயல்பாக (in your self) இருந்த படியே தெளிந்து இருப்பாய்.

*பிறப்பிறப்பாம் பூட்டையைக் (ஏற்றத்திற் கடங்களை) கட்டிச் சுழற்றுகின்ற வாசனை என்னும் பெருங்கயிற்றை மிகப் பெரிய முயற்சியினால் அறுத்திடுவாய். மேலான ஆன்ம ஞானத்தில் முன்னே புறப்பட்டு இருக்கும் பொய்யாம் மனம் உலக வேற்றுமைகள் என்கின்ற பொய்யைச் சிறப்பு உடைய ஆகாயமானது வடிவம் இல்லாதிருந்தும் இல்லாததான நீல நிறம் பொருந்துவது போலக் காண்பிக்கும்.*

*(ஆத்மப் பிரகாசத்தை அதன் சங்கற்பமான மனம் சகம் போலத் தோற்றுவிக்கும் என்பதாம்.)*

*துன்பம் உண்டாக்கும் சங்கற்பத்தை அழித்தலால் மனம் இறந்தால் பழமையாகத் தொடர்ந்து வந்த மோகம் என்கின்ற மூடுபனியானது விட்டு நீங்கும். சரற்காலம் (இலையுதிர் காலம் :* autumn) *முதிரும்படி வந்தால் ஆகாயம் பிரகாசிப்பது போல் நல்லறிவு மாத்திரமாகியும் அழிவற்றதாகியும் ஒன்றானதாகியும் உருவமில்லாததாகியும் பிறப்பிறப் பில்லாததாகியும் இருக்கின்ற பிரமமானது நொய்தாய்ப் பிரகாசிக்கும்.*

*(பிரம சங்கற்பமாய் உதித்த மனத்தை பிரமத்திற் கரைத்துத் தானும் அப் பிரமப் பிரகாசமாய் விளங்க வேண்டும் என்பதாம்)*

# நான்காவது திதிப் பிரகரணம்*

## முன்னுரை

முந்திய பிரகரணத்தில் அஞ்ஞானத்தின் படிநிலைகளை (stages) விளக்குபவராகச் சைதன்னியத்தில் (அறிவில்) உண்டான மனத்தின் விளையாட்டே (உல்லாசமே) இந்தச் சகம் ஆகிறது என்று காட்டினார். அதினின்றும் விடுபடுதற்கான ஏழு ஞானப் படிநிலைகளை அறிவிப்பவராகத், திதிப் பிரகரணத்தை ஐந்து கதைகளில் அமைக்கிறார். இந்தச் சகம் சைதன்னியமே என்பது அவற்றின் உள்ளடக்கம் ஆகும். முதலில் வரும் **சுக்கிரன் கதையில்** சைதன்னியத்தில் உண்டான மனத்தில் சகம் விளங்குவதை நிரூபிக்கிறார்.

## 4:1 சுக்கிரன் கதை **

### கருத்து

எழுதுவோனும் எழுதுகின்ற இடமும் (திரையும்) எதிரில் காணும் பொருள்களும் இன்றிக் குற்றமற்ற சிதாகாயத்தில்

* Sthithi Prakarana; the chapter on preservation.

** The story of sukra

சகம் என்ற சித்திரமானது உண்டாகித் தோற்றும், உண்மையாகத் தோற்றிய அது தன்னைத் தானே பார்த்துக் கொண்டிருக்கும். ஆதலால் பல பொறியும் (இந்திரியங்களும்) நீங்குகின்ற நித்திரையில் இல்லாமல் சகம் சாக்கிரத்தில் (நனவில்) தோன்றும் கனவினை ஒத்திருக்கும்.

(ஒரு காரணம் இன்றி ஆன்மாவில் தோன்றுகின்ற சகமானது ஆன்மப் பிரகாசமாய் நிகழ்தலின் அச் சகம் தீர்ந்த சொப்பனம் என்பதாம்.)

சாட்சியாகவும் நிறைவாகவும் தூயதாகவும் வியாபித்திருக்கின்ற பேதமற்ற ஆன்ம ஞானத்தால் தாங்கப்படும் உலகம் எல்லாம் பிரதிபலித்தல் கண்ணாடியில் தெரிகின்ற நிழலைப் போல்வதாகும். காரண காரியத் தொடர்பு இன்றி உலகெலாம் பிரமத்திடைப் பிரகாசித்துக் கொண்டிருக்கும்.

(பிரமத்தில் அதன் பிரதிவிம்பமான சகத் ஆனது ஓர் ஏதுவும் இன்றி விளங்கும் என்பதாம்)

உலகங்களுக்கு வடிவானது, தோன்றும் பிரதிபலனம் மாத்திரமே. பின்னம் இன்றி யாவையுமாய்ப் பேராத அறிவாக, பெருவிண் (சிதாகாயம்) ஆக நிலை பெற்றிருக்கின்ற பிரம சொரூபம் ஒன்றே என்று வருந்தி முயன்று, இராமா, நீ சிந்திப்பாயாக. அத் தன்மையாக உறுதி நிலை கைவந்தால் உள்ளம் அலைவற்று அறிவு உருவாகும். (ஆன்ம ஞான சொரூபமாம்)

(சகமானது வேறாயிருப்பது போன்று தோற்றுவதே யன்றி வேறு அன்று என்பதாம்.

ஒரு கல்லில் பல உருவங்கள் செதுக்கப்பட்டிருத்தல் போல் ஒன்றேயான பிரமத்தில் உலகங்கள் தோற்றிக் கொண்டிருக்கும். இரண்டு என்று தொடர்தற்கான காரணம் வேறு இல்லை ஆகையால் மிகுந்த சகம் என்ற சொல்லுதற்கு ஒன்றில்லை.

"அறிவே உளதாம்" (ஆன்ம ஞானமே உள்ளதாம்) அனைத்து உலகும் தெளிவான பிரமத்தின் பிரதிபலனம் மட்டுமேயாம். இவை தெரியுமாறு வெள்ளி கதை (சுக்கிராசாரியாருடைய கதையை) இராமா, நீ கேட்கக் கடவாய்.

**கதை**

முன்பு ஒரு காலத்தில் பிருகு முனியானவர் பழமையும் உயர்வும் உள்ள மந்தர கிரியின் சாரலில் நிலையான தவம் செய்து வந்தார். அவரிடம் அவர் மகன் சுக்கிரன் இருந்தான். அறிவுடையவன், சந்திரன் போன்ற அழகன், தன் தந்தையின் பாதம் நீங்காதவன். ஞான அஞ்ஞானங்களுக்கு இடைப்பட்ட பார்வையில் இயங்கும் பெருந்தன்மை (பதம்) உடையவன் அவன்.

செறிந்த ஆகாய நடுவில் இருக்கும் திரிசங்கு ராசனைப் போல, சுக்கிரனும் அறிவு - அறியாமைகட்கு நடுவில் அமர்ந்திருக்கின்ற காலத்தில் பிருகு முனிவர் பிரிவில் சமாதி (நிருவிகற்ப சமாதியில்) பொருந்தியிருந்தார்; சுக்கிரன் தனியனாக வெறிய விசும்பைப் பார்த்தான். விண்மாது ஒருத்தி வரக் கண்டான்.

தென்றற் காற்றில் அசைகின்ற மந்தார மலர் சூழ்ந்த கூந்தலையுடையவள். பெண் யானையைப் போலத் தனித்து வந்தாள். அவளை எதிரில் கண்டு சிந்தை வசமானான். அவளது வடிவைச் சிந்தித்து இரு விழிகளையும் மூடிக் கொண்டிருந்து முந்தும் ஆசையினால் அளவிறந்த மனோராச்சியத்தில் ஈடுபட்டான்.

இந்தப் பெண் பொன்னாட்டு (தேவருலகத்து) அணங்கே என்று நிச்சயித்து அந்தப் பொன்னாட்டில் புகத் துணிந்தான். ஆகா! அவன் அவள் முன் அந்த உலகைப் பார்த்தான். தேவர்கள் போற்ற அழகிய சிங்காதனத்தில் மின்னல் நிறைந்த முகில் என்ன இவன் தேவேந்திரனைக் கண்டான். அவனைச் சூழ்ந்து காமத்தினால் களிக்கின்ற தேவ மாதர்களின் வட்டம் இவை என்ற உணர்ந்தான்.

தேவேந்திரனை இந்தச் சுக்கிரன் வணங்க, இந்தச் சுக்கிரனை அத் தேவேந்திரனும் வணங்கிய பின்பு கிடைத்தற்கு அரிய சுகத்தை உடைய தேவலோகத்தில் பருத்தும் கச்சு அணிந்தும் இருக்கிற தனங்களை உடைய தெய்வப் பெண்களுள் முன் சொல்லிய அந்தப் பெண் சுக்கிரன் முன் தோற்றின மாத்திரத்தில் சகித்தற்கு அரிய இச்சையினால் இரண்டு கண்களும் களிக்கும்படி சுக்கிரன் பார்த்தான். அத் தெய்வப் பெண்ணும் அப்படியே பார்த்தாள்.

அவ் விருவர் விழிகளும் மனங்களும் ஒன்றாகக் கலந்து உருகுகின்ற சமயத்தில் சங்கற்பித்த காரியங்களில் ஒன்றும் தப்பாத பெருமை உடைய சுக்கிரன் 'கரிய இருள் மூடிக் கொள்க' என்று சங்கற்பித்தான். கற்பாந்த காலம் போல இருள் மூடிக் கொள்ள அவ் விடத்தில் உள்ள யாவரும் பல திசைகளிலும் நீங்கினார்கள்.

அந்தத் தெய்வப் பெண் இந்தச் சுக்கிரனை வந்து அணைய, அழகு பொருந்திய கற்பக மர நிழலில் ஒரு பக்கத்தில் நெருங்கி முயங்கி இருவரும் ஓர் உயிராக இடையூறு இல்லாத(விடய) இன்பத்தில் இருக்க, எட்டு நான்கு யுகங்கள் கழிந்தன. முன்னம் யாம் செய்த தருமம் எல்லாம் முடிந்து போகும் என்கின்ற சிந்தனையினால் தேவ உலகினின்று பூவுலகத்து வந்து விழுந்தான் சுக்கிரன். தனது வடிவத்தை மறந்தான்.

இந்தச் சுக்கிரனின் சீவன் மிருதுவான பூரண சந்திர கலையைச் சேர்ந்து குளிர்ந்த பனியாகி அந்தப் பனியில் நெல் ஆனான். அந்தச் செழித்த நெல்லைத் தேசார்ண தேசத்தில் உள்ள பிராமணன் சமையல் செய்து புசிக்க உண்டாகின்ற தாது வடிவாகிச் சுக்கிரன் வந்து இந்தப் பிராமணன் மனைவியிடத்து மகவானான்.

அக் காலத்தில் தவ முனிவர்கள் தொடர்பினால் அரிய தவம், ஒரு மனுவுள்ள காலம் கனக மயமான மேருவைச் சூழ்ந்த வனத்தில், புரிந்தான். அவன் அங்கு வனத்தில் ஒரு பெண் மானினால் ஒரு புத்திரனை மானிட வடிவாகப் பெற்றான். அப் புத்திர வாஞ்சையினால் பந்தப் படுத்தும் அறியாமையால் பேராத உண்மை நிலையினின்றும் நீங்கினான்.

பின்னும் அளவில்லாத பிறவிகளில் மயக்கம் பொருந்திய வாசனையினால் பிறந்து இறந்து மிகவும் மேலாகிய கங்கைக் கரையில் நடந்து ஒரு முனிபுத்திரனால் தவத்தோன் ஆயினான்.

முன் பற்றிய உயிர் நீங்கிய சுக்கிரனின் பழைய உடல் காற்றாலும் வெயிலாலும் தந்தை பிருகு முனிவன் பக்கத்தில் பெரிதும் உலர்ந்து எலும்பு ஆகியது.

ஆனால் அந்த உடம்பு தந்தை பிருகுவின் தவ மகிமையினால் விலங்குகள் பறவைகள் அதன் பக்கத்தில்

நெருங்காமல் பூமியின் மேல் கெடாதிருந்தது. நிருவிகற்ப சமாதியில் தெய்வ வருடம் இரண்டாயிரம் செல்லத் தவ முனிவன் கண் மலர்ந்தான். தன் அருமை மகனை எதிரே தேடினான்.

அறத்தின் வடிவாய்த் தொழுது கொண்டு அருகே இருக்கும் புத்திரனைக் காணாதவனாய் உலர்ந்த உடலானது, வறுமை காரணமாகவோ தீப்பேறு காரணமாகவோ ஆனது போல எதிரே கிடப்ப, துறந்த மனத்தை உடையவனாகிய பிருகு முனிவன் ஆகிய துய்ய தவத்தோன் பார்த்து, உலர்ந்து மெலிந்த தோலால் மூடப் பெற்ற எலும்பு வீட்டில் நவத் துவாரங்கள் எல்லாம் சிச்சிலிக் குருவி நடந்து ஓடுவதையும் வயிறு ஆகிய குகையில் நெருங்கிய தவளைக் கூட்டங்கள் ஒன்றோடொன்ற பாய்ந்து விளையாடுவதையும் பார்த்தான். இவ்வாறு வந்ததன் காரணம் என்ன என்று தன் அறிவினால் நின்று ஆராய்ந்து பார்க்காமல், அன்புள்ள புத்திரன் இறந்தான் என்றே நினைத்தான்.

நியமித்த காலத்திலன்றி என் அரிய மகனை அகாலத்தில் துடைத்த காலனைக் கணத்தில் அழிப்பன் என்று, விடைப் பாகனான உருத்திரன் கோபம் கொண்டது போலப், பிருகு முனி வெகுண்டு சாபமிட நினைத்தான். இவனது கோபத்தை உணர்ந்த யமன் நடு நடுங்கி, விளங்கும் ஐம்பூத வடிவம் எடுத்து ஆறுமுகம், ஆறு கை கத்தி கயிறு கழை, பாதுகாக்கும் வச்சிர கவசம் ஆகியன பொருந்தி, பரந்த சேனை புடை சூழ, விசனத்தை உடைய பிருகு முனியினிடத்தில் வந்து அணுகி வேண்டிக் கொள்வான். எல்லாவற்றையும் அழிப்பதற்குக் காரணமான யமன் மென்மையாக முனிவனிடம் இவற்றைச் சொன்னான்.

(பிருகு முனிவனது மனத்தைத் தெளிவிக்கக் காலன் உபதேசிக்கத் தொடங்கினான் என்பதாம்)

## காலன் விளக்கம்

உண்டாக்கப்பட்ட ஈசுவர நியதியைப் பரிபாலிக்கும் நாங்கள் உன்னை உன் மாட்சிமைப்பட்ட தவத்திற்காகத் துதிப்பமே அல்லாமல் வேறொன்றுக்காக அன்று. ஆகையால் நிறைந்த தவத்தை வெங்கோபத் தழலால் சுடுதல் தகுதியன்று.

உண்டாகின்ற ஊழிக் கனலும் எங்களைச் சுடாது. உன் சொல்லா சுடத்தக்கது?

குடும்ப (சம்சார) வலையில் பிணிப்பு உண்ட கோடா கோடி உருத்திரரும் நெடுங் தாமரைக் கண் மாதவரும் (மகாவிஷ்ணுக்களும்) நிலையாகிய என்னால் தொலைந்தார்கள்.. இடும்பை உலகில் என்னைக் கடந்தார். (வென்றவர்) இல்லை. யாரும் எனக்கு இரையாம். உண்டாகும் பல்லுயிரும் யாம் அழித்தல் பரமேசுவரன் வகுத்த பழைய நியமமாம்.

என்னுடைய நியதி அன்று இது. எப்பொழுதும் உள்ள முறை ஆகும். நின்மலமான ஞானப் பார்வையால் செய்வோனும் (கருத்தாவும்) அருந்துவோனும் (போக்த்தாவும்) இல்லை. அஞ்ஞான வழிக்கு இவர்கள் (செய்வோனும் நுகர்வோனும்) மிகவும் உண்டாயிருப்பர். கன்ம வசத்தினால் பல்லுயிரும் தங்கள் நினைவால் (சங்கற்பத்தால்) பிறக்கும், கற்ப முடிவில் போகும்.

கற்பதான வேதங்களால் கொடுக்கப்பெற்ற ஞானப் பார்வை எங்கே? உறுதியாக இருப்பதெங்கே? உனது மகிமை எங்கே? பிரகாசிக்கின்ற இந்த நெறிக்குக் குருடாக அற்ப அறிவுடன் நீ தளர்ச்சி அடைவதென்ன? உன் மகன் தன் சங்கற்பத்தினால் உண்டான செய்கை யுணராமல் கோபித்துச் சபிக்க நீ உரியாயோ?

மனமே புருடன் (ஆத்மாவாம்), வேறு இன்று. மனத்தின் செயலே செயலாகும். (மனமே) மிகவும் சீவிக்கின்றதினால் சீவனுமாகும்; கிரகிக்கக் கூடிய நிச்சயத்தால் அது புத்தியுமாகும்; சினக் குறிப்புடன் யான் எனது என்னும் அபிமானத்தினால் கொடிய அகங்காரமுமாம். தனது விகற்ப சாலத்தால் தனி மனமே உலகமாகும்.

(பிரம சங்கற்பமான மனதே சகலமுமாய் விளங்கும் என்பதாம்)

ஆதலால் உன் புதல்வனும், நீ அலைவற்ற (நிருவிகற்ப சமாதியில் அமர்ந்திருந்த போதில் ஆசையினால் சுக்கிரன் என்னும் தன் உடலை இவ்விடத்தில் இருத்தி, ஆகாயத்தில் விச்சுவாசி என்னும் பெயரை உடைய [illegible]

அணங்கை மனத்தினால் அடைந்த பின்பு, பூமியில் தேசார்ண தேசத்தில் உள்ள ஓர் அந்தணனிடத்திற் புத்திரனாகப் பிறந்து,

கோசல நாட்டில் அரசனாகப் பிறந்து விசாலமான காட்டினுள்ளே வேடனாகப் பிறந்து கங்கைக் கரையில் அன்னமாய்ப் பிறந்து பௌண்டர தேசத்தில் உயர்ந்த சூரிய வமிசத்திற் பிறந்து அரசனாயினன்.

சாலுவ நாட்டில் சூரிய குலத்துக்கு ஆசாரியன் ஆனான். பின்பு மிகுந்த கற்பகால அளவும் வித்தியாதரருக்கு அரசனானான். தூய அறிவுள்ளவனாக அவ்விடத்தில் ஒரு தவ முனிவனுடைய மதலையானான். சேல் மீன்கள் கமுகில் தாவித் தடாகத்தில் குதிக்கின்ற சவ்வீர நாட்டில் பொருந்திய சாமந்தனாக (படைத்தலைவனாக)ப் பிறந்தான்.

திரிகத்தம் என்னும் தேசத்தினிடத்தில் சைவ சமயத்துக்கு ஆசாரியன் ஆனான். வாசனை சூழ்ந்த வேடரூரில் மூங்கிற் காடு ஆனான். அழிவுற்ற சிறு காட்டில் ஒரு மானாக அமர்ந்திருந்தான். விரிவாகச் சூழ்ந்திருக்கின்ற பனைமரக் காட்டில் வெஞ்சினம் உடைய மலைப் பாம்பாகப் பிறந்தான்.

இவ் வண்ணம் அளவில்லாத கருப்பைகளில் இழிவாகவும் உயர்வாகவும் இருக்கின்ற பிறப்புகளை அடைந்து களங்கமுள்ள மனத்தினால் வாசனை வயத்தில் நின்று வந்தான். கடைசியாக, கங்கையின் பக்கம் ஒரு மெய்ம் முனிவனுக்கு மகனாகிப் பொய் வண்ணமாக உள்ள பொறிகள் என்னும் புன்பகையை வென்று நீண்ட சடை முதலியன தரித்து வாசுதேவன் என்ற பெயர் மேவி எண்ணூறு ஆண்டு தவம் செய்தான்.

உன் மைந்தனாகிய சுக்கிரனின் சுழலுகின்ற சொப்பனத்துக்கு ஒப்பான மனத்தில் உண்டான மயக்கத்தை அன்பாக நீ பார்க்க வேண்டுமானால் ஞான திருட்டியால் பார்ப்பாய் என்ற காலன் சொன்னான்.

(சுக்கிரன் இறந்து எடுத்த வடிவங்களின் காரணத்தை ஞான திருட்டியால் பார்க்கும் படி காலன் போதித்தான்)

காலன் சொன்னதைக் கேட்ட கலை ஞானி பிருகு முனி, மேன்மையான ஞான ஒளியால் தோற்ற, பிரதிபாமாத்திரமாக விளங்கிய -நல்லொழுக்கம் உள்ள அறிவாகிய தெளிந்த

*கண்ணாடியில் பிரதிபலித்த தன் மகன் வரலாற்றை எல்லாம் தன் ஞானக் கண்ணால் நொடியளவில் பார்த்தான்.*

*ஆசையற்ற முனிவனாகிய பிருகு (பரவசம் விடுத்து) கங்கைக் கரையினின்று மந்தர மலைப் பக்கத்தில் உள்ள தன் மேனிக்கு வந்து (தன் வசம்) சார்ந்து, மிகவும் அதிசயித்து, குற்றமற்ற காலனை வேண்டிக் கொள்பவனாகச் சொல்லத் தொடங்கினான்.*

*(மனோ சங்கற்ப வடிவத்தை எதார்த்த திருட்டியால் பார்த்தார் என்பதாம்)*

*'முழுது உணர் தருமனே, நீ நியதிக்கு முதன்மையானவன். நீயே கால மூன்றும் பழுதற அறிவாய். எம் போன்றோர் குழந்தைகளாக, பிரமஞானம் ஓங்காத இளையர்களாக இருப்பவர்கள்' என்று முனி சொன்னான். அதற்கு உரிமையாகிய உலகைப் புசிக்கும் கேடறு நிலைமையுள்ள காலன்,*

## வாசுதேவன் என்ற பெயரில்

*மாதவத்தோனான பிருகு முனியின் கையைப் பிடித்துக் கொண்டு மந்தர மலைக் குகையினின்றும் வெளிவந்து தேவநதியை (கங்கையை) அடைந்தான். அவ் விடத்தில் வாசுதேவன் என்ற வேறு பெயரோடு இருந்த புத்திரனைப் பிருகு முனி ஆசையோடு கண்டான். இது காலனின் நினைப்பால் - சங்கற்பத்தால் - நிகழ்ந்தது.*

*இங்குப் பொருந்திய சமாதியை விட்டு இந்த வாசுதேவன் எங்களைப் பார்க்கக் கடவன் என்று காலன் சங்கற்பித்தான். அவ்வளவில் முனி மைந்தன் வாசுதேவன் சமாதியை விட்டு இவர்களைப் பார்த்து வணங்கினான். மிகுந்த உயர்வு உடைய அவர்கள் மூவரும் ஒருவர்க்கொருவர் விருப்பம் உடையவராக ஒரு கல்லின் மேல் உட்கார்ந்தார்கள்.*

*வாசுதேவப் பெயருடைய மைந்தன் இவ் இருவரையும் பார்த்துத் 'தேசு(ஒளி) உடைய உங்கள் தரிசனப் பேற்றினால் மாசறு தவத்தினாலும் நூல்களாலும் திரவியங்களாலும் நீங்காத குற்றம் பொருந்திய மோகம் தீரப் பெற்றேன்.*

இதைப் பார்க்கிலும் அமுத மழை இன்பம் தராது' என்று சொன்னான். அவனை இயல்பாகிய பிருகு முனி இனிமையாகப் பார்த்து உனக்கு, "நன்றுயர் ஞானம் சேர்க! நவைதரு மடமை தீர்க!" (இன்பம் பெருகும் ஞானம் அடையக் கடவது குற்றமுள்ள அஞ்ஞானம் தீரக் கடவது) என்று அருள் புரிந்தார்.

சுக்கிரன் ஊனக் கண் இரண்டையும் மூடிக் கொண்டு அழிவில்லாத ஞானக் கண்ணால் முன் நடந்தவைகளை எல்லாம் கண்டான்.

ஒரு நிமிடத்தில் சுக்கிரன் (இனிவரலாகும்) பிறவிகள் அனைத்தையும் நீத்தான். ஞானக் கண்ணால் பார்த்த பின்பு வியந்து சொல்வான். பிரகிருதி (matter) என்கிற மிகுந்த மோகமானது மூடிய சகங்களாகக் கோரமான என் மனத்திடத்தில் விருப்புடன் வளர்கின்றது. இஃது என்ன அதிசயம், என்ன அதிசயம்!

கற்பன அனைத்தும் கற்றேன். காண வேண்டுவன எல்லாம் கண்டேன். பிறப்பில் அனேக காலம் உழன்ற வெந்துயரும் தீர்ந்தேன். நற்பயன் அறிவை (ஆன்ம ஞானத்தை)ப் பெற்றேன். ஐயனே நாம் இனி மேல் மந்தர மலையில் இருக்கின்ற என்பு செறிந்த உடலைக் காண்போம்.

கருமமே காரணம் ஆகின்ற உடம்பாகிய எலும்பு வடிவத்தை இரு. கண்களாலும் பார்த்து இன்பம் எய்தும் பொருட்டு நினைத்த எனக்கு எந்த ஒரு செயல் விருப்பும் இல்லை, செயல் வெறுப்பும் இல்லை. வாருங்கள் என்று வாசுதேவன் சொல்ல, அம் மூவரும் மந்தர கிரிக்குக் கணப்பொழுதில் வந்து சேர்ந்தார்கள்.

(சுக்கிரன் தனது சங்கற்பத்தை நசிப்பித்து, ஞான வடிவாய் முன்னுள்ள சுக்கிர வடிவம் எடுக்கப் பற்றின்றிச் சங்கற்பித்தான் என்பதாம்)

முந்துறு சகத்தின் எல்லை எல்லாம் தெளிந்த மூவரும் வந்த விடத்தில் முன் பார்க்கவ (பிருகுமகன்)ப் பிறப்பில் பொருந்திய உடலை மைந்தனாகிய வாசுதேவன் அளவிலாத மகிழ்வுடன் பார்த்து, அருந்தவத் தந்தையை நோக்கி இந்த

வலிமையான முழு எலும்பையா நீ பெற்று வளர்த்தாய்? என்ற கேட்டான்.

மேலும் வாசுதேவன் சொல்லுவான், ஐய, பெறுதற்கு அரிய சுகங்களினால் முன்பு நீ வளர்த்த உடம்பானது நெருங்கிய துன்பம் யாவும் நீங்கி, ஆசையும், ஐயமும் ஆக்கமும் இழப்பும் ஆன எல்லாம் இன்றி நிலைபெற்ற சுகமாக மனம் இறந்திருந்தது.

மனம் இறந்த நிலையை அல்லாது மன்னுயிர்க்கு இன்பம் உண்டோ? பேரானந்த அனுபவம் ஆகிய கடலில் முழுகப்பட்ட களங்கமற்ற வியாபக அறிவுக்கும் சாந்தத்துக்கும் அறிவுளோர் துன்பம் நீங்கியிருக்கின்ற தனது மேலான ஆன்ம நிச்சயத்துக்கும் ஒப்பாக இத் தனிமையான உடம்பானது சுகத்தை அடைந்திருந்தது.

## மறுபடி சுக்கிரன்

அரிய தவ வலிமையினால் இந்த அற்புதம் கண்டேன் என்று வாசுதேவன் சொல்ல, அருகில் இருந்த காலனானவன் பார்த்து, அவன் உரையை இடையே தடுத்து "அடுத்திருக்கின்ற இவ் வுடலில் அரசர்கள் தம் பட்டணத்தில் புகுவது போலப் புகுந்து அவுணர்கள் அனைவருக்கும் திருத்தமான ஆசிரியப் பணி செய்வாய்" என்று சுக்கிரனுக்குக் கட்டளையிட்டுப் பிருகு முனிவரையும் சுக்கிரனையும் வாழ்த்திக் காலன் நின்றவிடத்தில் மறைந்தான். அவனைப் பிரிந்தவர்கள் வருந்தினார்கள். பின்பு அந்த வாசுதேவப் பெயருடைய நினைவைத் தள்ளி வலிய பெருமையுடைய வெள்ளி (சுக்கிரன்) ஆனவன், முன்பு தான் பொருந்தியிருந்த உடலில் புகுந்தான்.

வினைவயத்தால் வெள்ளி அடைந்த முந்திய உடலை, தனக்குத் தானே நிகரான பிருகு முனிவன் கமண்டலத்தில் உள்ள வேத மந்திர நீரால் (முழுக்கு) ஆட்ட, நயம் பெறப் பிராணன் தாங்கிச் சுக்கிரன் எழுந்து தந்தையின் அடி பணிந்து அருகில் நின்றான்.

தந்தையாம் பிருகு முனியும் மகனான பார்க்கவ (பிருகுமகன்) முனியும் உயர்ந்த மந்தர மலையில் உள்ள வனத்தில் திருகிய சித்தம் என்னும் தீமையான பகையைத்

*தீர மாற்றி, வருகின்ற அலையற்ற கடலைப் போல மாசறு நிலையில் வாழ்ந்தார்.*

*கருணை மாமுகில் அனைய இராமா! என்று கல்வி ஞான மிக்க வசிட்டர் சொன்னார்.*

## 4:2 தாம, வியாள, கடர் கதை*

**முன்னுரை :**

*சகம் ஆன்ம சங்கற்பமாக விளங்கும் என்று காட்டிய ஆசிரியர், அனாத்ம* (non-Atman) *சிந்தனையினால் சகம் உண்மை என்ற கருத்துப் பெருகும் என்று, வரும் கதையில் சுட்டிக் காட்டுகிறார்.*

*மேலும் வசிட்டர் உரைப்பார்.*

*தானாக* (spontaneous)*த் தோன்றும் பேரின்பம் கூடிய மெய்ப்பொருளின் உண்மை இயல்பு யாருக்குப் புலனாகும்?*

### மெய்ப் பொருளாளர்

*இடையறாத ஆன்ம விசாரணையில் ஈடுபடுவோர், மனத்தின் கீழான நினைப்புகள் நீங்கப் பெற்றோர் (சங்கற்பத்தை விட்டோர்) ஆன்மிக இன்பத்தை அனுபவித்தவாறு இருப்போர், சங்கற்பத்தின் விளைவாக உள்ள காட்சிப் பொருள்களால் வரும் வேதனை சடத் தன்மை, பொய்ம்மை ஆகியவற்றை அழிக்கும் சச்சிதானந்தத்தின் உண்மை இயல்பைக் கண்டோர், காண்டகு தன்னை (ஆன்ம சொரூபத்தைக்) கண்டோர், காணார்தனைக் காணாதோரும் (அதிருஷ்டாவான அநாத்ம சொரூபத்தைக் காணாதவர்களும்)*

*உயிர்வாழ்வினராயிருந்து காணும் ஞானமாகிய பர தத்துவத்தில் பொருந்திய நனவினை (சாக்கிரத்தை; விழிப்பை) அடைந்தவர்கள், கொடிய பிறவி மயக்கம் என்னும் வழியில்*

* The story of Dama. Vyala and kata

நீங்காத சுழுத்தி (நித்திரை)யுற்றவர்கள். பாவிக்கப்பட்ட நன்மையிலும் தீமையிலும் பழகிய வாசனையை ஒப்பற்ற முதிர்ந்த பக்குவமான நிராசையால் கெடுத்தவர்கள்.

வாசனை என்னும் வலையை அழித்து மனத்தினது கட்டை அறுத்து விட்டவர்கள்,

இவ்வாறான இயல்புகளை உடையவர்களுக்கு, கலங்கிய நீர் தேற்றாவிதையால் தெளிதல் போல் மெய்ஞ்ஞானத்தின் உண்மையான தன் இயல்பு துன்பமற்று (நிரதிசய ஆனந்தமாக)ப் பிரகாசிக்கும்.

(மனோ நாசமும் வாசனை ஒழிப்பும் வந்த இவ் அனுபவத்தினால் தத்துவஞானம் விளங்கும் என்பதாம்)

பொருள்களில் சேருகின்ற மயல் (இச்சை) நீங்கி இன்ப துன்பமான இரண்டும் நீங்கி ஒன்றையும் பற்றாமல், கூண்டை விட்டு ஆகாயத்திற் செல்லுகின்ற பறவையைப் போல மகா மோகத்திலிருந்தும் தூய மனம் வெளியிற் போந்து வேறுபாடாகிய ஐயம் திர ஆசை என்கின்ற யாவும் நீங்கும்.

(மனம் விடய சம்பந்தம் நீங்கித் தன்மயமாய்த் தனித்திருத்தலே வாசனாட்சயமாம்.)

மாட்சிமையான அம் மனம் பூரணம் அடைந்து களங்கமற்ற பூரண வெண் திங்களுக்கு ஒப்பாக விளங்கும். இந் நிலையில் பொலிவுற்றவர்கள் மும்மூர்த்திகளாகிய தேவ முதல்வர்க்கும். கருணை செய்வார்கள். ஊன்றிய விசாரணையினால் மேன்மை யாகிய பரம்பொருளை அடைய வேண்டும்.

(விசாரணையால் விடயப் பற்று நீக்கம் வரும் என்பதாம்)

## அவ் விசாரணை

இந்த உலகு எப்படிப் பட்டது? நாம் ஆர் என்று உற்று நின்று உணரும் மட்டும் கலகம் நிறைந்த பிறவி மயக்கமானது இருள் போல் மூடி நிற்கும். கணக்கில்லாத உலகங்களும் ஆன்மாவும் (தாமும்) அழிவில்லாத சிற்சோதி என்று சலனமற்ற ஞானக் கண்ணாற் கண்டவர்கள் தத்துவ நிச்சயத்தைத் தரிசித்தவர்கள்.

எல்லாச் சக்திகளாயும் ஒன்றாகியும் அளவில்லாதாகியும் இருக்கின்ற அறிவு தானே (ஆன்ம ஞானமே) சகல பாவனை களுக்கும் உள்ளிருப்பதாம் என்ற கண்டவர்கள் தம்மை (ஆன்ம சொரூபத்தை)க் கண்டவர்களாம். அவ்வாறு சொல்லப்பட்ட பிரமமே அன்றி நான் என்ற அறிபவனும் (ஞாதா : knower) இல்லை; அதற்கு வேறாய சகம் என்னும் அறியப்படு பொருளும் (ஞேயம் : the known) இல்லை; உள்ளதுக்கும் இல்லதுக்கும் (சத்துக்கும் அசத்துக்கும்) இடையுற பிரமமே உண்டாயிருக்கிறது என்று கண்டோரே கண்டோர் (ஆன்மாவைத் தரிசித்தவர்கள்.)

## விடய சுகம் நுகரலாமா?

முயற்சியில்லாமல் தானே தோற்றுகிற நெருங்கிய திக்குகளில் உள்ள (விடயப்) பொருள்களில் இச்சையில்லாமல் செல்கின்ற கண் போல் மாசறு நீராரின் (பிரமத்தை உணர்ந்தோரின்) புத்தியானது நிகழ்காலத்திலுள்ள செயல்களில் செல்லும் என்று தெளிவுற்றுப் போகம் துய்த்தலால் அஃது துன்பம் செய்யாது. பொருள் அனுபவிப்புகளால் பிரம்ம இன்பம் நுகர்தலால் திருடர்களும் அவர்களுக்கு நட்பு ஆவர்.

வழி நடுவில் வந்த கலியாணக் கூட்டங்களை வழியில் நடப்பவர்கள் காண்கின்ற தன்மையைப் போல் மிகுந்த போகம் எல்லாம் அறிவுள்ளோர் பார்ப்பார்கள், அறிவினால் (ஆன்ம ஞானத்தால்) மனத்தை வென்றவர்கள் அற்ப போகத்தைப் பெரிய தீங்காகப் பார்ப்பார்கள்; ஆகவே அது துன்பமாம் என்று நினைத்து விடய போகத்தை விரும்பார்கள்.

## மனத்தை மனத்தாலே

வருத்தமுற்ற சிறைச் சாலையினின்று நீங்கின அரசன், தன் பட்டண அளவில் மகிழ்ச்சி அடைவன். ஆனால் வெற்றி மாலையும் வே.ாயுதமும் தரித்த வெற்றி வேந்தன் அவனியும் சிறிது என்ற எண்ணுவான். கலக்கம் பொருந்திய மனத்தை வெல்லுபவர்கள், கையைக் கையால் கால்களைக் கால்களால் பல்லைப் பல்லால் என்பது போல அதனை அதனாலே முதலில் வசப்படுத்த வேண்டும்.

பகையாகிய மன வெற்றியன்றி பிறவிக் கடலைக் கடந்து போவதற்குக் கப்பல் இல்லை. ("பகை மனம் வெற்றியல்லால் பவக் கடல் வங்கம் இல்லை") உள்ளக் குகையினிடத்தில் செயல்களான நஞ்சு நிறைந்த கொடுமனப்பாம்பை வென்றோர் எனப் படுவோர் வகையுள்ள மோட்ச உலகிற் போவார்கள். நல்லொழுங்கு உள்ளவர்கள், குற்றமற்றவர்கள், மிகவும் மேன்மையான பூமான்கள் புகழ் மிகுந்தவர்கள். மனம் என்கின்ற பகையை வென்றோரது தாமரை போன்ற பாதங்களைத் தலை மேல் சூட்டுவார்கள்.

கூட்டமாகிய நகரங்கள் என்கின்ற உலகத்திலிருந்து சுகித்த முன்னுள்ள பாவம் என்னும் (காமம் வெகுளி மயக்கம் என்னும்) மூன்று மதங்களை உடைய யானையினாலும் பேராசை என்னும் ஆயுதங்களினாலும் போர்க் கோலத்தில் இருக்கும் இந்திரியம் (பொறிகள்-கரணங்கள்) என்ற பகையை வெல்லுவாய்.

(இந்திரிய நிக்கிரகத்தால் மனோநாசம் வரும் என்பதாம்)

துன்பமுள்ள மன அகங்காரத்தைக் கெடுத்து, தொடர்ந்து வரும் பொறிப் பகையை வென்றால் பனி தோய்ந்த தாமரைக்காடு (பனியினால் மாய்வது) போல் படர்ந்த வாசனைகள் நாசமுறும். தனி அறிவு ஒன்றே என்று சாதனை செய்து இம் மனத்தை வெல்லும் மட்டும் கனிந்த இருளில் பதுங்கிப் பேய் இருப்பது போல் இருந்து வேதனைகள் தீர மாட்டா.

(விவேகத்தால் பெறும் வாசனாத் தியாகத்தால் இந்திரியத் தியாகம் வரும் என்பதாம்.)

துன்பத்துடன் சுழலாத மனமானது அனைத்தையும் தன் சொரூபமாகப் பார்த்த விவேகத்தோர்க்கு, தத்துவத்தை (உண்மையை) அடைகின்ற விசாரணையினால் அமைச்சன் (clever statesman) என்று சொல்லப்படும்; இந்திரியம் என்னும் இடர்ப்பகையை அறுத்தலால் உபாயம் உள்ள தந்திரி (சாமந்தன்: crafty general) என்று சொல்லப்படும். தனக்கு விருப்பானவற்றைச் செய்வதால் ஏவலாள் என்று சொல்லப்படும்.

விவேகிகளுக்குப் பருத்த தொழில்கள் இல்லாத

தூய்மனமானது நல்ல இன்பம் தருவதால் அன்புள்ள மனைவியாகும். இரட்சிக்கும் தன்மையினால் பரிசுத்தமான தந்தையாகும். குணமுள்ள விருப்பினால் நாடற்கு அரிய நண்பனுமாகும்.

நல்லவர்க்கு; மனமானது நல்ல (ஆன்ம ஞான) நூல்களால் நல்ல நெறியைப் பார்த்து, நன்மையான ஆன்மத் தியானம் செய்து, நன்மையான அனுபவத்தை அடைந்து நன்மையாகத் தன்னை (தன் உருவத்தை)க் கெடுக்கும். நல்ல ஒரு தந்தையாகி நல்ல ஞானசித்தி தரும்.

(அத்தகைய மனமானது துணிவுள்ள) திடமான மிகவும் குற்ற மின்றிப் பார்த்து, எவ்வளவேனும் தடையறப் பார்த்து, ஞானப் பேருணர்வு போதிக்கப்பட்டால் இதய ஆகாசத்தில் குற்றமற்ற தன் குணத்தினால் களங்கமற்ற மனம் இரத்தினம் போல் பிரகாசிக்கும்.

மனம் என்னும் இரத்தினமானது வேறுபாடு என்னும் இழிவாசனையாகிய சேற்றில் அகப்பட்டால் மறைபட்டு ஒருவருக்கும் தோன்றாது. விவேக நீரால் கழுவினால் தனது பிரகாசமாகிய மோட்சத்தைக் காட்டும். விவேக (discrimination) வலிமையால் மெய்ம்மையை (true jnana) மதியாற் கண்டு அகங்காரமுள்ள பொறியை (இந்திரியத்தை) வென்று நீங்குதற்கு அரிய பிறவியை நீக்குவாய்,

(மனமானது விவேக ஞானத்தான் மறைப்பு நீங்கிற் சுயமாய் விளங்கும் என்பதாம்)

இக் காரணத்தினால் இவன் என்றும் நான் என்றம் இறுகிய அறுதி (நிச்சயம்) வீணாம். அத் தன்மையை அறிவினால் திடமாகத் தள்ளி மற்ற (அதற்கு வேறாகிய) மெய்த்திறம் பற்றி உன் ஆன்மாவாகிய கற்பகத்திலிருந்து விரும்பியவாறு நடப்பாய். பொய்த்திற மனத்தினோடு (அமன்ஸ்க பாவத்தோடு) புசித்த அந்தப் பொருள்கள் பந்தம் ஆகா.

இராமா, தாமன் வியாளன் கடன் என்ற சொல்லப்பட்ட அசுரர்கள் சார்ந்த ஞாயத்தை (நீதியை) நீ சாராமல் விட்டுவிடு. வீமன் பாசன் திடன் என்னும் அசுரர்களுடைய ஞாயத்தைப் பொருந்தித் துன்பம் தீரக் கடவாய். என்று வசிட்டர் சொன்னார்.

## தாமன், வியாளன், கடன், சான்று

அதற்கு ஞான வீரனான இராமன், இப் பெயர்களால் சொல்லப்பட்ட தானவர் யாவர் என்று வினவினான்.

நாம் அதைச் சொல்ல, ஆசையாயிருக்கின்றது எதுவோ-நீ அதிற் பொருந்துவாய் என்ற வசிட்டர் சொன்னார்.

சஞ்சரித்துப் பாதாளத்திற் பொருந்தியிருக்கின்ற சம்பரன் என்ற பெயர் உடைய ஓர் அசுரன் வஞ்சம் முற்றிய மாயையிலே வாழ்பவன். தன் வலிய படைக் கடலால் தேவேந்திரனைக் குறைவு செய்ய, வானவரும் இவன் துயின்ற போதும் பல திசைகளில் சென்ற போதும் மிகவும் கோபித்து அசுரர்கள் கெடும்படி அடித்தார்கள்.

இவ்வாறான தேவர்களின் வல்லமையைச் சம்பராசுரன் தெரிந்து, ஆகுவன் துருமன் திறமிக்க முண்டிகன் ஆகியோருடைய படைகளை ஏவினான். அவர்கள் அனைவரும் மடியுமாறு சமயம் பார்த்து வானவர்கள் போர் செய்தார்கள். அதனை அறிந்த கோப மிக்க சம்பராசுரன் தெய்வ வுலகம் வர அவன் மாயாவித்தையில் நிறைந்தவன் என்று அவன் எதிராகத் தேவர்கள் நிற்கப் பயந்து ஒதுங்கினார்கள். (ஒளிந்தார்கள்).

மகா மேருவின் குகையில் தேவர்கள் அடைந்தார்கள். வீதிகள் தோறும் தெய்வப் பெண்கள் நின்று அழும்படியாகச் சூனியமாக இருக்கின்ற தெய்வ வுலகத்தை, பரமேசுவரன் வென்ற திரிபுரங்கள் என்று சொல்லும்படி எரிக்கின்ற நெருப்பைப் பொழிந்து சம்பராசுரன் திரும்பினான். நெடுந் தொலைவு நீங்கியிருந்த தேவர்கள் மறுபடியும் வானகரில் வந்தனர் என்று அறிந்து மிகுந்த சேனைகளை ஒழிவின்றிச் சம்பராசுரன் மாயாவித்தையால் அனுப்பிக் கொண்டிருந்தான்.

இவ்வாறாக வந்த அசுரர்கள் பற்று அறும்படியாக ஆதியான தேவர்கள் அடித்து ஒழித்தார்கள். திரும்ப அதுவே மிகுந்த கோபமாகச் சம்பராசுரன் தன் மாயை வித்தையால் தாமன், வியாளன், கடன் என்ற பெயருடைய மூவரை அனுப்பினான். அவர்கள் பலம் பொருந்திய மேரு மலை உலாவுவது ஒப்பார்கள். பாவிக்கப்பட்ட வாசனைகளின்

வசம் ஆகாதவர்கள், பாசம் அபிமானம் ஆன நினைப்பு இல்லாதவர்கள்.

இறத்தலும் வாழ்தலும் களிப்புறலும் சோர்வுறலும் வெற்றி மாலை தரித்த வெற்றிகளும் தோல்விகளும் சண்டைக்குப் போதலும் அஞ்சித் திரும்புதலும் ஆகிய யாவையும் அறியாதவர்கள்; போர் செய்வோரை முழுக்க அழிப்பவர்கள், ஆதலினால் இம் மூவரும் பகைவர் சேனையைப் பாணம் செலுத்தி அழிப்பார்கள். இவர்கள் அழிவடையார்கள் - என்று ஆலோசித்துப் பாதாள அசுரன் சம்பரன், மலையில் உள்ள அசுரர்களையும் சமுத்திரத்தில் உள்ள அசுரர்களையும் பூமியில் உள்ள அசுரர்களையும் இவர்களுக்குப் பலமாகப் பின் செல அனுப்பினான்.

சம்பராசுரன் விட்ட நெடும்படைகள், கால்களுடன் மலைக் கூட்டங்கள் வந்தது போலவும் மீன்களை உடைய கடல்கள் பூமியில் விரிந்தது போலவும் கற்பம் முடிந்தது போலவும் வந்து பொருந்தினார்கள். விண்ணுலகத்தாரும் அவ் அசுரர்களைப் போலவே வந்தார்கள். வாயுவொடு நெருப்புப் பொருதல் போல் இவ் விதமான இரண்டு சேனைகளும் எதிர்த்து யுத்தம் செய்தன. ஆகையால் அடுத்த கற்பம் வந்து விட்டது போல் தோன்றியது.

(அடுத்த கற்பம் விளைந்தது என்றதனால் இக் கற்ப முடிவுக்கும் மறு கற்ப முதலுக்கும் இடையில் உண்டான அழிவை ஒத்தது எனக் கொள்க)

ஆயுதங்கள் நெருப்பைக் கக்கிக் கொண்டு நெருங்கி வர, உடல்கள் எவ்விடத்தும் மலைகளைப் போல மடிந்து விழுந்தன. மாய்கின்ற உடல்கள் உமிழ்கின்ற குருதிக் கடலில் மலைகள் தத்தளித்து அலைந்தன. காய்கின்ற வஞ்சராகிய அசுரர்கள், நெருங்கித் துரத்தினார்கள். தேவர்கள் தளர்ந்து ஓடினார்கள். ஓடுகின்ற தேவர்களின் பின் தாமனும் மற்றுமுள்ள அசுரர்களும் திசைகள் முழுதும் தேடினார்கள்.

தேவர்கள் ஓடி மறைந்ததைக் காணாதவர்களாய், வெற்றி கண்ட மூவரும் தெய்வ வுலகத்தினின்று திரும்பி, சம்பராசுரனுக்கு முன்பாக வந்தார்கள். கூட்டமாகிய தேவர்கள் என்ன செய்வது என்று எண்ணிக் கொண்டு தாமரை இருக்கையில் இருக்கும் பிரமன் முன் போய்

அன்புடன் வணங்கி, வெம்பு தீப் போன்ற சம்பரனின் கொடுமையையும் கொடிய கண்களை உடைய தாம வியாள கடர் தொடர்ந்து துரத்தினதையும் சொன்னார்கள்.

## பிரமன் ஆலோசனை

அவற்றைக் கேட்ட பிரமன், சிந்தித்து, 'அஞ்ச வேண்டா' என்று இந்த வகை சொன்னான் :

ஆயிரம் வருடத்துக்கு அப்புறம் சம்பராசுரன் யுத்தத்தில் அசுரர்களைத் தேவேந்திரன் கொல்லுவான். அந்த மட்டும் நீங்கள் செய்யத் தக்கதைச் சொல்லுவோம்.

தாமன், வியாளன், கடன் என்று சொல்லப் பட்டவர்களைப் போய்ப் போருக்கு அழையுங்கள். போரிடுவது போலவும் அவர்கள் உங்களைத் தாக்கும் பொழுது மீண்டு போவது போலவும் பாவனை செய்யுங்கள். இவ்வாறு ஆயிரம் ஆண்டுகள் நீங்கள் செய்து வர, கண்ணாடியில் நிழல் என அவ் அரக்கர் மூவரின் மனத்திலும் அகங்கார வாசனை பிரதிபலிக்கத் தொடங்கும்.

நிலைபெறும் படியாக நான் என்கின்ற வாசனை நின்றால் வலைக்குள் அகப்பட்ட பறவையைப்போல் மூன்று பேர்களும் மாள்வார்கள். கொல்லுதற்கு எளிதாகும். ஆசையே உயிர்க் கெலாம் கூற்றாக நீங்காத துக்கமாகும். ஆசை யின்மையே துன்பமில் இன்பமாம்.

வாதனை என்னும் கயிற்றினால் மன்னுயிரெல்லாம் கட்டுண்டு துன்பம் அடையும். அக் கயிறு இறுகுமாகில் துயரைக் கொடுக்கும். பற்றற விடுமானால் வேதனை இல்லையாம். குற்றமற்றவர்களாயினும் நிறையக் கற்றவர் களாயினும் தீரர்களாயினும் ஆசையினால் பந்தப் படுவார்கள்.

மேன்மையில் உள்ளவர்களும் வேட்கையால் தளை பூண்ட சிங்கம் போல் தாழ்வை அடைவார்கள். நீங்கள் கலங்காதிருங்கள்.

- என்று சொல்லிப் பிரமாவானவர் அவ்விடத்தினின்றும் மறைந்தார். இவற்றை நன்கு கேட்ட தேவர்கள் நிலம் கிழிந்து அண்டம் கிழியும்படி நெடிய துந்துமியோடு ஆரவாரம் செய்தார்கள்.

ஆரவாரத்தைக் கேட்ட அசுரர்கள் பாதாளத்திலிருந்தும் மிகுந்த வேகத்துடன் கோபித்து வந்து கொடிய ஆயுதங்களை அமரர்கள் மேல் பொழிந்தார்கள். காலத்தைப் போக்கும் தேவர்கள் யுத்தத்தில் உடைந்தோடிப் போனார்கள். மீளவும் வந்து அமர் செய்து ஓடிப் போய்ப் பின்னும் வந்து அந்த யுத்தத்தைச் செய்தார்கள்.

## 'நான்' காரணம்

இவ் வகையாகப் பல உபாயங்களால் கழிந்த நெடுங்காலம் யுத்தம் செய்ய, கெடுகின்ற திடமான 'நான்' என்கின்ற பழக்கத்தினால் உண்மையாக 'நான்' என்று நினைக்கின்ற வேட்கையை அசுரர்கள் விரும்பினார்கள். அவ் வகையாலே உள்ளம் அகப்பட்டு நின்றது.

அச்சம் வந்து பற்றிக் கொள்ளவும் மிகுந்த மோகம் தளைந்து கொள்ளவும் வருந்துகின்ற மாயா பாசத்தில் அழுந்தி என்ன செய்வோம் என்று துன்பம் வர மெலிந்து உடல் நாசமாகாமல் இருக்கும் வண்ணமும் மயக்கம் பொருந்திய திரவியங்களினால் இன்பம் வருவதும் எவ்வண்ணம் என்ற அவர்கள் (அரக்கர்கள்) ஆலோசித்தார்கள்.

எப்போதும் இவ்வாறு எண்ண, பந்தப் பட்ட மனத்தை உடையவராய் முடிவற்ற திடம் இல்லாமல் போர் என்றால் மிகவும் பயந்து மனம் நொந்து, இறப்போம் என்றும் ஆதரவான இடம் நமக்கு எது என்றும் நினைவினாலாகிய தீய சித்தத்தால் கலங்கிச் சோர்ந்தார்கள்.

தங்கள் வலியெலாம் இழந்து, தங்கள் முன்னொருவன் வந்து நின்றாலும் அழிக்க மாட்டாதவர்களாய் நடுக்கம் அடைந்தார்கள். விறகு இல்லாமற் போனால் ஆகுதி கொடுக்கும் அவி உணவை அக்கினி புசிக்கும் படி வல்லமை உண்டாமோ? சுருங்கச் சொன்னால், அசுரர்கள் அஞ்சி ஓடினார்கள், இறந்து பட்டார்கள்.

தாமனும், வியாளனும், கடனும் முன்பு சென்ற வழியைக் குற்றமற்ற உணர்வு உண்டாக உனக்குச் சொன்னோம். விளையாட்டினால் மகா மனமானது அவிவேகத்தைத்

தடையில்லாமற் பழகி விட்டால், அறிவின்மையாகிய பிறவித் துன்பமானது, இவ் வண்ணம் நீங்காது.

இவர்களது வழியை நீ அடையாதே இராமா, என்று வசிட்ட முனி சொன்னார்.

அந்த மூன்று அசுரர்களும் பரப் பிரம்மத்திலிருந்து எவ்வாறு உதித்தார்கள் என்று தெரியவேண்டும். முனைவ, கூறு என்று இராமன் கேட்டான்.

வசிட்ட முனி சொல்வார்.

அச்சமுள்ள தாமன் முதலானோர் பரத்தினது தோற்ற மாத்திரம் (பிரதிபா மாத்திரம் : **manifestation**) சரீரம் ஆனவர்கள்.

(பிரதிபா மாத்திரமாய்த் தாமாதிகள் தோற்றினர் என்பதாம்)

எதிரே காணப்பட்ட பிரதிபையே உடம்பாய் (தோற்றம் மெய்யாய்) இருக்கிற இந்தத் தாமன் முதலியோர் போல இவ்விடத்தில் உள்ள நாமும் உண்மையாகச் சிதாகாசத்திற்கும் புறம்பு அல்லம். சுத்த வீரனே, உனது அறிவில் நான் எனலும் பொய்யே, நீ எனலும் பெய்யே, தாமன் முதலிய அவர்கள் உண்டு எனலும் பொய்யே.

(யாமும் அப் பிரமப் பிரகாசமாய் விளங்குவமே யன்றி வேறு அன்று என்பதாம்)

பிரமத்தினது ஒளியே மெய்யாய் (உருவமாய்)ப் பாரித்து (வியாபித்து இருக்கின்ற) ஓர் ஆன்ம சக்தியானது உரமுள்ள சம்பராசுரனுடைய நினைவினால் சலனம் அடைந்து தாமன் முதலிய மூன்று வடிவங்களாய் உரத்த (திரமான) உல்லாசத்தை அடைந்தது. ஆகவே சொல்லிய இக் குணத்தில் வரும் அவர்களும் நாமும் உண்மையில் எவ்விடத்தும் இல்லை.

அறிவதாய் அறிவே மெய்யாய்
    அமலமாய் அனைத்தாய் ஆறிப்
பிறிவுறு வரவு போக்கில்
    பிரமமே உளதாம்; அந்தச்

செறிபொருட் சக்தி தோற்றம்
மாத்திரம் சகமாய் நிற்கும்;
பொறிகள்பல் காட்சி பொய்யே
பொருள்மெய்யே என்று வாழ்வாய்.

*யாவற்றையும் சாட்சியாய் அறிவதாகியும் அறிவே வடிவாகியும், நின்மலமாகியும், எல்லாமாகியும் சாந்தமாகியும், வேற்றுமையான உதய அத்தமனம் இல்லாததாயும் இருக்கின்ற பிரமமே உள்ளதாகும். அந்தப் பூரணப் பொருளுடைய சிற் சக்தியினது தோற்ற மாத்திரம் (உண்டாதலே) உடையதா யிருக்கும். பொறிகள் (இந்திரியங்களால்) அறியப்பட்ட பல காட்சி பொய்யே. பிரமப் பொருளே உண்மை என்று வாழ்ந்திருப்பாயாக.*

## 4:3 விம, பாச, திடர் கதை*

### முன்னுரை

*முன், சம்பராசுரனின் பிரமத் தியானத்தில் உதித்தும் விவேகம் இருந்தும் இந்த யுத்தத்தைத் தங்கள் அனுபவ உல்லாசமாய்ப் பாராமல் வேறுபட்டு யான் எனது என்னும் பழக்கம் ஏறத் தன்னை இழந்ததைக் கூறி, எப்படிப்பட்ட இடர் வந்த விடத்தும் வேறுபட்டுத் தேகத்தில் அகம்பாவம் வராமல் தனது உல்லாசமாய்ப் பார்க்கும் நிமித்தம் வீமன் முதலியோர் கதையைக் கூறுகிறார் ஆசிரியர்.*

### கருத்து

*இப் புத்திரர் முதலியோர் நமக்கு என்றும், இப் பூமி முதலானவை நமக்கு என்றும், வாடுகின்ற பொல்லா வாழ்வால் உதவியானது* (benefit) *ஒரு சிறிதும் கிடைக்காது. உதாரம் மிக்கவராக இந் நாசம் அடைகின்ற உலகமெல்லாம் துரும்பு போலக் காண்போரிடத்தில் மான்கள் உலர்ந்த புல்லை (வைக் கோலை)த் தீண்டாதது போலத் துன்பங்கள் யாவும் தொடரா.*

---

* The Story of Bhima, Bhasa anmd Drdha

(பயன் இன்றிய சகத்தை அற்பமாகப் பார்க்கில் சுகம் உண்டாம் என்பதாம்)

உள்ளத்திற் பொருந்த, எல்லாச் சக்தியும் சேர்ந்த உண்மையை (பிரமத்தை) உணர்வோரை எண்டிசைப் பாலர் அளவிடற்கரிய பிரமாண்டத்தைக் காப்பது போல் காப்பார்கள். அன்பாகியும் விசாரணையில் விருப்பாகியும் தத்துவத்தை விளக்கும் பொருளில் முயற்சி மிக்கவராகவும் இருக்கின்றவர்களே மனிதராவர்; மற்றையோர் விலங்குகள் ஆவர்.

(தத்துவத்தை அறிகின்ற முயற்சியால் சகம் அற்பமாகத் தோற்றும்)

செயலரும் துன்பம் அடைந்தாலும் செய்யத் தகாத செயல்களைச் செய்யக் கூடாது. இயல்பு அல்லாத வழியால் புசிக்க இராகுவை அமுதமானது கொன்றது (வருத்தியது). முயலுகின்ற நற்குணங்களால் மிகுந்த கீர்த்தியை எய்திய நல்லவர்களுக்கு வசமல்லா அனைத்தும் வசமாகி ஆபத்து அனைத்தும் போய், என்றும் அளவற்ற செல்வம் உண்டாம்.

நீங்காத முயற்சியினாலும் யுத்தியினாலும் உயர்ந்த நூல்களாலும் குற்றமற நடப்பவர்களுக்கு எந்தப் பயன் எளிதில் வராது? வழிபடும் ஆன்ம ஞான சாத்திரத்தை அனுபவிப்பவர்கள் வருபயனை விரைவில் அடையக் கருதாமல் முறையாகச் செய்து வந்தால், கெடா மனம் முழுதும் உதிர்ந்து அளவற்ற ஆன்ம லாபத்தைக் கொடுக்கும்.

(சுருதி யுத்தி அனுபவத்துடன் விசாரிக்கும் விசாரணை ஆன்ம லாபம் தரும் என்பதாம்)

வருத்தமற்று, அச்சமும் சோம்பலும், செருக்கும் இல்லாமல் ஆன்ம ஞான நூற்பொருளின் பின் சென்று ஒருவரால் ஏவுதல் இல்லாமல் நடக்கக் கடவாய். கெடும்படி விரும்பாதே. திரவியங்கள் பயனில்லன ("அர்த்தங்கள் அனர்த்தம் ஆகும்"). "அளவிலாப் போகங்கள்" நோயாம் (துன்பமாம்) "செல்வம் பெருத்த ஆபத்தாம்". "நிராசை (desirelessness)யே பேரின்பம்".

துன்பம் மிக்க கூட்டம் இல்லாமல், இயல்பான ஒழுக்கம் அடைந்து சம்சார (குடும்ப)மான துன்பத்தை உடைய

சிற்றின்பம் (விடய சுகங்களை) கருதாத பெருமை உடையவர்க்கு, நெடும்புகழ் வாணாள் செல்வம் நிறைகுணம் அனைத்தும் உண்டாய், கிடைக்கின்ற பிரமப் பயனானது வசந்த காலப் பூங்கொடிகள் போலக் கிடைக்கும்.

தவங்களாலும் தெய்வ நீராலும் (புண்ணிய தீர்த்தங்களாலும்) சாத்திரங்களினாலும் நீங்காத பிறப்புகளை, மகான்களது திருவடியை வணங்கிப் பற்றறுக்க வேண்டும். பயனின்மையான நான் என்னும் மோகமும் சினமும் மிகவும் குறைந்து இயல்பாகிய சன்மார்க்கங்களிற் சென்று ஆன்மஞான நன்னூல் துறை நின்றவர்கள் உயர்ந்த மேலோராம்.

(மகான்களைப் பணிவதே பிறவித் துன்பம் நீங்கும் உபாயம் என்பதாம்)

நான் என்பதற்குப் பொருளாகிய பிரமத்தைக் காணாதவர் கள் சிதாகாயத்தைப் பாரார்கள். நான் என்பதன் பொருளாகிய பிரமத்தைக் கண்டோர் சிதாகாயம் ஆவர். நான் என்கின்ற அகங்கார மேகமானது ஞான விண்மதியை மூடினால் நான் என்று சொல்லப்படாத (பிரமம் என்னும்) அல்லியான நன்மலர் மலராது.

(நான் என்பதை நீக்கித் தானாக விளங்குபவர்களே மகான்கள் என்பதாம்)

அளவற்ற துன்பமுள்ள அகங்காரமானது முளையாகத் தோன்றி வளருகின்ற நீங்காத பிறவி என்னும் மரக் கூட்டம் யான் எனது என்கின்ற நெடிய பல் கிளைகளாக விரித்து நரகம் என்னும் காய்களைக் காய்க்கும். அம் மரங்களானவை "மடியிலா ஞானத் தீயால் வேரொடும் வெந்து போம்"

(ஞானத்தினால் அகம்பாவம் கெடும் என்பதாம்)

இவ்வாறு வசிட்டர் சொல்லவும், "இவ் அகங்காரமானது எவ் உரு உடையது? எவ்வாறு அதனை வென்றிடலாம்? தேக வாசனைகளோடு பொருந்தினவனாகவோ பொருந்தாதவனா கவோ இருக்கும் ஒருவன் அகங்காரத்தை ஒரு பொழுது வென்றால் நேரும் பயன் என்ன?" என்று "நன்றுணர் வள்ளல்" இராமன் கேட்டான். ஞானம் ஆர்ந்த வசிட்ட முனி சொல்லுவார்.

## மூவகை அகங்காரம்

மூவகை உலகங்களில், அகங்காரம் மூன்றாக உள்ளது. பொருந்துதற்கு அரிய இரண்டு அகங்காரம் நன்மையை உடையது. மூன்றாவதான அகங்காரம் இழிவை உடையது. எல்லா உலகங்களும் பரமாத்மாவும் நாமே யாம், நாம் முடிவிலம், நம்மை யன்றி ஒரு பாவனையும் இல்லை என்.ற ஆராய்ந்தறிகின்ற ஞானமே மேன்மையான அகங்காரமாம்.

நெல்லின் வால் நுனியிலும் சூட்சுமமாகியும் எல்லா உலகங்களுக்கு அயலாகியும் நாம் எப்பொழுதும் நிலையாயிருக்கிறோம் என்று கொள்ளப்பட்ட ஞானமே இரண்டாவது அகங்காரமாம். இந்த நிச்சயத்தை (நிலையை) உடைய இரண்டு அகங்காரமும் சீவன் முத்தர்களிடம் காணப்படும். அவர்களை ஈடேற்றி, அடைதற்கு அரிய முத்தியைக் கொடுக்கும்; சுழலுகின்ற பந்தத்தைக் கொடுக்க மாட்டாது.

(இவ் இரண்டு அகங்காரமும் மோட்சம் அடைவதற்குத் துணையாம் என்பதாம்)

யான் கைகால்கள் உடைய உடலளவே என்று அறிகின்ற உறுதியே மூன்றாம் அகங்காரமாம். அது உலகில் உள்ள அனைவர்க்கும் உரியதாம். மிகவும் பொல்லாது. பிறவி என்கின்ற நச்சுமரம் வளர்தலுக்குக் காரணமாம். வருத்தமுற்றாவது அதனை ஒருக்க (கெடுக்க) வேண்டும்.

இது 'கொடிது கொடிது சாலக் கொடிது' இந்த அகங்காரத்தின் கொடுமையினால் அளவற்ற உயிர்களெல்லாம் மயக்கம் அடைந்து அறிவிழந்தார்கள். கடிதில் (சீக்கிரத்தில்) முன் சொன்ன அவ் இரண்டு அகங்காரங்களாலும் இம் மூன்றாவதான அகங்காரத்தைக் கடிந்து (கெடுத்து) இதை எவ்வளவு நீக்கினையோ அவ்வளவே மேலான பிரமப் பொருள் வரும்.

மேலாகிய இரண்டு அகங்காரங்களால் பிரமம் எய்தி மேலாகிய அவ் இரண்டு அகங்காரங்களையும் தள்ளி, மூன்றாவ தான ஓர் அகங்காரமும் இல்லாமல், உறுதியாக நிற்பாயாகில் அந் நிலையே 'அறவுயர் பதமதாகும்' (முதிர்ந்த பிரமபதமாம்). தோற்றுகின்ற உடலை நான் என்று

*சொல்லாமையே சுருதிகள் (வேதங்கள்) சொல்லுகின்ற நிருவாணமாம்.*

*(உடம்பை நான் என்பது ஒன்றும் பிரமத்தை நான் என்பது இரண்டும் ஆகிய மூன்றும் கரைந்தால், தான் மாத்திரமான மோட்ச லாபம் உண்டாகும் என்பதாம்)*

*இவ் அகங்காரங்களின் குணத்தை உரைக்கக் கேட்பாய்; முன்னே சொன்ன தாமன் முதலிய அசுரர்கள் அடியோடு அழிந்த பின்பு மாயவித்தை வல்லவனான சம்பராசுரன் கோபித்து மதம் (கருவம்) உறு இமையவர் படையைக் கொல்லும் பொருட்டுத் தந்திரத்தைப் பல விதமாக யோசித்தான்.*

## அகந்தை அற்ற வீரர்

*அசுரர்கள் என்று சொல்லும்படி முன்பு நான் படைத்த தாமன் முதலிய மூவரும் ஆன்மஞானம் இல்லாமையால் யான் எனது என்று பொய்யுடையவர்களாய் வானவரை எதிர்த்த போரில் மாண்டார்கள். ஆகையால் இனி ஆன்ம ஞான சாத்திரத்தில் தெரிந்தவர்களாகவும் விவேகம் உடையவர்களாக்வும் பொருந்திய (எனது) மாயையினால் படைப்பேன்.*

*மெய்யுணர்வு பொருந்துதலால், வெறும் பொய்யாகிய அகம்பாவத்தில் கெட மாட்டார்கள். விண்ணோர் சேனையை நலிவுண்டாக வெல்வார்கள் என்று களங்கமற்ற மனத்தில் சிந்தித்து மாயையால் அவர்களை உண்டாக்கினான். பூமியைச் சூழ்ந்திருக்கின்ற சமுத்திரத்தில் உண்டாகப் பெற்ற குமிழிகள் போல் மூன்று பேர் உண்டானார்கள்.*

*அனைத்தையும் அறிந்தவர்களும் தம்மை அறிவு வடிவம் என்று அறிவாற் கண்டவர்களும் (சஞ்சித) வினைத் தொடர்பு இல்லாதவர்களும் ஒன்றில் விருப்பு வெறுப்பு இல்லாதவர்களும், நினைக்கும் நிகழ்காலத்தில் தாம் விரும்பும் நிலையை அடையக் கூடியவர்களும் தினையளவும் ஐயமில்லாத தெளிவுள்ள சான்றோர்களும் ஆன -*

*- **வீமன், பாசன், திடன்** என்று பெயரால் பிரிவாகச் சொல்லப்பட்டவர்களும் தங்கள் சீரினால் உலகையெல்லாம்*

துரும்பாக அறிகின்ற தூயவர்களும் ஆகிய இவர்களைத் தேவ யுத்தத்திற்குப் போங்கள் என்று சம்பராசுரன் சொல்ல அவர்கள் சென்று ஒப்பற்ற அமரர்களுடன் நெடுஞ்சமர் புரியலுற்றார்கள்.

அளவில்லா வருடம் வெம்போர் இயற்றினார்கள். இவர்கள் மனத்தில் துண் என்று, எனது யான் என்னும் தோற்றம் உண்டான பொழுது, சூட்சும விசார ஞானத்தினால் நாம் ஆர் என்று நன்றாகப் பார்க்கவும், புண்ணியம் இல்லாதோர் செல்வம் போல் அந்த யான் எனது என்னும் தோற்றமானது அசத்தியமாய்ப் போம்.

பல விதமாகிய ஆன்ம விசாரணையினால் அகங்காரம் அற்றோர் பிறப்பு இறப்புகள் வரும் என்று அஞ்சும் சலனம் இல்லாதவராயிருப்பர். களங்கமற்றவர் அன்னோர்; எளிதில் கிடைக்கும் பொருளைக் கொள்வர்; தற்பொழுது நடந்த அனைத்தும் தொன்மையான புதுமையாகிய ஞான திருட்டியினால் குற்றமறச் சமமாகப் பார்ப்பார்கள்.

ஆகையினால் வீரர்களான வீமன் முதலியவர்களால் தேவர் சேனையானது, ஆசையினால் புசித்து மாய்க்கும். காமுகர் செல்வத்தைப் போல ஓடிப் போதலையே விரும்பித் திசைகளிற் போய் மறைந்து "உலகம் உண்ட மாதவா (திருமாலே) அபயம்" என்ற திருமாலிடம் போய்ச் சேர்ந்தது.

அடைக்கலம் புகுந்த வானோர்க்கு அஞ்சல் என்ற அபயம் கொடுத்து, கோபித்து வந்து அமரில் மோதும் திருமாலோடு அரக்கர் அரிதாகிய யுத்தத்தைச் செய்யத் திருமால் சக்கராயுதத்தை அனுப்ப அதினின்றும் பாயப்பட்ட அக்கினிச் சுவாலையானது எரிக்க எரிந்து, திருமால் வைகும் தூய வைகுந்தம் அடைந்தார்கள்.

மற்றினி இந்த வாற்றால்
வாதனை யாலே பந்தம்;
பற்றுறும் அதனை நீங்கில்
பந்தம்போம் விவேகத் தாலே
உற்றறி; உண்மை யாலே
உபாதிவா தனைபோம்; போனால்

அற்றம்இல் சித்தம் நெய்தீர்
தீபம் போல் ஆகும் அன்றே!

இந்த வகையாக, வாசனையினால் பாசமானது பிடித்துக் கொள்ளும்; அவ்வாசனையை நீங்கினால் பாசமானது நீங்கும்.

விவேக ஞானத்தால், இராமா, நீ நன்றாய் அறிவாய். அப்படி அறிகின்ற தத்துவத்தாலே உபாதியாகிய வாசனை நீக்கம் வரும். வாசனை நீக்கம் வந்தால் அச்சமற்ற மனமானது நெய் இல்லாத் தீபம் போல் உபசாந்தம் ஆகும்.

## 4:4 தாசூரன் கதை*

### முன்னுரை

அகங்காரத்தைத் தியாகம் செய்வது ஆன்மிக ஆக்கத்தின் பொருட்டே என்பதை முன் அறிவித்த ஆசிரியர், ஆன்ம சங்கற்பமே இவ் உலகாக விளங்குகிறது என்ற உண்மையை விளக்கும் பொருட்டுத் தாசூரன் கதையைச் சொல்கிறார்.

### கதைக் கருத்து

ஒழியாத துயரைக் கொடுப்பது மாயை என்கின்ற ஆபத்து, அதனைக் கெடுக்க மன நாசமே சிறந்த உபாயம்.

குறைவிலா மெய்ஞ்ஞானப் பொருளையெல்லாம் நாம் சொல்ல,, இராமா, நீ கேட்டு மறதியின்றி மனத்திற் கொள்வாய். குற்றமாகிய போகத்தின் ஆசையே பந்தமாகும். அவ் இச்சையை விடுவதே பிரம்ம இயல்பான மோட்சம் ஆகும். இதர வழியிலான பல சாத்திரங்களாலும் பயன் என்ன? வருந்தாமல் இச்சைத் தியாகம் என்ற இந்த வழியிலே நடத்தல் வேண்டும்..

இது இன்பம் இது இன்பம் என்ற சொல்லப்பட்ட அனைத்தையும், இராமா, நெருப்பென்று, நஞ்சென்று, நினைப்பாயாக ஏற்றத் தாழ்வான துன்பமுள்ள

★ The story of Dasura

போகங்களைப் பல காலும் விசாரித்து நெஞ்சில் தோய விடாமல் புசித்தால் இன்பமாகவே இருக்கும். பொருள்களில் மனத்தைப் பதிய வைத்தல் ஆன்ம நாசமாம்; மனத்தை அழித்தலே ஆன்ம உதயமாம். நல்ல பிரம ஞானிகளுடைய மனம் நாசம் அடையும். அஞ்ஞானிகளின் குற்றம் மிகுந்த மனம் கால் விலங்கு ஆகும்.

ஞானிகளின் உயர் மனத்துக்கு ஆனந்தம்-ஆனந்தமின்மை; அசைவு - அசைவின்மை; சத்து - அசத்து; ஆகியவையோ அவ்வவற்றுக்கு இடைப்பட்ட நிலையோ கிடையாது.

(ஞானிகள் மனம் ஒன்றிலும் பற்றற்றுத் தன்மயமாய் விளங்கும் என்பதாம்)

## சகத்துக்கு மேலாக ஆன்ம ஞானம்

இவ்வாறு வசிட்டர் சொல்லக் கேட்ட இராமன், "இந்த சகம், தத்துவ சொரூபத்தில் இருக்கிறது என்ற தன்மையையும் சகத்துக்கு மேலாக ஆன்ம ஞானம் இருக்கிறது என்ற தன்மையையும் அறிவு துலங்கச் சொல்வீராக" என்ற கேட்டான். வசிட்டர் சொல்லத் தொடங்கினார்.

ஆகாயமானது வேறாகாமல் எவ்விடத்தும் மேவி இருந்தும் மேவாமல் நுண்மையினால் வேறுபடுகின்றது. அது போல ஒருமையான ஞான சொரூபமானது எவ்விடத்தும் பூரணமாக ,இருந்தும் எவற்றையும் கூடிப் பொருந்தாமல் அவற்றின் வேறாக, பொருள்கள் பாதிக்கப்படும் மாறுதல்களால் பாதிப்பு அடையாததாக இருக்கிறது.

பயனற்ற சங்கற்பங்கள், பெயர், அழிவு, வேற்றுமை. ஆகியன இல்லாத ஆன்ம ஞானமானது ஆகாயத்தை நூறு இலக்கம் (கோடி) பங்கு வைத்து அவற்றில் ஒரு பங்கு என்று கூறுமாறு மிகச் சூட்சுமமானது.

அது பல பெயர்களால் (ஆன்மா முதலிய பெயர்களால்) சொல்லப்படுகிறது. ஞானிகளிடத்தில் தூய ஞானமாக இருக்கிறது. சம்சாரத்தை உண்டாக்கும் அஞ்ஞான சொரூபமாக அது தோன்றினாலும் தன் இயல்பில் இரண்டற்ற ஒன்றாகவே அது இருக்கிறது; தன்னைத் தான் அறியும் அறிவாகவும் அது இருக்கிறது. அது நிகரற்றதாக ஒரே

ஞானமாக இருப்பினும் அலைகடல் சூழ்ந்த, சத்தா இயல்புடைய (Satha : Be-ness) உலகமாகவும் தன்னைக் காட்டிக் கொள்கிறது.

## ஞானச் செல்வம்

தன் ஆன்மாவை அறியாத மூடர்க்குத் துன்பம் தரும் இடையறா வளையங்களாகிய மறுபிறப்புகள் அடிமைத் தனத்தையும் துன்பத்தையும் தந்து சிதைவை உண்டாக்குகின்றன. தமது உண்மையை - ஆன்மாவை - அறிந்தவர்களிடம் ஞானத்தின் ஒளி உண்டாகிறது; எல்லாப் பொருளும் ஒன்று என்று காணப்படுகிறது. தங்கள் ஆன்மாவை அனுபவிக்கும் தன்மையால் கருத்தா, கருவி, காரியம் ஆகிய மூன்றும் தம் ஆன்மாவில் ஒன்று என்று பிரகாசிக்கும். அவர்கள் தியானிப்பதெல்லாம் ஞானத்தின் சாரத்தையே. காலம் கடந்த அந்தச் செல்வத்தை அனுபவிப்பவர்கள் எக் காலத்தும் அவ்வாறே இருப்பார்கள்.

எதற்குத் தோற்றமும் மறைவும் இல்லையோ, எழுதலும், நிற்றலும் இல்லையோ, அயல் போதலும் வருதலும் இல்லையோ எது ஒரே சமயம் இருப்பதாகவும் அங்கில்லை என்பதாகவும் சொல்லப்படுமோ அது ஞானம் ஆகும். அதிலே களங்கமிலாத் தூய ஆன்மா இருக்கிறது. அந்த ஞானமே தன் உள்ளார்ந்த பரந்த சக்தியால் மேற்கூறியவாறு பல வகைத் தன்மை உடைய பிரபஞ்சமாக விளங்கி நிற்கிறது.

## சீவ உரு

இத் தன்மையானது பிரகாசமாகியும் இருளாகியும் ஒன்றாகியும் மிகப் பலவாகியும் இருக்கின்ற தனது செய்கையினால் தானே பூரண ஞான தத்துவ நிலையை விட்டு, இவன் என்றும் அவன் என்றும் நான் என்றும் நீ என்றும் சொல்கிற குணத்தைச் சிந்தித்த பாவனையால் சீவ உருவாகிறது. பின் சம்சார வலையில் அகப்பட்டு அது, சங்கற்ப-விகற்பம், இருத்தல் - இல்லாதிருத்தல், பற்றுதல் - விடுதல் முதலான இருமைகளுக்கு உள்ளாகிறது.

இவ்வாறாகப் பேதமுற்ற நிலையில் இந்தப் புரியட்டகத்தை (உடலை) அளவற்ற விகற்பங்களால்

உண்டாக்கினாலும் அது அதன் தலைவன் அன்று. இந்த நிலையில் சலனம் ஆனது படிமுறையிலான எழுவகை வரிசைப் பிறவியை உண்டாக்குகிறது. தன் ஒப்பில்லாப் பிரம சக்தியினால் அது அனைத்தையும் பிறப்பிக்கிறது. ஒடுக்குகிறது. ஆகவே மன-சங்கற்பத்தால், இந்த உலகம், கானல் நீர் தன்னைக் காட்டுவது போல எங்கும் இருப்பது போலப் பொய்யான பூத ஆகாசத்தில் (elemental akasa) காட்டிக் கொள்கிறது.

## பிரமம் என்ற பெயர்

மிகுந்த மதத்தினால் தன்னை அயலானாக நினைத்தல் போலப் பிரிவில்லாத அந்த ஞான சொரூபமே பொய்யாக (அசத்தாக)த் தோற்றம் தருகிறது. மேற் கூறிய ஞானமே சத்தம் முதலிய புலன்களை அறிதற்கு ஆற்றல் தருகின்றது. என்பதை, இராமா, அறிவாயாக. இந்தப் பேருலகாகத் தோற்றுகிற, நிறைந்திருக்கும் பரப்பிரமம் ஞானம் அன்றி வேறன்று என்பதையும் அறிவாயாக. பிரமம் என்ற பெயரே (வடமொழி பிர; Brh என்றால் விரிவடைதல் என்பது பொருள்) இந்தக் கருத்தை நன்றாகத் தெரிவிக்கிறது. இதற்கு வேறாக, இதையன்றி, எதுவும் இல்லை.

(ஆன்மா தனது சங்கற்பத்தினால் அதிஷ்டானமாய் உண்டாகிய தன்னை மறந்து ஆரோபிதமான சகத் ஆகத் தோற்றப் பட்டாலும் தானாகவே விளங்கிக் கொண்டிருக்கும் என்பதாம்)

மோதுகின்ற கடலில் அலை முதலாக உண்டான எல்லாம் புனலாகி விளங்காமல் புழுதியாகுமோ? அது போல ஒப்பற்ற பொருளாகிய பிரம சொரூபம் மாத்திரமே அல்லாமல் இரண்டு என்கின்ற கற்பனைப் பெயர் (ஆகாயம் முதலான கற்பனைப் பெயர்கள்) ஒன்றாகிலும் உண்டோ? இல்லை. எரி(அக்கினி) யிடத்தில் சூடு மாத்திரமே அன்றி இரண்டு உண்டாயிருக்குமோ? அத் தன்மையைப் போல், என்றும் ஒன்றான பிரமத்தில் அதன் இயல்பான உலகு அதனோடு ஒன்றானதே (அபின்னமே).

சரியை (acts of service to the Lord) கிரியை (acts of worship toward him) யோகம் என்கின்ற நெறிகளில் முதிர்ந்து

விடுதலைக்கு உரிய சாதனம் நான்கும் நிறைந்தவர்களுக்கு இந்த ஒருமையை (அபின்னத்தை)ச் சொல்ல வேண்டும்,

(பிரமத்தில் உண்டான பிரபஞ்சம் அப் பிரமப் பிரகாசமாய் விளங்கும் என்பதாம்)

சீடனது இயற்கைக் குணங்களை (பக்குவத் தன்மையை) முதலில் சோதித்துப் பின்னே யாவையுமாம் பிரமம் நீ என்று உபதேசிக்க வேண்டும். வியந்து ஆசையில் சுழல்பவர்களுக்கு இதனை ஓதினால் (இவ்வாறு கற்பித்தால்) அவர்களை மீளாத் தீ நரகில் தள்ளி விட்டதாகும். கலக்கம் பொருந்திய செல்வத்தின் பிரியத்தை விட்டு அறிவு தெளிந்திருக்கின்ற உன்னைப் போல்வார்க்கே அது திகழத் தோன்றும். மயக்கமிலாது அறிவிக்க வல்ல ஆசிரியரைக் கிட்டித் தன் பிறப்பறுக்கும் மகனும் (சீடனும்) வருத்தமும் ஐயமும் இன்றி முன் சொன்ன தகுதிகளோடு இருத்தல் வேண்டும்.

## பிரபஞ்சம் இல்லை; அறிவே உண்டு

விளக்கு உண்டாம் பொழுதே ஒளியும், சூரியன் தோன்றும் பொழுதே பகலும், மலர் தோன்றும் பொழுதே மணமும் உண்டாதல் போல, சித் உண்டாம் பொழுதே ஞாலம் (சகத்) உண்டாயிருக்கும்; அதன் வெறும் தோற்ற மாத்திரத்தே பிரபஞ்சத்தை உண்டாக்குகிறது. உண்மையில் பிரபஞ்சம் இல்லை.

வசிட்ட முனிவர் இவ்வாறு கூறலும் அண்ணல் இராமன் “பாற்கடல் போல் ஆழ்ந்த கருத்தினால் அளக்க அரிதாகவும் குளிர்ச்சியாயும் நிருமலமாயும் இருக்கிற உங்கள் மொழி அற்புதமாக இருக்கிறது” என்றான்.

## ஆன்மாவுக்குச் சங்கற்பம் ஏன்?

“இந்த உரைகளால் இமைப் பொழுது மறைந்தும் இமைப் பொழுது வெளிப்பட்டும் இருக்கும் கார்மேகத்தால் அற்ப வெயிலும் குளிர்ச்சியும் வந்து வந்து போகின்ற கார்காலத்துக்கு ஒப்பானேன். மெய்ம் முனியே, முடிவில்லாததாகவும் பலவாகவும் ஒன்றாகவும் கெடாத

சக்தி உடையதாகவும் அளக்க அரிதாகவும் பிரகாசம் அடைந்து பெருமையுள்ள குணம் உடையதாகியும் இருக்கின்ற ஆன்ம ஞானத்துக்கு இந்தச் செய் தொழில்கள் உண்டானவாறு செப்புக" என்றான் இராமன்.

## அனுபவத்தில் விளங்கும்

மெய்யான பொருள் வாய்ந்த மகா வாக்கியத்தின் உண்மைப் பொருளை முன்னுக்குப் பின் முரண் இன்றிக் கையில் உள்ள நெல்லிக் கனியெனக் கண்கூடாக உனக்குக் காட்ட வல்லமை உடையவன் யான். இங்கு நான் சொன்ன எல்லாமும் உறுதி உரையே. உனது உண்மையான ஞானப் பார்வை வளருமானால், அறிவு விரிவு அடையுமானால், எனது சொல் என்னும் ஞானத்தைக் கையார வலிதென்றும் எளிதென்றும் உள்ளவாறு கலக்கமற நிலைநின்று காண்பாய்.

தன் உருவமானது மாய்வதற்கு முயல்வதாகி இருள் நீக்கிய உத்தமமாகிய அவத்தையினால் குற்றமற்ற ஞானம் வரும். அம்புகளை அம்புகளாலும் நஞ்சை நஞ்சாலும் பகையைப் பகையாலும் அழுக்கை, அழுக்காலும் அகற்றுவது போல நீ அஞ்ஞானத்தை அஞ்ஞானத்தாலே அழிக்க வேண்டும். கருதி விசாரித்துப் பார்த்த அளவில் இவ் அவித்தையின் இயல்பு நீங்கித் தனது அவித்தை யழிவினால் பிரமானந்தத்தைக் கொடுக்கும்.

(அசுத்த மாயையைச் சுத்த மாயையால் கெடுக்க வேண்டும் என்பதாம்)

மிகவும் உண்மையாக, மாயை இல்லை என்று நீ இவ்வாறு சிந்திப்பாய். ஞானியாய் சீவ ஈசுவர ஐக்கியமான ஞானத்தைப் பெற்றால் இந்த அவித்தையின் இயல்பை நீ அறிவாய். குற்றமற்ற சுக ஞானமானது உண்டாகும் அளவும் நடுக்கம் தரும் மாயை இல்லை என்பதை என் வாக்கினால் பழுதிலா அறுதியால் (நிச்சயமாக) பற்றி நிற்பாயாக. எல்லாம் புனிதமுறு பிரமமே என்று அறிவினால் தரிசித்தவர்கள் முத்தி பொருந்துவார்கள்.

"பேதமுறு புந்தியே மாயை ஆகும்" (பேதமுள்ள ஞானமே மாயையாம்) மிகவும் வருந்தியாவது இம் மாயையைக் கெடுக்க வேண்டும். "போதமுறு பேற்றினால் அன்றி மாயைப்

பெருநதியின் கரை தோன்றா'' (ஞானமுள்ள ஆன்ம லாபத்தால் அல்லாமல் மாயை என்னும் அலைகள் அடிக்கிற ஆற்றின் கரை தோற்றாவாம்) நன்றாகத் தோன்றினால் குற்றமற்ற அப் பதமே ''இறவா வீடாம்'' (நசியாத நிருவாணமாம்). இந்த மாயையின் பிறப்பிடம் எந்த இடம் என்று விசாரிக்க வேண்டா. அதனைக் கெடுக்கும் வழி எது என்று, இராமா, விசாரித்தறிவாய். அது கெடுமானால் மாயை உண்டான் குணம் தெரியும்.

(மாயையில் இருப்பவன் அம் மாயையைக் கெடுக்காவிடில் அம் மாயாதீதம் வெளிப்படாது என்பதாம்)

இந்த மாயையானது எதில் உண்டானது என்றும் இது எப்படிப்பட்டது என்றும் இது இறந்த நெறி எது என்றும்-இது அழிந்தால் தான் தோன்றும். ஆகையினால் வலிய துயரின் இருப்பிடமான அஞ்ஞானம் (அவித்தை) என்னும் நோய்க்கு ஞான அவுடதத்தை (மருந்தை) அருந்தச் செய்தால், தீமையுள்ள பிறப்பு என்கின்ற கடலில் நீ இராமா, மூழ்க மாட்டாய். காற்றானது தனக்கு ஆதார வடிவான விண்ணில் பரந்து திரிவது போல் பிரமத்தில் உதித்த சிற்சக்தியால் ஆத்ம சக்தி (Atmic Be-ness) விளங்கும்.

நொய்தாகப் பரந்திருக்கிற ஞானக் கடலில் அற்ப அசைவினால் சீவ ஈசுவர சகம் என்னும் குழாங்கள் பிரகாசிக்கும். சூட்சும ஞான நோக்கால் சந்தேகம் இன்றித் தற்பதம் (பிரம சொரூபம்) ஒன்றையே பிரிவின்றி (அகண்டாகரமாம்) உள்ளது கண்டு அந்த ஞானக் கடலில் அழுந்துவாய்.

மெய்யறிவாம் சிற்சக்தியில் சற்றே அசைவு உண்டாகி, நொடிப் பொழுதில் அது அறிவின் திரிபாகிய இடம் காலம் தொழில்கள் ஆகிய மூன்று சக்திகளைத் துணையாகச் சேர்த்துக் கொள்ளும்.

தனது இயல்பை அறிந்து முடிவில்லாத பிரமபதத்திலிருந்தும் ஞானசக்தியானது எனது உருவம் இவ்வளவினது என்று அறிந்தது போல எண்ணும் (பாவிக்கும்). இவ்வாறு அந்தச் சிற்சக்தி தனது சொரூபத்தைப் பாவனை செய்யில் தொடர்பாக அக் காலத்தில் பெயர்களின் அளவு முதலிய நோக்கானவை வந்து அடையும். மிகுந்த விகற்பங்களைத்

தரும் வடிவாகச் சித் சொரூபமானது கிரகிக்கும் இடத்துக்கும் காலத்துக்கும் தொழிலுக்கும் சேர்ந்த பந்தமாகிறது.

## சீவன்–அகங்காரம்–புத்தி–மனம்–பொறிகள்

இவ் விடத்தில் சொன்ன ஞானத்தின் சொரூபத்தை யாவரும் சீவன் (சேத்திரக்கியன்) என்று சொல்லுவார்கள். அச் சீவனும் வாதனையைச் செய்து கொண்டு அகங்கார பாவனையை அடைந்திருக்கும். அகங்காரம் நிச்சயிக்கும் தொழிலை உடையதாகிக் களங்கமுள்ள புத்தியாகும்; கற்பனை வடிவாய், நினைப்புள்ள மனம் ஆகும்; விகற்பம் மிகுந்த மனமானது மெல்ல வந்து பொறிகள் (இந்திரியங்கள்) ஆகும்.

ஐம்பொறிகளே கைகால் முதலியன உடைய (சதை) உடம்பு என்று சொல்லுவார்கள். வருந்துமாறு, இப்படியல்லவா, உலகோடு கலந்திருக்கிற சீவனானவன் கலந்த சங்கற்பம் என்ற கயிற்றினால் கட்டுண்டு துன்பம் என்னும் வலையினால் வீசப்பட்டு, தரமின்றி இழிவை முறையே அடைகிறது. சக்தி மயமாகிய மனமானது இவ் வண்ணம் அகங்காரத்தைப் பொருந்திக் கோசகாரப் புழுப் போலத் தனது ஆசையினால் பந்தத்தைத் தரிக்கும்.

தானே சங்கற்பித்து உண்டாக்கியிருக்கின்ற (ஐந்து) தன் மாத்திரையினால் தனித்த வலையாகிய உள் (மனம்) தொழில் களானவை. தன்னைக் கட்ட, காட்டிலிருக்கும் ஆண் சிங்கமானது விலங்கு பூண்டது போலக் கவலையினால் மிகவும் மனம் கரைந்து வாடும். நீங்காத மனம் என்றும் புத்தி என்றும் ஞானம் என்றும் செய்கை என்றும் அகங்காரம் என்றும் வாதனை உடல் என்றும் பிரகிருதி என்றும் மாயை என்றும் இழிந்த மலம் என்றும் கருமம் என்றும் பந்தம் என்றும் சித்தம் என்றும் சொல்லப்பட்ட அவித்தை என்றும் இச்சை என்றும் அந்த ஒன்றைப் பெரியோர்கள் சொல்லுவார்கள்.

(ஆன்மா தன் சங்கற்ப சக்தியினால் ஐம்பூத பௌதிகமாய் அதனால் தான் மறைபட்டது போலத் தோற்றும் என்பதாம்)

அவ்வாறு ஒவ்வோரிடத்தில் ஒவ்வொன்றாக ஆசாபாசத் தினால் அமைத்துச் சொன்ன ஒப்பரிய உலகத்தின் விரிவாம் இவற்றை எல்லாம் அகத்தில் தரித்திருக்கிற மனத்துக்கு

இவற்றால் ஒரு பயனும் இல்லை. கிளைகள் உடைய நீண்ட ஆல மரத்தை ஆலம் வித்து ஒளித்து வைத்திருப்பது போல்வதாம் இது. துன்ப நெருப்பு வெதுப்ப, மிகுந்த சினப் பாம்பு எடுத்து விழுங்க, வேட்கை என்கிற கடல் அலைகளால் மனம் தளர்வடையும்.

## மனத்தை இரட்சிக்க வேண்டும்

பெருகிய இத் துயர்களால் தன்வசம் இழந்து, தன் பிரம சொரூபத்தை மறந்து மிகப் பீடையுற்றுக் கருகிய இம் மனத்தைச் சேற்றில் அழுந்திய யானையைக் கரையில் எடுத்து விடுவதைப் போல, மாயையினின்றும் கரையேற்றுவாய். வள்ளலே, இராமா, பயங்கரமான மூப்பு மரணம் என்கிற விடத்தால் வெந்து நன்மை தீமை என்னும் பகையினால் தளருகின்ற மனத்துக்கு அருள் புரியாத மனிதர்கள், மனித வடிவில் உள்ள அரக்கர்களே.

(மனத்தை விடயத்தினின்று திருப்பிப் பிரமத்திற் சேர்க்க வேண்டும் என்பதாம்)

## மனம் வெளிமுகப் படுதலால் பிறவிகள்

இவ் வகையில் சித்து விலாசமாய் (sport of chit) இருக்கிற சீவனானவன் வேற்றுமையான வடிவுகளாக, மேரு மலையினின்று வருகின்ற அருவி நீர்த் துளிகள் போல், பிரமத்தினிடத்திருந்து தாம் கொண்ட பாவனையால் (எண்ணங்களால்) வந்திருப்பன அளவில்லாதனவாம். வருகின்றன அளவில்லாதன; இனி வரவிருப்பனவும் அளவில்லாதனவாம். வந்தவர்களிற் சிலர் ஒன்று இரண்டு மூன்று பிறவிகள் அடைந்தனர். துன்பம் தரும் பிறவிகள் சிலர் நூற்றிலும் அதிகம் அடைந்தனர், அளவிடற்கு அரிய பிறவிகளைச் சிலர் அடைந்து நின்றார்கள்.

சிலர் கின்னரர் ஆக, சிலர் கந்தருவர், சிலர் வித்தியாதரர், சிலர் உரகர் (நாகர்) கூட்டம் ஆக நின்றார்கள். சிலர் வருணனாகவும், ஆனார்கள். சிலர் பிரமாவாக, சிலர் திருமாலாக, சிலர் சிவனாக நின்றார்கள். பிராமணர் சிலர், அரசர் சிலர், வைசியர் சிலர், உபகாரத் தொழிலை உடையர் சிலர் ஆனார்கள். சிலர் விலங்குகளாகவும் பறவைகளாகவும்

சிலர் ஊர்வனவாகவும் சிலர் இலை, காய், கனியாகவும் சிலர். வேர் ஆகவும், சிலர் துரும்பு ஆகவும் ஆனார்கள்.

சீவர் சிலர் மயேந்திர மலையாக, சிலர் சைய மலையாக, சிலர் மகாமேருவாக, சிலர் பொதிய மலையாக, சிலர் மந்தர மலையாகச் சிறந்து நின்றார்கள். சிலர் கடப்ப மரம். சிலர் எலுமிச்சை, பனை, ஆச்சா, பச்சிலை என்று நெருங்கி நின்றார்கள். உவராக, தயிராக, பாலாக, நெய்யாக, கருப்பஞ் சாறாக, தேனாக, நீராக, பெருங்கடலாகச் சிலர் சேர்ந்து நின்றார்கள். சிலர் திசைகளாக, சிலர் நதிகளாக, சிலர் மேலோராக, சிலர் கீழோராக இருந்தனர்.

கையினால் அடிக்கப்பட்ட பந்தைப் போலக் காலனால் அடிக்கப்பட்டு அளவற்ற உடல்களில் புகுந்து அலுத்து விவேகம் அடைந்தும் விரகு (அறிவு) இல்லார் சிலர், பிறப்பில் மறுபடி விழுநதனர்.

மையினால் (அஞ்ஞானத்தினால்) மூன்று உலகாம் சிருட்டியைச் செய்து வருதலும் நிற்றலும் போதலுமாக விரிந்து கடலில் பெரும் அலைகளைப் போலப் பிரமபதத்தில் புரிந்த மாயையானது வீணே பொய்யினால் மிகவும் விரியும்.

(சைதன்னியத்தில் பின்னமாக உண்டாகிய சிற்சக்தியே பின்னமான பிரகிருதி முதல் சீவ ஈசுவர சகங்களாகத் தோற்றினதை அறிவித்ததாம்)

யாவும் தெரிந்து உணர்ந்த வசிட்ட முனிவர் இவ்வாறு சொன்ன அளவில் "சீவன் மனத்தினிடத்தில் சேர்ந்திருந்தும் விரிஞ்சன் (பிரமதேவன்) என்னும் பெயர் பெற்றது எவ்வாறு என்று சொல்வீராக" என்று இராமன் கேட்கவும் வசிட்ட முனி சொல்லுவார்.

வள்ளல் இராமா, அந்த நெறி அறிவாய். இதன் தன்மை யெல்லாம் அறிவிற் பொருந்தக் கேட்டு அறிவை அடைவாய்.

திசைகள் காலங்கள் முதலியவற்றால் கெடாத ஆன்மாவானது தன்னுடைய (சிற்) சக்தியினால் இச்சாவிளை யாட்டாகவும் திசைகள் காலங்கள் முதலிய இவற்றோடு கூடிய மேனி (உடல்) இசைந்திருக்கிற பொழுதே சீவாத்மாவுக்குப் பரியாயம் (ஒரு சொல்லுக்கு அதே பொருளுள்ள பிறிதொரு சொல் : Synonym) எனப்பட்ட

குற்றமுற்ற வாசனையின் வசத்தினால் உலையும் (சஞ்சலம் உள்ள) மனம் வந்து தோன்றும்.

செயலும் செயலின்மையும் ஆகிய இரண்டும் ஒருமித்து எழுந்த மனச் சக்தி செயலை மேவ இயல்பில் முதலில் சூட்சுமமாகி, சத்த - தன்மாத்திரைக்கு (விடயமான பாவனையினால்) உண்டாகிய மேலான ஆகாய பாவனையைப் பாவிக்கின்ற அக் கணத்தில் (அப்பொழுதே) அச் சலன மார்க்கத்தினால் அந்த மனமானது (ஆகாயம் என்னும்) கனத்தைப் பொருந்தும்.

மனமானது பரிச-தன்மாத்திரை என்னும் பாவனையினால் உண்டாகின்ற வாயுவினது சலனத்தைப் பாவனை செய்து காற்றாக நிறையும்.

விரிந்திருக்கின்ற ஆகாயமும் காற்றும் ஆகிய இந்த இரண்டின் வாழ்வு நெருக்கத்திலிருந்து வெந்தீத் தோன்றி இரண்டாவதாகிய சத்தமும் பரிசமும் திடமாகப் பழக்கம் செய்கின்ற குணத்தினால் உருவ - தன்மாத்திரையாகி இம் மூன்று தன்மாத்திரைகளோடும் பொருந்தும்.

ஒரு கணத்தில் இரச-தன்மாத்திரை பாவனை செய்ய, நீரறிவு (அப்பு என்னும் ஞானம்) அம் மனத்தில் உண்டாகும். இந் நான்கு குணங்களையும் அக் குணங்களோடும் கூடுகின்ற மனமானது ஒரு கணத்தில் கருதித் தேடி மணத்தினைப் பாவிக்கவும் பாவிக்கின்ற கந்த-தன் மாத்திரையினால் பாரறிவு(பிருதிவி என்னும் ஞானம்) உண்டாம். இவ்வாறே பிரிவாகிய ஐம்பூதங்களும் பஞ்ச தன்மாத்திரைகளும் தன்னைச் சுற்றிச் சுற்றிப் பருத்த உருவாய்ப் பிரபஞ்சமாய்த் தோற்றும்.

## மனம் - புரியட்டகம்

திகழ்கின்ற நெருப்புப் பொறியைப் போலத் திகழ்கின்ற உடம்பை விண்ணிலே தெரியக் காணும் அகங்காரமாம் தொழில் மேவிப் புத்தியுடனும் ஐந்து தன்மாத்திரைகளோடும் பொருந்தி அந்தப் புகன்றதெல்லாம் கூடிப் புரியட்டக உடம்பாக, ஆன்மாக்கள் இதய கமலங்களில் வண்டாம் மிகுந்த வாசனை யினால் மிகவும் விளங்கும் மேனி தன்னைப் பாவனை செய்யும்.

(மனமானது, ஐந்து தன்மாத்திரை அகங்காரம், புத்தி

என்பவற்றோடும் கூடிப் புரியட்டக சரீரமாக விளங்கும் என்பதாம்)

## மனம் பௌதிக சரீரம்

சித்தமானது பாவனை முற்றிய வில்வப் பழம் போலத் தூல சரீரமாய் மேவுகின்ற கருவில் பாய்ந்த பொன்னிறம் போல மிகவும் பிரகாசித்து, நிமல ஆகாயத்தில் வடிவுண்டா யிருக்கின்ற அந்தப் பிரகாசமானது தனது சக்தியினால் தனிமையாக மேலே தலையும் கீழே காலும் பக்கங்களில் கைகளும் மத்தியில் வயிறுமாகக் கிளர்கின்றது.

## மனம் பிரமன்

முதன்மையான காலசக்தியினால் வெளியாகி, நின்மல வடிவு உடையதாக, புத்தி, சாமர்த்தியம், வலிமை, உயர்ச்சி, மெய்யறிவு, செல்வம் பொருந்தியதாகத் தோற்றம் செய்கிறது. அவ் அவயவங்களை உடையவன் அகில பிதாமகனாக (விசுவத்தை உடையவனாய்) முழுதுணர்ந்தவனான பிரமாவாம். அந்தப் பிரமாவே, அழகும் உத்தம இயல்பும் திகழ்கின்ற தன் வடிவை நன்றாகப் பார்த்து

(மனமானது விராட் புருட உருவமாகத் தடித்துத் தனக்கு ஆதாரமாயிருக்கின்ற சிதாகாயத்தைப் பார்த்தது என்பதாம்).

## பிரம சந்நிதியில் உண்டான விசேடம்

கெடாத ஆறு குணங்களை உடைய பகவான் ஆகியும், மூன்று காலங்களையும் வெளியாகப் பார்க்கின்றவனாகியும் இருக்கின்ற பிரமதேவன், ஒன்றாகியும் சின்மயமே உருவமாகியும் கரைகாணா உயர் வானத்தின் முன்னுண்டானது என்ன என்று சிந்தித்தான். களங்கமற்ற பூரண ஞான திருஷ்டி யுடையவனாய் நன்மையாக அப்போது உதயமான பிரமன் பல கோடி சிருஷ்டிகளை முன்பு (தான்) செய்திருந்ததைப் பார்த்தான்

சாதி குலம் தருமங்க்ளும் ஆகிய யாவையும் அறிந்து அவற்றை விளையாட்டினால் உண்டாக்கினான்;. சொல்லுவதற்கு அரிய விளையாட்டின்ால், அழகிய கந்தருவ நகரத்தையும் போலச் சங்கற்பத்தினால் உண்டாக்கப்பட்ட ஆன்மாக்கள் அனைத்தும் அறம், பொருள், இன்பம் அடைய

மேலான அளவிலாச் சாத்திரங் களை அவ் ஆன்மாக்களுக்காகப் பிரமன் உண்டாக்கினான்.

(சங்கற்ப வடிவமாயுள்ள சீவ கோடிகள் தங்கள் சங்கற்பங்களை நீக்கி ஆன்ம சொரூபம் அடையும் பொருட்டு வேத ஆகமங்களை விதித்தது என்பதாம்.

**சங்கற்பமே சனனம்**

அயன் உருவமான மனத்தினால் இந்த ஐம்பூத சிருட்டியினின்றும் பௌதிக (physical) சிருட்டி உண்டாயிருத்தல், கட்டவிழ்ந்து மலர்கின்ற மலர்கள் எல்லாம் வசந்த காலத்தில் மலர்வது போல்வதாம். வேறுபாடாகிய தேவர் மானிடர் முதலிய யாவரும் தத்தம் சங்கற்பத்தினால் பிறவி அடைந்தார்கள். இதனை உணர்ந்து அச் சங்கற்பம் நசித்தால் (அழிந்தால்) நெய் இல்லாத விளக்குப் போல் பிறவி நீங்கப் பெறுவார்கள்.

(சங்கற்ப நாசமே சனன, மரண நாசம் என்பதாம்)

வானமும், மற்ற பூதங்களும் சங்கற்பத்தால் வீணே உண்டாவன. ஆகவே, இராமா, இந்த உலகை, நனவினில் காணும் கனவு போல் உணர்வாய். இந்த உலகு எக் காலத்தும் எவ்விடத்தும் தோன்றியதும் இல்லை; மரித்தலும் இல்லை. ஒன்றாம் ஞான பரமார்த்தத்தால் இவை யாவும் பொய்யாக நண்ணும்.

வெய்ய காதற் (ஆசை) பெரும்பாம்பு நெளிகின்ற புற்றாகிய சம்சாரச் சுமையானது வெறும் பொய் என்று சம்சார பாசத்தை முழுதும் நீக்கி அளவற்றதான பிரமபதத்தில், இராமா, நீ நிலை பெற்று வாழக் கடவாய். அழகாகத் தோன்றுகின்ற கந்தருவ நகரமானது இருந்தென்ன, நாசம் அடைந்தென்ன, அதனால் உனக்கு என்ன நன்மையோ தீமையோ? வேறுபாடான பாச மாயையான மனைவி மக்கள் வாழ்ந்ததினால் என்ன? கெட்டதினால் என்ன?

மனைவியிடத்தும் பொருளினிடத்தும் பாசம் மிகுமாகில் அது விலங்கு ஆகும். அவ் ஆசையைக் கட்டிக் கொண்டால் அதைக் கெடுத்து நீக்குகின்ற விரகு (உபாயம்) உடையவர்கள் யார்? அஞ்ஞானிகள் இச்சை மிகுந்து மிகுதியான அந்தப்

போகத்தில் சுழன்று கலக்குகின்ற கொடிய துயரை நினைத்த போது தீரமுள்ள ஞானிகளுக்கு மனமானது நிராசை யுள்ளதாகத் தெளிவு அடையும்.

(பொய் ஆகிய சம்சாரத்தைச் சத் ஆகப் பார்த்து வருந்தும் மூடர்களைப் பார்த்தாவது தான் தெளிய வேண்டும் என்பதாம்)

இவ்வாறான தன்மையினால் சம்சார பாரமாகிய தொழி லில் நெருங்கும் காலத்தில் போன பொருளுக்கு வருந்தாமல் வந்தடைந்த பொருளை மட்டும் அனுபவித்துச் சீவன் முத்தனாக வாழக் கடவாய். இப்போது இல்லாமையாக, இனி வருகின்ற பொருள்களை நினையார்கள். வந்த பொருளைத் தீது என்று நினையார்கள், ஞானபரர். அங்ஙனம் ஆனோர்க்குத், தாமரைக் கண்ணனே, இதுவே இயல்பான குணம்.

காணப்பட்ட யாவும் பொய்யே என்று உள்ளத்தில் அனைத்து விடயங்களிலும் வெம்மையான ஆசையை நீக்கின பண்டிதரான முழுதுணர்ந்த பெரியோரைப் பாச மாயை (Bond of maya) யானது ஈர்க்காது. (வாதிக்க மாட்டாது). உண்டு இல்லை (சத்து அசத்து) என்ற சொல்லப்பட்ட இரண்டின் இடையில் தூய பரம பதத்தில் அறிவைத் திடமாக அழுத்தி உடம்புக்கு உள்ளும் புறம்புமான உலகை, நீ இராமா, பற்றலும், விடலும் வேண்டா.

எந்தத் தொழிலிலும் விருப்பு, விருப்பின்மை (இச்சை, அநிச்சை) இல்லாமல் இருந்து ஆன்ம ஞானத்தை அடைந்தவர்களுக்கு அத் தொழில்களில் அறிவானது தாமரை இலைத் தண்ணீர் போலப் பற்ற மாட்டாது. உடல் பொறிபுலன்களின் இன்பம் என்று சொல்லப் படுபவற்றினை உன் மனம் விட்டுவிடுமானால் நீ ஆன்ம ஞானம் பெறுவாய். அப்போதே சம்சாரக் கடல் கடந்து பிறவியை நீக்கினாய்.

மேலான பரம பதத்தை (Brahmic state) விரும்பினால் அனைத்து வாசனைகளிலும் இருந்த மனத்தை மெய்யாகிய ஆன்ம ஞானத்தினால் மலரின் வாசனை நீங்குவது போலப் போக்குவாய். ஈனமுள்ள வாசனையாம் அலைகளை உடைய நீர் நிறைந்த பிறவிக் கடலில் அமிழுபவர்க்கெல்லாம் அச்சம்

அற, நல்லறிவு மரக்கலமாகக் கரையேற்றும், அஃது அன்றி வேறுண்டாமோ?

## ஆன்ம ஞானமும் உலகக் கடமையும்

ஆன்ம ஞானம் கண்டவர்கள், உலகக் கடமைகள் எல்லாவற்றையும் அனுசரிப்பார்கள். ஆனால் உலகக் குணங்கள் பொருந்தார்கள். சுவர்க்கத்து நந்தவனத்தையும் விரும்பார்கள். சூனியமான இடத்திலும் துன்பம் அடையார்கள். வெய்யவன் போன்று, உரிய நியதிகளை விலக்காதிருப்பார்கள். மேன்மைச் சான்றோர் எல்லாமும் கடைப்பிடிப்பார்கள். இராகவனே, இவ்வாறு நடப்பாய் என்று வசிட்டர் சொன்னார்.

## அனுபவத்தில் மகிழ்தல்

பாரத்துவாசரே, கேள் என்று இவ்வாறு மேலான வசிட்ட முனி பிரமபதத்தைச் சொல்லக் கேட்டு உறுதியாகப் பூரணமானவனைப் போல் இராமன் களங்கமற்றவனாய் மனம் நீங்கித் தத்துவ ஞானம் என்னும் நல்ல அமிர்தத்தினால் நிறைந்து குளிர்ச்சியால் உரத்து வளரும் பூரண சந்திரனைப் போல நிறைவுற்றான்.

வசிட்ட முனி மீண்டும் சொல்லத் தொடங்கினார்

உலகம் எல்லாவற்றையும் ஒரு காலத்தில் சிவன் படைப்பார். ஒரு காலம் அயன், ஒரு காலம் அரி, ஒரு காலம் முனிவர் படைப்பார்கள். மேலான பிரம தேவன் ஒரு காலத்தில் தாமரையில் பிறப்பான். ஒரு காலத்தில் நீரில், ஒரு காலம் விண்ணில் பிறப்பான்.

## சிருட்டி - நியமம் இல்லை

ஒரு சிருட்டியில் மரங்களே நிறைந்திருக்கும். ஒரு சிருட்டியில் மானிடரே நிறைந்திருப்பர். ஒரு சிருட்டியில் பன்மலைகள், ஒரு சிருட்டியில் மண் நிறைந்திருக்கும். ஒரு படைப்பில் மாமிசமாய்ப் பார்க்கப்படும். ஒரு படைப்பில் பொன்மயமாய் இருக்கும். பூமியானது இவ்வாறு பல விதமாக இருக்கும்.

ஆகாயம் முதலாகும், மண் முதலாகும், நீர் முதலாகும் இப்படியே சிருட்டிகள் தோறும் ஒரொன்று முதன்மையாகும். ஒரு பிரம சிருட்டியை உனக்கு நான் சுருக்கமாகச் சொன்னேன். இவ்வாற்றால் எது முதலில் உதிக்கும் என்பதான நியமம் வேறுபடும்; பல விதமாய்த் தோற்றும்.

கிருத யுகம் முதலான நான்கு யுகங்களும் மீண்டும், மீண்டும் தோன்றி வரும். சொல்லப்பட்ட ஞாலத்து எந்த ஒரு பொருளும் வளைந்து வளைந்து பல தடவை பிறந்து சுழலாமல் இல்லை. இருள் மிகுந்த மகா மாயையினது வண்ணமிகு வர்ணனைக்கு முன்னிலையான அரிய மறைகள் தேர்ந்த தாசூர முனிவன் கதையை நான் இவ் விடத்திற் சொல்ல இராமா நீ கேட்பாயாக என்று சொல்லத் தொடங்கினார்.

## கதை

இந்தப் பூமிக்குள் அழகு நிறைந்த பொழிலில் குளிர்ந்த தென்றல் காற்று மணம் வீசுகின்ற மகத தேசத்தில் கருப்பூர வாசனை பொருந்திய வாழைகளும், கடம்ப மரங்களும் கோங்கு மரங்களும் நெருங்கியிருக்கின்ற சிந்தைக்கு இனிய ஒரு சிறந்த மலையினிடத்தில்

மோட்ச உலகு அடைதற்கான தவம் செய்து அயன் போல் உயர்ந்த சரலோமா என்ற பெயரை உடைய முனிவன் தேவலோகத்திலுள்ள பிரகஸ்பதி (குரு; வியாழன்) பகவானுடைய குழந்தையாகிய கசனை ஒப்பான். மானிட உலகில் மேலானவன். குற்றமற்ற தவத்தினால் பெரியவன்.

ஒரு மகனுடன் சரலோமா என்ற அம் முனிவன் அந்த மலையின் கண் உள்ள கானகத்தில பல யுகம் சென்ற பின்பு, செய்த கூட்டை விட்டுப் பறவை போவது போல, வினை யியற்றும் உடலை நீங்கிப் போய் விண்ணோர் வடிவைக் கொண்டான்.

## தந்தை இறந்த பின்

தனியாக அந்த வனத்தில் தாசூரன் என்னம் பெயரை உடைய முனிவன், இனிய தந்தை இறவு (சாவு) க்கு அழுது, நீராற் புனித பிராமணர் செய்யும் பூசை முழுவதும் செய்யாமல் இரங்கிய மனம் உடையவனாய்,

துணையைப் பிரிந்து அன்றிற் பறவை கதறுவது போலக் கதறிக் கொண்டு தந்தை, தாய் பிரிவினால் மிகவும் வெம்பித் தளர்ந்து மைந்தனாகிய தாசூரனை, அருளால் வனதேவதை பார்த்து முந்துறாமல் (புலனாகாமல்) நின்று "மகா முனிவன் மைந்தனே, முனியானவனே, சிந்தை தெளிந்தவனே, தெளிவில்லா மூடர்களைப் போலத் துன்புற்றுத் தளர்ச்சி அடையாதே.

## வனதேவதை ஆறுதல்

அநித்தியமாகிய சம்சாரத்தின் பொய்யை நீ உணராதது என்ன காரணம்? பிறந்த பொழுதே மரணம் எவ்வளவும் தப்ப மாட்டாது. கண்ணீர் சொரிய அழுகின்றவனே. பகலோன் உதயம் செய்தால் அதன் பின் அத்தமனம் (மறைவு) அடைய மாட்டான் என்று சொல்வாரும் உண்டோ?

வீணாகத் துயரம் அடையாதே" என்று மறைந்திருந்து வனதேவதை உரைக்கக் கேட்டறிந்து, சோரும் துன்பத்தைக் கெடுத்து நிலையாக, நீண்ட வேத வசனத்தின் படியே நீர்ப் பூருவமாகச் செய்ய வேண்டிய கிரியைகளைச் செய்து மீளா நெறி (மோட்சம்) சேர்க்கின்ற தவத்தில் மிகவும் விருப்பம் அடைந்தான் தாசூர முனி.

## புனித இடம்

தனக்கான வேத சம்பந்தமான கருமத்தினால் தவத்தைச் செய்யும் பொருட்டுத் தாசூரன் மிகுந்த சங்கற்பத்தால் தூய ஆசாரத்தில் மிகுந்தான். மிக்க ஞானம் இல்லாதவன், பரிசுத்த பூமியில் தான் போன இடங்கள் எல்லாம் பார்த்து இது புனிதம் அன்று இது புனிதம் அன்று என்று மொத்தத்தில் பூமியே பரிசுத்தம் இல்லாதது என்றும், மரத்தின் நுனி தான் சுத்தம் என்றும் அழகிய பறவை போல அவ்விடத்திற் பொருந்துதற்கான தவத்தைச் செய்யத் தொடங்குவோம் என்றும் சிந்தித்து வெய்ய நெருப்பை வளர்த்து விண்ணோர் குழுவை நினைந்து உடலை அரிந்தெடுத்து யாகம் செய்தான்.

அவ்வளவில் தேவர்களுக்கு, எனது இடமாகக் கலை வேதியனான அவன் உடம்பில் தசைகளால் மிடறும் புயமும்

வேவது என்ன காரணத்தால் என்ற அக்கினி தேவன் நினைத்து அவன் முன் தோன்றினான்.

நீ எண்ணிய காரியம் என்ன என்று கேட்கக், கைகள் கூப்பித் துதித்துப் பரிசுத்தமான இடத்தை இப் பூமியில் கண்டிலன். ஆதலால் மரத்தின் நுனியில் இருக்கின்ற தளிரின் மேல் இடம் கொடுத்தருள்வாய் என்று தாசூர முனிவன் வரம் கேட்க, வரத்தை முழுதும் கொடுத்து அக்கினி தேவன் கடலில் அலை போல் மறைந்தனன்.

## கடம்பு

கானத்திடை ஒரு கடம்ப மரமானது மேக மண்டலத்தைத் தாண்டி ஆகாயத்தை அளாவியிருக்கின்றது, அதன் மேல் வளருகின்ற தளிர் என்கிற ஆசனத்தில் ஐயமின்றித் தாசூர முனிவன் இருந்து நிட்காம தவமே செய்ய மிகவும் விரும்புகின்ற மனம் உடையவன் ஆக விளங்கினான்.

ஒரு கணம் திசைகள் அனைத்தையும் நோக்கிப் பத்மாசனத்தில் இருந்து மனத்தைக் கட்டுப் படுத்தினான். ஆனால் நேரடியாகப் பிரம ஞானத்தை அடைய முடியாமல் அவன் கருமங்களை மட்டும் செய்தான். அதன் பின், பயனை எதிர்பாராத மனத்தினால் பன்னீராண்டுகள் யாகங்கள் செய்து தேவர்களுக்கு அவி உணவு (அவிர்ப்பாகம்) அளித்தான்.

கோமேத அசுவமேத நரமேத யாகங்கள் எல்லாம் வேத விதிப்படி குற்றமறச் செய்தான். வெகு காலம் தவறற நடந்ததால் உறுதி பெற்ற அவன் மனம் மிகவும் தெளிவடைந்தது பூரணமானது. கண் போன்ற ஞானமானது நல்ல நெஞ்சில் தானே வந்து அடைந்து நிறைவு பெற்றது.

(நிட்காமமாகச் செய்த கிரியாபலத்தினால் பூரண ஞானம் உதித்தது என்பதாம்)

பிறவியும் மறைவும் நீங்கப்பெற்று, வாசனைகளால் பெயரும் அற நீங்கப் பெற்ற மகனாகிய தாசூர முனி, தேன் கூடுள்ள கிளைகளின் துளிரின் மேல் இருந்த காலத்தில் ஒரு நாள் அவனது தூய விழிகளுக்கு எதிரே விரிமலரின் உடை புனைந்த உயர்வனத் தேவதை தோன்ற அறிவனான

முனிவனும் பார்த்து, "நீ யார்?" என்று கேட்க அழகிய அணங்கு சொல்லுவாள்.

"மகான்களிடத்தில் பெறுதற்கு அரிய அன்பை அடைந்தவர்கள் விரும்பிய எல்லாம் அரியன எனினும் இமைப்பினில் இலகுவாய்க் கிடைக்கும் என்று சந்தேகம் இன்றி உணர்ந்தேன். ஞான அனுக்கிரகம் செய்கின்ற முனியே, நீ உறைகின்ற வனத்தில் இருக்கின்ற வனதேவதை நான். இவ்விடத்தில் நான் விருப்போடு வசிக்கின்றவள்.

மேட (சித்திரை) மாதத்தில் பிறை பதின்மூன்று கலையைப் பொருந்திய திரையோ தசியில் பார்த்தற்கு அரிய மன்மதனுடைய உயர்திரு நாளில் (மகோத்சவ காலத்தில்) நந்த வனத்தில் வந்து கூடின வனதேவதைகளின் கூட்டத்தை நெருங்கினேன். தோழிகள் அனைவரும் தேடுதற்கரிய மைந்தருடன் மகிழ்ந்திருந்தார்கள். குழந்தை இல்லாதவளாகிய நான் மனம் தளர்ந்தேன்.

விரும்பியவர்க்கு எண்ணியதைக் கொடுக்கும் கற்பகம் அனைய நீ இருக்க, இரட்சகனே, இரட்சகர் இல்லாதவர்களைப் போல நான் புத்திரனுக்கு விசனப்படுவது நன்மையோ? புதல்வனை நீ தரல் வேண்டும். அப்படியல்லாமல் உன்னருள் என்னிடத்தில் இல்லாமற் போனால் குற்றமற்ற மதலை இல்லை என்னும் துக்கத்தை நெருப்பில் மூழ்கி நீக்குவேன்".

என்று வன தேவதை சொல்லவும், தாகூர முனி சிரித்து ஒரு பூவைக் கொடுத்து 'ஒரு மதியில் (மாதத்தில்) எளிதாக, அன்னம் போல்பவளே, மகவைப் பெறுவாய். நீ முன்பு அரிய நெருப்பில் பிரவேசிப்பேன் என்று சொல்லிய துன்பத்தினால் வலிமையாகப் புத்திரனை வேண்டியபடியால் இனிமையாக நீ பெற்றிடும் புத்திரனும் பின்வரப்பட்ட வருத்தமான நெறியினால் ஞானத்தை அடைவான்' என்று மகானாகிய தாகூர முனி பேசினன்.

கேட்ட அந்த வன தேவதையானவள் மகவு கிடைத்தது என்ற கிளர்மதி முகத்தில் ஒளி விளங்க, மீட்டும் அம் முனியை நோக்கிப் பார்த்து நின் ஏவல் விரும்பி இவ்விடத்தில் வசிப்பேன் என்று சொல்ல. முனிவன், இசைவின்றி அனுப்ப,

அணங்கு தனது இடம் சென்றாள். உயர்வுள்ள புத்திரனைப் பெற்றாள். கலை செறிந்த மதி என அவனை வளர்த்தாள்.

**சீடன்**

பன்னிரண்டு வருடம் கழிந்ததன் பின்பு மகவுடன் முனி பாதம் அடைந்து தலை தாழ்ந்து வணங்கி, "உயர்வை உணர்ந்து அனுக்கிரகம் செயகின்ற சுவாமியே, நீர் அனுக்கிரகம் செய்ய நான் பெற்ற இப் பெருங்குணக் குமரன் அரிய மறைநூல்கள் அனைத்தையும் நான் அறிவிக்கத் தனது அறிவினால் தெரிந்து கொண்டான்.

கலை எல்லாம் நிறைவாய் அறிந்தும் பிறவாமைக்கான ஆன்ம ஞானம் கண்டிலன். கடல் போன்ற பிறப்புத் துன்பத்தினால் சலனம் அடைகின்றான். தன்னை அறியும் ஞானத்தை அனுக்கிரகம் செய்வாய்." என்று வன தேவதை சொல்ல, "இவனை நமக்கு நிலை மாணவன் ஆக்கி நீ நீங்குவாய்" என்ற முனி சொல்ல அந்த வன தேவதையானவள் புத்திரனை விட்டு நீங்கினாள். பெருமை பொருந்திய முனிவருடைய தாளிணை விடாமல் சற்குணச் சீடனும் இருந்தான்.

வருந்தி மெய்ஞ்ஞானத்தைப் பெறத் தகு சீடனைத் தாசூர முனிவன் அருளால் மெல்லத் திருத்தமான கதைகளும் பிரமாணங்களும் (அளவைகள்) இதிகாசத்தில் சொல்லிய காரணங்களும் பெருந்துணையான வேதாந்தம் தெளிந்து சொல்லிய பழம் பொருள்களும் (மகா வாக்கிய அர்த்தங்களும்) ஆகிய இவற்றைப் பலவாக விரித்துப் பூரண போதமே சொன்னான்.

வானதியாகிய கங்கையில் நீராட வான் வழியே ஒரு நாள் மறைவாகச் சென்றேன். ஏழ் முனிவர் (சப்த ரிஷி) இருப்பிடத் தினின்று நெருங்கிய போது தாசூரன் வாழ்கின்ற கடம்ப மரத்தின் இடம் அணுகி இருட்பொழுது இருந்து, முனிவன் சீடனுக்கு உரைத்த ஞான நற்பொருள் கேட்டேன். அதனை உனக்கு உள்ளவாறு சொல்வேன்.

(தாசூர முனி சீடனுக்குப் போதித்த நெறியை இராமருக்குப் போதிக்கத் தொடங்கினார் என்பதாம்).

## சீடனுக்குச் சொன்னவை

பிறப்பிலாப் பிரம சொரூபம் இது என்று அறுதி (நிச்சயம்) உண்டாவதாகிய ஒரு கதையை நீ கேளாய். வீரமும், புகழும் சிறந்தவனான ஓர் அரசன். அவன் பெயர் தெளிஞன் என்பதாம். உலகங் காப்போர் பலர் அவனது ஏவலை முடி மேல் பிரகாசமான மணி போல் தாங்குவர். எவராலும் நிறுத்துதற்கு அரிய வியாபகன்.

## தெளிஞன் கதை

உண்மையை விரும்புபவன். பலவாக மிகவும் அதிசயிக்கும் செயல் உடையவன். இன்ப துன்பம் கொடுக்கும் முயற்சியான தொழில்களின் தொகுதியை மிகுதியும் செய்பவன். வாட்படையோ காற்றோ நெருப்போ அந்தத் தெளிஞனை நெருங்கி எதுவும் செய்ய முடியாது. பரந்து கிடக்கும் ஆகாயத்தை இரு கரங்களால் ஒருவன் எப்படிப் பிடித்து அடக்க முடியும்?

அளவின்றிப் பரவி விளையாட்டாகச் செய்கின்ற அளவற்ற முயற்சிகள் அனைத்தும் நிலை பெற்ற மும்மூர்த்திகளாலும் சிறிதும் பிற் செல்ல முடியாதவை. மகத்தாயிருக்கின்ற இவனுக்குத் தேகங்களாக அமைந்தவர்கள், யாவையும் சுமக்கத் தக்கவர்கள் மூன்று பேர்.. அவர்கள் வலிமையுள்ள உலகத்தை அடர்ந்து நிற்பவர்கள். கடந்து செல்லக் கூடியவர்கள். உத்தமன், மத்திமன், அதமன் என்ற பெயர் உடையவர்கள் அவர்கள்.

ஞான ஆகாயத்தில் தோன்றி அவ் விடத்தில் வசிப்பவன்; மூன்று விதமான உடம்பை உடைய தலைவன் அவன். நீண்ட அந்த ஞான ஆகாயத்தில் அவனுக்கு உண்டாக்கிய பட்டணத்துக்கு நீளமான தெருக்கள் பதினான்கு. மூன்று வகை அழகான சிங்கார வனங்கள்; ஊர் சூழ்ந்த சோலைகள், கொடி போன்ற முத்து மாலைகள், செய்குன்றுகள், ஏழு வாவிகள், குளிர்ச்சியும் சூடும் உள்ள இரண்டு விளக்குகள் உண்டு.

இவை எல்லாம் நிறைந்திருக்கின்ற இந் நகரத்தில் இவனால் உண்டாக்கப்பட்ட கூடாரங்கள் சுவர்க்கம் நடுவு

பாதாளம் என்ற இடம் எல்லாம் சுழலும் படி உண்டாக்கப்பட்டன. அவற்றுக்கு வலிமை பொருந்திய கண்கள் மூன்று. அவை எலும்பு மரங்களால் செறிந்தன. உதிரத்தாலும் மெலிதாகப் படர்ந்திருக்கும் தோலாலும் முடைந்து இனிதான விரிமயிர்க் கற்றையினால் பரப்பப்பட்டன.

ஒரு போதும் இல்லாத மாயையினால் அந்தத் தெளிஞன் (ஆகிய அரசன்) உண்டாக்கிய பாவறைகள் (halls) ஆனவற்றுக்குத் தென்றற் காற்று உலவும் பலகணிவாயில் ஒன்பது ஆம். பொருந்திய ஐம்பொறிகள் என்னும் சுந்தர விளக்கால் அவை பிரகாசிக்கின்றன. இரண்டு தோள் என்னும் தோற்றம் உடையன. முடிவில்லாத பிரம பாவனைக்கு அஞ்சும் அகங்காரம் எனப்படும் பேய்களானவை காத்து இரட்சிப்பன.

அசைகின்ற (சஞ்சரிக்கின்ற) இனிதாகிய பாவறைக் கூட்டத்தில் அகங்காரப் பேய்களோடு விளையாடிச் சந்தோஷம் தரும் விளையாட்டுகளைப் பல விதமாக நடத்திக் கூண்டில் வாசம் செய்யும் பறவையைப் போல இருந்து வேகத்தினால் அந்தப் பாவறையை விட்டு நீங்கி அயல் மேல் வருகின்ற பாவறையை (hall) உண்டாக்கி ஆசையுடன் பூத ஆவேசத்தை அடைந்தவர்களைப் போல அவ் அரசனானவன் நடனம் செய்வான்.

இப் பாவறையை விட்டு அதை அடைவோம் என்ற நினைக்க அவ் வண்ணம் அடைவான்,.. அதிலிருந்து இறப்போம் என்று எண்ணுகிற எண்ணத்தினால் அப்படியே மரணத்தை அடைவான். மனமானது வருத்தத்தில் சுழலப் பிறந்து இறந்து சுழல்வான். ஞான ஆகாசம் தான் இவற்றினுக்கு இடமாம். மரணத்தை அடைந்து தவழ்கின்ற அலைநீரில் வருதல் போலத் திரும்பவும் தோன்றுவான்.

மூன்று உடல் உடைய அவ் அரசன் சிறந்த கந்தருவ ஊர் போன்று விதித்த தன் நகரத்தில் தான் இனிமையாக இருந்து நீங்காமல் மேன்மேல் தழைக்கின்ற தொழில் வயப்பட்டவனாய் ஒரு தரம் குறைவாவான்; ஒரு தரம் நன்மையாவான், ஒரு தரம் என் செய்வோம் என்பான். ஒரு தரம் அபிமானியாவான். அனேக தரம் மயங்குவன், தெளிவான். துன்பப் படுவான் மகிழ்ச்சியுறுவான்.

யான் தளர்ந்தனன் என்பான். யான் தடித்தனன் என்பான் யான் தாழ்ந்தனன் என்பான். உயர்ந்தனன் என்பான். வளர்ந்தனன் என்பான். குறைந்தனன் என்பான் பெருங்காற்று மோதும் கடலைப் போல மனத்தினால் அவ் அரசன் சுழல்கின்றதைச் சொல்வது எவ்வாறு? -

என்று முனி சொன்ன மாத்திரத்தில் புத்திரன் (சீடன்) ஆனவன், சொல்லிய தாதையை 'நீர் தெளிஞன் என்று கூறிய கீர்த்தியோன் யார்?' என்று கேட்டான்

## மாயா விலாசம்

உண்மையில் அந்த மன்னனை உரைத்தால் பிறப்பு இறப்பு என்ற பொய்யின் உண்மையை நீ நன்கு உணர்ந்து கொள்வாய் என்ற தாசூர முனிவன், உத்தம சீடனுக்குச் சொல்லுவான். எண் மயம் (சங்கற்பமயம்) ஆகிப் பொய்யெனத் தோன்றி இடமுற விரிந்த முயற்சியைக் கட்டுரையாக (கதையாக) முன் சொன்னோம்.

பரம ஆகாயத்தில் உதயமாகிய சங்கற்பமே முன் சொன்ன தெளிஞனாம் மன்னவன், பற்பல காலமும் தோன்றியும் தானே மறையும் விரிவாகிய சகமானது அதன் சொரூபமாம். அற்பமாகிய சங்கற்பமானது உண்டானால் உலகு உண்டு.

அது இல்லையானால் உலகு இல்லையாம். முதன்மையாகிய மும்மூர்த்திகள் முதலான தேவர்களும் அச் சங்சற்பங்களுக்கு நெருங்கிய உடல் உறுப்புகளாவர்.

பொருந்திய ஆன்மாவின் பிரதிபா மாத்திரத்தினால், ஒளி அளவால், பிரமா என்னும் பாவனையைப் பொருந்தினதாகிய சங்கற்பமானது ஞான ஆகாயத்தில் உண்டாக்கினது மூன்று உலகம் என்னும் பட்டணமாம். உலக பாலர் என்பது பதினான்கு மனுக்கள் பெயராம். மேலாகிய பட்டணத்தில் உள்ள பதினான்கு வீதிகள் என்றது பதினான்கு உலகம். நெருங்கிய பூந்தோட்டங்களும் சொல்லப்பட்ட ஊர் சூழ்ந்த சோலைகளும் நந்தவனங்களும் தூய பூமியாம்.

மேரு, மந்தரம் முதலிய மலைகள், அந் நகரில் பொருந்திய விளையாட்டு மலைக் கூட்டங்கள். பெருமை பொருந்தியோய்,

சூரிய சந்திரர்கள் வாயுவினால் அசையாத் தீபங்கள் என்பதாம். நீர் நிறைந்த நதிக் கூட்டங்களே முத்துமாலை எனப்பட்டன. பெரிய வடவாமுகாக்கினியைத் தாமரையாய்ப் பூத்திருக்கின்ற பெரிய கடல் ஏழுமே, தடாகங்கள் ஏழு என்று சொல்லப்பட்டன

இத்தகைய மாநகரம் உலகத்திடை முன் சொல்லிய சங்கற்ப அரசனால் வினைகளினால் வந்த உடல்கள் பாவறைகள் (spacious halls) என்பதாம். தேவர்களை மேலோக பதம் என்றும் நரகர்களையே பாதாள உலகில் என்றும் மனிதர்களையே நடுப்பதத்தில் (மத்திய லோகத்தில்) என்றும் அச்சம் தரும் உயிர் என்னும் சூத்திர வேகத்தினால் மாமிசச் சுவரான கிரகங்கள் சுழன்றிருப்பன என்றும் கூறப்பட்டன.

பல விதமாக உலாவும் உடல்களாகிய பாவறைகள் தோறும் அவ் வேந்தன் நல்வழியுள்ள ஆன்ம ஞானத்தைப் பார்க்க நடுங்குகின்ற நன்மையில்லாத அகங்காரம் என்கிற வன்மையான இந்தப் பசாசங்கள் பொய்களாயிருந்தும் வந்து மெய் போலத் தோன்றும். அவற்றோடு விளையாடும் கணத்தில் உள்ளதாகியும் இல்லாதாகியும் இருக்கும்.

உடம்பு என்று உரைத்த பாவறைகள் கடலின் திரைகளைப் போலத் தோன்றி அழியும். அந்தக் கிரகங்களில் இடைவிடாமல் வருகின்ற இந்தச் சங்கற்ப அரசனானனவன் சங்கற்பித்த எல்லாம், பொருந்திய ஒரு கணத்தில் வீணாக நாசம் அடையும். வீணாகத் திரிகின்ற இந்தச் சங்கற்ப அரசன், உண்டாகிய தன் சங்கற்பத்தினால் இருக்கும் அந்த மட்டும் அருந்துயர் உழக்கும்.

சற்றும் ஒரு சுகமில்லாமல் இரங்குபவன் தான் உண்டென்பதாகிய ஒரு பாவனையினால் மிகுந்த உலகத்தை உண்டாக்கும். தான் இல்லை என்று கருதினால் அக் கணத்தில் (சகம்) இறந்து குறைவில்லாத சூரியன் முன்பு இருள் என நீங்கும். குறித்த சிற்றின்பத்தை அடைந்து அழுந்திய வாசம் செய்கின்ற இச் சங்கற்ப புருடனுக்கு உடல்கள் உத்தமம் மத்திமம் அதமம் என்று மூன்றுள்ளன.

மூன்று குணங்களே மூன்று உடல்களாகி மூவுலகங்களுக்குக் காரணமாம். அந்தக் குணங்களில் தாமத

குணத்தை உடைய சங்கற்பம் என்பது பிரகிருதியின் செயலினால் துன்பத்துடன் வருத்தமுற்றுப் பாதாளக் கிருமிகள் ஆம். தூய சத்துவ குணத்தை உடைய சங்கற்பம் என்பது மிகுந்த நல்ல தருமங்களையும் மிகுந்த ஞானங்களையும் உடைய மோட்சத்தை உடையதாய் வேந்தர் வேந்து (சக்கரவர்த்தி) போல விளங்கும்.

இராசத குணத்தை உடைய சங்கற்பம் இவ் உலகில் இயல்பாகிய குடும்பத்தை உடையதாய் விளங்கும். சேர்ந்திருக்கின்ற இம் மூன்றையும் விட்டு மெய்ம்மையாய் சங்கற்பம் இல்லையாயின் வருத்தம் இல்லாதவனாக அச் சங்கற்பமானது நின்மலமாகிய பரமபதத்தை அடையும். துராசையாம் பார்வை அனைத்தையும் நீக்கிக் குற்றமுள்ள மனத்தைச் சுத்தமான மனத்தினால் நிலைப்படுத்தி,

அகத்திலும், புறத்திலும் எழுந்த சங்கற்பத்தை ஒரு மிக்க ஒருக்கிட (அழிக்க) நினைவாய். எள்ளரும் தவங்கள் கற்ப கோடி காலம் நீ செய்தாலும் பாதாளத்தையும் பூமியையும் சுவர்க்கத்தையும் நீ பொருந்தினாலும் உனக்குச் சொன்ன சங்கற்ப நாசத்தை அன்றித் தெளிவான பரமபதத்தை அடையக் கலக்கமில்லாத உபாயம் வேறு இல்லையாம்.

துன்பங்களும் வேற்றுமைகளும் இல்லாத பிரமானந்தத்தைச் செய்கின்ற சங்கற்பத்தைக் கெடுக்க முயற்சி செய்வாய். மிகவும் சங்கற்பமாம் கயிற்றில் அளவற்ற பாவனைகள் அனைத்தும் இயல்புள்ள கோவையாய் (சரமாய்) உண்டாகும். அந்தக் கயிற்றினை எளிதினில் அறுத்தால் மயக்கத்தை உடைய பாவனைகள் எப்படித் துகளாய் நசிக்குமோ மைந்தா, அறிகிலேம் (நீ அதனை ஊகித்துக் கொள்ளலாம்.)

துன்பம் செய்யும் சங்கற்பம் இன்றி எதிரே வந்து தோற்றிய தொழில் வழி நிற்பாய். நடுக்கம் செய்கின்ற சங்கற்பமானது இறக்குமானால், அறிவு, பார்வைகள் அனைத்திலும் (பார்க்கப் படுவன அனைத்திலும்) பற்றாது. ஒப்பற்ற உயர்ந்திருக்கின்ற பிரமபதத்தைச் சேர்ந்து உலக வேறுபாடான விகற்பங்கள் யாவையும் நீக்கி இனிமை உடையவனாய்ச் சுழுத்தி மனத்தை அடைந்து ஏகத்துவத்தில் (அத்துவிதத்தில்) இன்பமே பெறுவாய் -

## சீடன் வினா

என்று சொல்லவும் உயர்ந்த சங்கற்பம் எது, அது உண்டானது வளர்ந்தது வீழ்ந்தது, தேய்ந்தது எப்படி என்று தவம் செய்கின்ற தாசூரனை மைந்தன் (சீடன்) விவரமாய்க் கேட்க, அதற்கு அவர் சொல்லுவார் :

மேலான, உண்டு என்கின்ற சொரூபமாக, விளங்கிய சமமான ஆன்ம ஞானமானது காண்பவற்றில் பொருந்த உண்டாதலே சங்கற்பமாம்.

சிறிதாக எழுந்து தான் ஒரு முதல் (primeval seed) ஆக இருந்து அடைவிலே (கிரமமாக) பையப் பையப் பருத்து (வளர்ந்து) தற்பர (பரமாத்மாவாகிய) தெளிவை மிகவும் மறைத்துச் சடத்துவம் திடமாக (firmly) உண்டாக, மேகம் போல் வளரும், மைந்தா, அறிவானது காண்பவற்றினைப் பாவித்திருக்கின்ற தனக்கு வேறு போலப் பார்த்து நடந்து சங்கற்பமாய் விளங்கும்.

"அறிவெனும் விதை சங்கற்பமாம் முளையாம்" (ஞானம் என்னும் வித்தானது சங்கற்பம் என்னும் அங்குரமாம்). அந்தச் சங்கற்பமானது தன்னை வேற்றுமையாகத் தானே உண்டாக்கித் தான் உண்டாகும். தானே பெரிதாக வளரும். மிகுந்த துன்பமே யன்றி இன்பமாவது ஒன்றும் இல்லை. ஆகையால் சொல்லிய சங்கற்பத்தின் மார்க்கத்தில் செல்லக் கருதாதே. நிற்கின்ற சகத்தின் நிலையில் கணமும் பாவனை செய்யாதே.

இவ்வளவான பாவனையினால் பரம சுகமாம். இப்படிப் பட்ட சங்கற்பமானது தவறு அடையப் பெரிய முயற்சிகள் வேண்டா. தாக்குகின்ற பாவனைகள் யாவற்றையும் ஒழிக்கின்ற அவ் வகையால் தன் மனம் இறக்கும். அலர்ந்திருக்கும் பூவினைக் கசக்க வேண்டும் என்றால் கைக்கு வருத்தமாயிருக்கும். சொல்லிய இச் சங்கற்ப நாசத்திற்கு அவ்வளவு வருத்தம் வேண்டுவதில்லை.

எழுந்த சங்கற்பமானது பாவனையை விட்டு விட்டால் (with the control of thoughts) இந்தப் புறமுக (external : வெகுமுக) சங்கற்பத்தை இவ்விடத்தில் இதனால் (அந்தர்முக-உள்முக- internal) சங்கற்பத்தினால் அழுந்துற

மாய்த்து, தூய மனத்தினால் அசுத்த மனத்தைக் கெடுத்து, உன் ஆன்ம ஞானத்தில் நீ நிலையாயிருப்பாய். கடத்தின் (pot) பின் வைத்த உழுந்து உருளும் நேர அளவில் கைகூடும். இது அரியதோ? என் வார்த்தையை அதற்கு ஏற்றுக் கொள். அது கைகூடும். அஞ்ஞான விகற்பத்தால் உண்டாவது சங்கற்பம். அது உண்மையில் இருக்க வில்லை. பிரபஞ்சமும் ஆகாயமும் போல முழுதும் அசத்தியமாம்.

## அத்துவித அனுபவம்

அரிசிக்கு உமியும் செம்புக்குக் களிம்பும் இயல்பாக இருந்தும் தொழில் விசேடத்தால் (முயற்சியால்) நீங்கி விடும். அது போல ஆன்மாவும் அஞ்ஞானத்தை அடைந்து விசாரத்தால் நீக்கிக் கொள்ளுதலே இயல்பாம். கொண்ட சந்தேகத்தை விட்டுக் குருவின் வல்லபமான விளக்கத்தால் நீ முயற்சி செய்வாய். கண்டோம் என்று சொல்லப்படும் யாவும் (காண்பன யாவும்) பயனற்றவை. குருவுக்கும், சீடனுக்கும் உள்ள உறவு மட்டுமே பிரம்மத்துக்கு இட்டுச் செல்லும் ஒளி என மதிக்கப்படல் வேண்டும்.

இப்படி என்று அந்தத் தாசூர முனி சொல்லிய பொருள் யாவற்றையும் கேட்டு அந்த இரவில் அவ்விடத்தில் அம் முனியை யான் அணுகி மனம் மகிழ்ந்து பூசித்தேன். என்னுடன் அந்தத் துளிர் மேல் இருந்தான். நாங்கள் இருவரும் உண்மையான அனேக கதைகளால் இரவைக் கண நேரமாகக் கழித்தோம். பின் அந்தத் தாசூரனைப் பிரிந்து நான் கங்கை யாற்றை அடைந்தேன். இவ் உலகத்தின் இயல்பு அவன் சொன்ன கதை போல்வதாம்.

❑

## 4:5 கசன் கதை *

### முன்னுரை

முன் கதையில் சித்து விலாசமான சங்கற்பமே சீவ ஈசுவர சகம் ஆக விளங்குவதை (It is samkalpa which

* The story of Kasa.

manifests itself as jivas. Iswara and the universe) நிரூபித்து (காட்டி) இவை சித்தேயாம் (not other than chit) என்று அனுபவமாய் அறிவிக்கு நிமித்தம் கசன் கதையைச் சொல்கிறார்.

**கருத்து**

*காலம் முடிவில்லாதது. இதில் நூறு வருடம் என்பது நொடி அளவும் ஆகாது. இதனை நெடுங்காலம் என்று நினைத்துத், தீராத மிகு ஆசையைப் பொருந்துவது என்ன நலம் தரும்? பொருள்களை நினைந்து படர்வதாகிய உள்ளத்து ஆசையைப் பற்றில்லாமல் ஒருக்கி நிற்பாயாக (கெடுத்திருப்பாய்)*

*ஆசையற்று நீ எத் தன்மையனாக வாழ்கின்றாயோ அத் தன்மையனாகவே வாழக் கடவாய். பூமியில் அழகிய நல்ல மணிகள் எத்தகைய ஆசையும் இன்றி மிகுந்த நல்லொளி வீசுதல் போல் பிரமத்தினிடத்தில் சத்தா* (sat) *மாத்திரமா உண்டான உலகமும் நலம் பெறப் பிரகாசிக்கும்.*

*(பிரமப் பிரதிபலனமான சகத்தை வேறாகக் கண்டு இச்சிக்கக் கூடாது என்பதாம்)*

*இரண்டற்றதான பிரமத்தினிடத்தில் செயல் புரிவோன் (கர்த்தா :* doer) *செயல் புரியாதோன் (அகர்த்தா :* Non doer) *என்ற இருமை கிடையாது. ஆசையில்லாவிடில் அகர்த்தனின் (செயலிலன்) தன்மையும் ஆசையினால் கர்த்தனின் (செயலன்) தன்மையும் உண்டாகின்றன. இந்த இரண்டை அல்லாமல் ஆன்மாவில் வேறு ஒன்றும் கிடையாது*

*இந்த இரண்டில் (அகர்த்தா, கர்த்தா) உனக்கு இசைந்தது எதுவோ, அதனில் நிற்பாய். அந்த இரண்டும் அல்லாமல் தோன்றி வளரும் மனத்தை விழுங்கி உன்னில் மிகவும் திடமாக நிற்பாயாக. நீ அகர்த்தாவாகவோ கர்த்தாவாகவோ இருக்கக் கருதினாலும் இதுவே (மனத்தை அழித்தலே) நன்மையாம். துன்பம் சற்றும் வராது.*

*நீ அகர்த்தா* (non-doer) *ஆக இருக்கக் கருதினால் நீ சகத்தின் ஒழுங்கின் படி நடப்பாயாக. அன்னிய நினைவு இல்லாமையால் இவ் அகர்த்த நிலையில் விகாரம் இல்லை,*

என்னது என்றும் நீ என்றும் நான் என்றும் செய்தேன் என்றும் செய்யவில்லை என்றும் மதித்த போதே துக்கமாம். உடலை நான் என்பவர் உண்டோ?

உறுப்புக்கள் செறிந்த யாக்கையை நான் என்று சொல்லில் இருபத்தொரு நரகமும் அதுவேயாம். வெவ்விய வலிய துன்பமானாலும் உடலை நான் என்று சொல்ல வேண்டா. ஐயமில்லாத கேள்வியை உடைய நல்லோர், சண்டாளர் சகல மாமிசங்களையும் புசிப்பாராயினும் நாயின் மாமிசத்தைப் புசியார், அது போலத் தேகம் நான் என்று கருதார்.

உடலை நாம் என்பது களங்கம். அதனால் "ஞானக் கண் குருடாய்ப் போகும்". குற்றம் மிகுந்த களங்கத்தைத் தூரத் தள்ளுவார்களாயின் பிரகாச ஞானமானது கறுத்த மேகமில்லாத இடத்து விளங்கும் நிலாப் போலப் பிரகாசிக்கும். இப்படிப்பட்ட பார்வையால் மிகுந்த பிறவிக் கடலின் அழகிய கரை எளிதில் தோன்றும்.

அனைத்திலும் நான் கர்த்தன் அல்லேன். அவன் என்பதும் இவன் என்பதும் யான் அல்லன் என்று சிந்தித்து மனத்தில் உறுதியாகி அகர்த்தன் (Non-doer) ஆக இரு. அப்படி இல்லையாயின் இன்னொரு வழி உண்டு. அனைத்திற்கும் கர்த்தன் நானே என்றும் அளவில்லாத அப் பொருள்களும் நான் என்றும் சிந்தித்துச் சலனம் ஒன்றும் இல்லாமல் உறுதியாய்க் கர்த்தாவா யிருப்பாய்.

அப்படி இல்லை என்றால், இவ் இரண்டில் ஒன்றும் நான் அல்ல, யாம் வாக்கு மனோதீதமாகிய ஒன்றேயாம் என்று கருது. உனது பதமாகிய (own self) உத்தம நிலையில் நீ யிருப்பாய். ஏகம் என்கிற பரம பதத்தைத் தரிசித்த உத்தமர்கள் தம்மிடத்தில் (their own self) இருப்பார்கள். "துன்று வாதனையே பந்தம்" (நெருங்கிய வாசனையே பந்தமாம். அதனைத் தீர்தலே பழமையான மோட்சமாம்.)

ஓசை முதலிய புலன்களில் பழகி மனம் பற்றியுள்ள வாசனைகளை (அசத்த வாசனைகளை) முதலில் கெடுத்துப் பிறகு மோட்சத்துக்கு உதவும் சுத்த வாசனைகளையும் விட்டொழிப்பாய். நலம் திகழும் அருளும் சந்தோஷமும்

நட்பும் உதாசீனமும் ஆகிய இந் நான்கும் மாசற்ற குணங்களாக அதன் தொழிலை மனத்தில் பற்றாமல் செய்வாயாக.

உள்ளத்தின் கண் உள்ள செயல்களை முழுதும் கெடுத்து ஒப்பற்ற ஓர் உணர்வைப் பற்றி (pure absolute consciousness) மெல்ல அவ்விடத்தில் அந்தச் சித்து வாசனையையும் அந்தக் கரணங்களோடும் (internal organs : lower mind) கெடுத்து, தள்ளப்பட்ட யாவும் எந்த முயற்சியினால் நீக்கினையோ அம் முயற்சியையும் தள்ளித் தெளிவான அறிவும் மனமும் தொழிலும் ஞானப் பிரகாசமும் அஞ்ஞான இருளும் ஆகிய அனைத்தும் நீங்கி,

வாசனை வடிவமாகிய (இப்பொழுது சொல்லப்பட்ட) இவையும் இவற்றை வேற்றுமையாகப் பழகுகின்ற சிதாபாசனும் (distorted conception) பிராண வாயுவின் சலனமும் எதுவும் காரணத்துடன் (மூலத்தோடும்) கெடுத்து ஆகாயத்தைப் போல நிற்பாயாயின் சகலமும் தீர்ந்த சாந்தனாய் எதுவாயினை எனில் உண்மையாக அதுவே நீயாம் என்பதாம்.

(விருத்தி ஞானத்திலுள்ள அசுத்த வாசனையும் சமாதி ஞானத்திலுள்ள சுத்த வாசனையும் இறக்கில், கூடஸ்த பிரம அயிக்கியமான அத்துவிதம் விளங்கும் என்பதாகும்)

உள்ளத்தில் உள்ள அனைத்து வாசனைகளையும் அகற்றி உலகில் ஒரு பற்று இன்றி அசைவற்ற நிலையில் நின்றவர்கள் துகள் அறு (குற்றம் அற்ற) சீவன் முத்தர்கள் ஆவார்கள். அச் சீவன் முத்தர்களே எண்ணுதற்கு அரிய உயர்வுள்ள ஈசர் ஆவார்கள். சமாதியையும் கொள்ளுதற்கு உரிய கன்மத்தையும் (தொழிலையும்) சேர்ந்தாலும் விட்டாலும் சீவன் முத்தர்களாம்.

மனத்தின் கண் ஆசை ஒன்றும் இல்லாமையால், குறிக்கப் பட்ட தொழில்களைச் செய்தாலும் விட்டாலும் கைவசமான பயன் ஒன்றில்லை. ஒரு வழிப்பட நீள் காலம் மனம் ஒருமைப் படுகையால் வளருகின்ற வாசனை நீங்கிய மனத்தில் சாத்திரங்களின் அறிவு வேண்டாவாம்.

சுழலும் வாசனைகள் நீங்கிய மோன நிலையை அல்லாமல் பொருந்துதற்கு உரிய வேறு ஒரு கதி நன்மையானதில்லை.

அறியத் தக்கதை அறிந்ததாகியும் திசைகள் பத்தும் சுழன்று திரும்பினதாகியும் பழமையான சகத்தின் அறுதியாய் உண்மை கண்டோர் சிலர். மற்றவர்கள் அவ்வுலக மயக்கத்தில் கெடுகின்றவர்கள்.

உடம்பை நோக்கி யல்லவா சகத்தில் உள்ள யாவரும் திரிவதல்லால் ஒன்றான ஆன்மாவை நோக்கியன்று. எவ்விடத்தும் பஞ்சபூதமே அல்லாமல் விண்ணிலும் மண்ணிலும் கீழையுலகிலும் தேடினாலும் ஆறாவது பூதம் கண்டதில்லை. மோகத்தை விடுவோம் என்று திடமுற்றவர்கள் யாவையும் பற்ற மாட்டார்கள்.

அனுபவ யுக்தியில்லாத மூடர்கள் அனைவர்க்கும் பிறப்பானது ஊழிக் காலத்து வெங்கடலாம். மயக்கம் இல்லாத அனுபவ யுக்தி உடையவர்களுக்கு முன்னிருக்கின்ற பசுவின் குளம்படி போலக் (பிறப்புச்சுழல்) கெடுதல் இல்லாததாம். போகம் இல்லாத வறண்ட பூமியில் இருக்கின்ற பெண்களால் பிரகாசிக்கின்ற பட்டணத்தில் உள்ள விடலைக்கு (புருடர்களுக்கு) என்ன பயன்?

## கசன் சமாதி அனுபவம்

பிரமம் ஆகிய தூய சமுத்திரத்தில் மலைகள் நுரைகள் போலாம். பிரமம் ஆகிய சூரியன் (பேரொளி) முன்பு கடல் சூழ்ந்த பூமி கானல் நீராம். திரமுள்ள இவ் அருத்தத்தை வியாழனின் வரமகன் கசன் என்னும் பெயருடையவன் முன்பு ஒரு சமயம் சொன்னான். அதைக் கேட்பாயாக :

கசமுனி மேலாம் சமாதி நீங்கி ஒரு பொழுது, களிக்கின்ற மனத்தனாக, பரவசனாக, தழுதழுத்த உரையினன் ஆக "யாது செய்கேன், திசையுற எங்கே போவேன், விடப்படுவது எது, கொள்வது எது, மேலாக வளர்கின்ற பிரளய சமுத்திரத்தைப் போல உலகமெலாம் நிறைந்திருப்பது எனது சொரூபமே -

மேனியின் (உடம்பின்) புறத்தில் உள்ளில் மேலொரு கீழ் திக்குகளில் வானில் வையகத்தில் எங்கும் நான் அன்றி வேறொன்றும் இல்லை. யான் இல்லாத இடமும் இல்லை. எனது இடத்தில் (சொரூபத்தில்) இல்லாதனவும் இல்லை. தானே திகழ்வான (விளங்குகின்ற) பொருள் வேறு இல்லை. சச்சிதானந்த சொரூபமே பிரகாசிக்கின்றது" என்றான்.

(சமாதியிலிருந்து சாட்சாத்காரமான மனத்தினால் பார்க்கும் இடத்தில் எல்லாம் பிரம மயமாய் விளங்குகிறது என்பதாம்.

## 4:6 திதிப் பிரகணத்திற்கு முடிவுரை

### சுருக்கம்

முன் கதையில் யாவும் பிரம மயமாய் விளங்கும் என்பதை அறிவித்து அவ் அனுபவம் வரும் பொருட்டு அவ் ஐந்து கதைகளின் சாரங்களைச் சுருக்கி கூறுகிறார் ஆசிரியர்.

### கருத்து

பெறுதற்கு அரிய சத்துவ குணப் பிறப்பை உடையவர்கள், புவி மேல் பிரமப் பிரகாசமாக வாழ்தல், ஆகாயத்தில் திகழ்கின்ற நிறைமதிக்கு ஒப்பாகும். வருத்தும் துயரில் அவர்கள் வரட மாட்டார்கள். இரவு வந்தாலும் சிறப்பான பொற்றாமரை சற்றும் குவியுமா?

பிரகிருதமாகிய தொழில்களை (present actions) அன்றி வேறான தொழில்களைப் பற்றார்கள். அறிவாகிய மேலவர் நெறியில் நடப்பார்கள். மிகுதியாய் நிறைந்து சலனமற்ற உளத்தினால் மேன்மையாவார்கள். கூட்டமாகிய நட்பு அருள் முதலிய குணங்களால் சுடர்வார்கள்.

இயல்பான குணம் படைத்தவர்கள் தாழ்வு, உயர்வு என்னும் இரண்டையும் நயக்காதவர்கள்; சமத்துவம் உடையவர்கள். நன்னெறி நடப்போர்கள். வியக்குமாறு தன் கரை தாண்டாத கடல் போன்றவர்கள். மயக்கு இல்லாதவர்கள்; நியதி வழுவாத கதிரவன். போன்றவர்கள்.

கொள்ளற் பாலது துயர் இலா தவர் நிலை; குறுகத்
தூள்ளற் பாலது தீயவர் நெறி எனும் சழக்கே;
எள்ளற் பாலது உலகம் ஏ(து) யாம் எவன் என்றே
தெள்ளற் பாலது குரவரால் அறிவினால் தீர.

கொள்ளத் தக்கது மாசற்றவர் குணத்தை; தள்ளத் தக்கது

*கொடியோர் நெறியாகிய குற்றத்தை; நிந்திக்கத் தக்கது எப்படிப் பட்டது என்று விசாரித்த பின் உலகத்தை; ஆசிரியராலும் தன் அறிவினாலும் தீரத் தெளியத் தக்கது தான் எப்படிப் பட்டவன் என்பது.*

வருந்து கிற்பது தனைஅறி நெறியிலே; மனத்தால்
திருந்து கிற்பது கருமத்தில் அழுந்திலாச் செய்கை;
பொருந்து கிற்பது தீயவ ரல்லர் புணர்ச்சி;
அருந்து கிற்பது நான் என்ப(து) ஆக்குகிற் பதுவே.

*வருத்தப் படுவது (முயற்சி செய்யத் தக்கது) தன்னை அறியும் நெறியில்; திருந்தச் செய்வது உலகியல் விவகாரத்தில்* **(worldly affairs)** *அழுத்தமற்ற தொழிலை; அடையத் தக்கது நல்லோர் இணக்கம். புசிக்கத் தக்கது 'நான்' என்பது ஆக்குகின்ற அகத்தை.*

தீர்க்கத் தக்கது நரம்பு எலும்பு எனும் உடல் தியக்கம்;
பார்க்கத் தக்கது முழுதுயிர்க்(கு) உள்ளுறை பரமம்;
ஈர்க்கத் தக்கதேர் இரவியி னிடத்தினும் பாரில்
நீக்கத் தக்கிலாப் புழுவினும் சித்தொன்றே நிற்கும்..

*நீக்கத் தக்கது நரம்பு எலும்பு என்கின்ற உடல் மயக்கம். பார்க்கத்தக்கது முழுது உயிர்க்குள் (சகல ஆத்ம கோடிகளுள்) நிறைந்திருக்கின்ற பிரமம். (பச்சைப் புரவியினால்) இழுக்கப் பெறும் தேரையுடைய சூரியன் முதலாகப் பூமியில் கீழ் உள்ள (தள்ளத் தகாத) புழு வரையிலும் ஞானம் ஒன்றே (நிலையா)யிருக்கும்.*

*நாம் நம் முயற்சிகளால் வேறாய பல பிறவிகள் அடைகிறோம். அவற்றில் சத்துவம், இராசதம், தாமதம் ஆகிய குணம் மூன்றில் ஒன்று ஓங்கி நிற்கிறது. ஆனால் சாத்துவிகத் தொழிலால் மட்டுமே சேம முத்தியை அடையலாம்.*

*உத்தமமான இராமனுக்கு இவ்வாறு வசிட்டர் சொன்னார்.*

# ஐந்தாவது
# உபசாந்திப் பிரகரணம்

## சுருக்கம்

முந்திய பிரகரணத்தில் சித்து விலாசமே சகம் என விளங்கும் என்பதை நன்கு உணர்த்தி, அந்தச் சித்தே சகமாக விளங்குதலால் சகம் எப்போதும் இல்லை எனத் தெரிவிக்கும் நிமித்தம் ஒன்பது கதைகளால் நிறைந்த உபசாந்தப் பிரகரணம் கூறத் தொடங்குகிறார் ஆசிரியர்.

## 5:1 சனகராசன் கதை

### சத்துவ குணம்

தேவ குருவின் மகனாகிய கச முனி சொன்னது போல், இவ்வுலகெலாம் ஆன்ம ஞான சொரூபமாம். பிறப்பு, இறப்பு என்னும் மிகுந்த மாயையானது இராசதம் தாமதம் என்னும் குணம் பொருந்தியவர்கள் தரிக்கத் தக்கதாக, தூண்கள் சுமக்கும் மண்டபத்தைப் போல நிலையாயிருக்கும். உறுதியான சாத்துவிகக் குணம் உடைய உன் போன்றவர்கள் பிறவியச்சம் நீங்கியிருப்பார்கள்.

குறைவிலாச் சாத்துவிகக் குணம் உடையவர்கள், தோலைக் கழற்றும் பாம்பு போல் மாயா பாசத்தினின்று நீங்குவார்கள். எல்லாம் பிரம்மம்; நாமும் அந்தப் பிரம்மமே என்று உணர்ந்து யாம் வேறு முழுதுலகம் வேறு என்கின்ற மயக்கத்தை அழிப்பாய். காரண (மூல) மான பிரம ஞானத்தில் எழுவனவாகிய கற்பனைகள் எல்லாம், கடலில் எழும் அலை போல் உண்மையில் இல்லை.

துன்பம் இல்லை, இன்பம் இல்லை, பிறப்பில்லை, பிறப் பிறப்பிற் சுழலுவன இல்லை. ஒன்று என்று இங்கு எப்போதும் உள்ள பொருளே உள்ளது. இரங்க வேண்டா. (அனுபவ)யுக்தி பொருந்தும்படி அறிந்து, நீ வருவனவற்றையும்

*போவனவற்றையும் நினைக்காதே. (விருப்பு, வெறுப்பு) என்கின்ற) இருமை அற்ற மிக மேன்மையான சத்துவ குணத்துடன் ஒருவனாய், இடரெல்லாம் நீக்கி நிற்பாய்.*

*சமம் ஆகி (ஆன்ம ஞான) சொரூபத்தில் நிலையாகி, திடஞானம் உள்ளவனாய், சாந்தனாகி, மனம் மௌனமாகி, நல்ல மணி போல் தெளிவடைந்து, துயர் அனைத்தும் தீர்வாய். தூய்மை பொருந்த நிகழ்காலத் தொழில் யாவற்றிலும் நேயம் (இச்சை) யின்றிச் செய்வாய். எனது என்று கொள்ளுதலும் தள்ளுதலும் ஆகிய இவ் இரண்டும் இல்லாமல் துன்பம் அனைத்தையும் கெடுப்பாய்.*

## பிரம அனுபவம் - பக்குவம்

*இனிப் பிறவா, முடிவான பிறப்பில் மெய்ஞ்ஞானம் எளிதில் உதயம் ஆகும். குளிர் ஒளி வெண்முத்துகள் உத்தமமான மூங்கிலல்லால் உண்டாவதுண்டோ? பிறந்தவர்களில் மேன்மை யுள்ளவர்களாகியும் நல்லோராய், அன்புடையோராய், தெளிந்தோராகியும் நித்தியமான சீவன்முத்தர்களாகியும் (ஆன்ம) ஞானிகளாயும் இருக்கின்ற குணமெல்லாம் அவரை (முடிவான பிறப்புள்ளவர்களைச்) சேரும்,*

*மெத்தென்ன சரித்திரத்தின் (நடை உடைய) அவர்களை (சத்துக்களை) உலகெலாம் விரும்புகின்ற தன்மையானது, வனத்தில் மூங்கிற் குழல் இசையால் மகிழும் விலங்கின் (பசுவின்) கூட்டம் போல்வதாகும். பிறப்புத் தீர்ப்பவர்களுக்கு மோட்ச வழி இரண்டு. அவற்றைச் சொல்லக் கேட்பாயாக.*

## ஞானவழி இரண்டு

*ஆசானின் உபதேச வாக்குகளைத் தவறாமல் கடைப் பிடித்தால் பையப் பையத் தயக்கம் நீங்கி, ஆசான் அனுக்கிரகம் செய்த சென்மத்திலாவது அதற்கு அடுத்த சில பிறப்புகளிலாவது வீடானது உண்டாம்.*

*இன்னொரு வழி,*

*மாசறு அறிவு (விற்பன்னம்) சிறிது உண்டாகப் பெற்ற மனத்தினால் தான் தியானம் செய்வதனால் குற்றம் அற்ற*

ஆகாசக் கனியானது விழுவதைப் போல மெய்ஞ்ஞானம் எளிதில் (எதிர்பாராதவாறு) வரும்.

(ஞானத்துக்கான வழி இரண்டில் ஒன்று குரு வழி காட்டுதலால் வருவது; மற்றொன்று தனக்குத் தானே வழி காட்டுதலால் வருவது ஆகும்)

## முன் நடந்த கதை

இந்த இரண்டு மார்க்கத்தில் ஆகாயக் கனியைப் போல மெய்ஞ்ஞானம் (தத்துவ ஞானம்) ஆனது இயைந்த தன்மையை, செவ்விய வள்ளலாகிய இராமா, முன் நடந்த ஒரு கதையினால் நான் சொல்லக் கேட்பாயாக!

பகைவரால் உலகில் ஆபத்து ஒன்றும் இல்லாதவன், உதாரம் (தாராள இயல்பு), உடையவன், செல்வம் மிக்கவன், அவ்வியம் (பொறாமை) இல்லாதவன் விதேக நாட்டை அரசாட்சி செய்வோன், சனகன் என்னும் பெயரை உடைய அரசர் கோமான்...

(அவன்) சற்குணத்தில் கடல் போன்றவன். விஷ்ணு போல உலகம் தாங்கும் குணம் உடையவன். நல்ல குணங்களைச் செய்கின்ற வசந்த காலத்தில் நறுமலர் சூழ் நந்தவனத்தில் மகிழ்ச்சியுடன் சென்று தன் மந்திரி சேனைகள் வெளிப்புறத்தே நிற்க, தனித்துச் சஞ்சரித்தான். அச் சமயம் சித்துக்கு உரிய மனத்தை உடைய சித்தர்கள் பாடுகின்ற பண்களை (கீதங்களை)ச் செவியிற் கேட்டான்.

## சித்தர்கள் - மகா வாக்கியம்

வாசனை மிகுந்த மலையில் இருப்பவர்களும் கண்களுக்குப் புலப்படாதோர்களும் ஆகிய சித்தர் கணங்கள் தங்கள் அனுபவத்தை விளம்பும் கீதத்தை நீதி நிறை மன்னவனாகிய சனகராசன் கேட்ட வண்ணம் யான் சொல்ல, நெடியவனே, இராமா, நினைவிற் கொள்வாயாக,

அறிவானும் (ஞாதா) அறிபொருளும் (திரிசியம்) கூடிய கூட்டத்தில் தோன்றும் அறிவானந்தமானது பிரிவுபடாத ஆன்ம ஞானத்தில் உண்டானதாம். அந்த ஆன்ம ஞான சுகம் பேணப்படுதல் வேண்டும் என்று ஒரு சித்தர் சொன்னார்.

காண்பானும் (ஞாதா) காண்பனவும் (திரிசியமும்) காட்சியும் (ஞானமும்) வாசனையோடும் நீங்கச் செய்து உயர்வான பார்வைக்கு முதற் பிரகாசமாகிய அந்த (ஆன்ம) சொரூபத்தைத் தியானம் செய்ய வேண்டும் என்று ஒரு சித்தர் சொன்னார்.

சத்து அசத்து என்னும் இரண்டன் நடுவான மையத்தை அடைந்து முடிவில்லாத மாட்சிமை உடைய பிரகாசங்களுக் கெல்லாம் பிரகாசமான ஆன்ம ஞானத்தை எப்பொழுதும் தியானிக்க வேண்டும் என்று ஒரு சித்தர் பாடினார்.

நான் நான் என்று அனைத்துயிரினிடத்தும் இருந்து சதா காலமும் சொல்லுவதாய்ப் பிரகாசமாக விளங்காநின்ற ஆன்ம தத்துவமான சொரூபத்தைச் சிந்திப்போம் என்று ஒரு சித்தர் சொன்னார்.

திகழும் இதயக் குகையில் உறையும் தெய்வத்தை விட்டு வேறான தெய்வம் தேடுதல் மிகவும் அருமையான, கையிலி ருக்கும் கவத்துவ (கௌஸ்துப) ரத்தினத்தை எறிந்து விட்டுச் சிறு (சங்கு) மணி தேடுகின்ற ஆசையை ஒத்திருக்கும்.

முடிவில்லாத ஆசை என்கின்ற விடவல்லி (நச்சுக் கொடி) யின் காட்டை எரித்து மிகுந்த இச்சைகள் அனைத்தும் அறுத்தவர்களுக்கு அல்லவா, இவ் ஆன்ம லாபமானது கிடைக்கும்? தீமையான பொருள் அனைத்திலும் முன்னாளிலும் பின்னாளிலும் இன்பம் இல்லாதிருக்கின்ற குற்றத்தைப் பார்த்திருந்தும், திரும்பாத பாவனையில் பந்தப் படுபவர்கள் வேசரி (கழுதை)யே யன்றி வேறல்ல.

எழுந்து எழுந்து சீறுகின்ற இந்திரியப் பாம்புகளை (நுகர் பொறிகளை) விவேகம் (பகுத்தறிவு) என்னும் தடியால், வச்சிராயுதத்தால் இந்திரன் மலைகளைப் புடைப்பது போலக் கெடும்படியாக அடிக்க வேண்டும். சாந்தியினால் சம பாவத்தை அடைந்து துன்பம் இல்லாத மனமானது முழுதும் சக வடிவு ஆனது. தற்பத நிலையை (தன் ஆன்ம சொரூபத்தை)ப் பெறும் இதுவே முத்தி (மோட்சம்) என்ற பல சித்தர்கள் சொன்னார்கள்.

தெளிவுடைய சித்தர் குழாங்கள் விளக்கமாகப் பேசிய கீதம் (அனுபவ அர்த்தங்களை) தெளிவாகக் கேட்டு, கொடிய கோபம் உள்ள கருடனது ஒலி கேட்ட பாம்பைப் போலச்

சனகராசன் கலங்கினான். குளிர்ந்த சோலையை விட்டுத் தன் அரண்மனைக்கு வந்து மந்திரி முதலிய யாவர்க்கும் விடை கொடுத்தான். தன் வீட்டிற் புகுந்து மேல் உப்பரிகையில் தனியனாய் இருந்து (முன் சிரவணம் ஆன அருத்தத்தை) மிகவும் ஆராயத் தொடங்கினான்.

(ஆத்ம -அநாத்ம விசாரணை செய்யத் தொடங்கினான்).

பறக்கின்ற பறவைகளின் இறகைப் போல அனவரதம் (சதாகாலம்) பதைத்து அலைந்து நசிக்கின்ற உலகத்தின் நடையைப் பார்த்து வாய்விட்டு அழுது, சொல்லத் தொடங்கினான்.

## அரசன் விசாரம்

மிகவும் நைந்து அவலத்தில் உழன்று அலமரும் இச் சகத்தினிடத்தில் அந்தோ அந்தோ அதிகரிக்கும் மயக்கத்தினால் நான் பெருங்கல்லின் இடைப் பொடிக் கற்களைப் போல் அந்தோ உருண்டு நெரிந்தேன் (வருந்தினேன்)

ஒரு காலத்தும் முடியாதிருக்கின்ற கால தத்துவமான இதனிடை எண்ணிக்கையுள்ள எனது ஆயுள் என்னும் நூறு வருடமானது ஒரு கண நேரமும் இல்லை, இந்த ஆயுளை மதித்து வலிமையுள்ள ஆசையினிடத்தில் விழுந்து நான் தளர்ச்சி அடைவது எதனாலோ? தூல புத்தியினால் (மட்டமான மனத்தால்) கெட்ட என்னைப் போல் இழிவுள்ளவர்கள் யாருள்ளார்கள்? ஒழுங்கில்லாத ஆயுளைப் பெரிதாக நினைவது அந்தோ சீ சீ!

எல்லையில்லா அண்டத்தில் நான் ஆளுகின்ற புவியைப் பார்க்குமிடத்து அது அணுவளவும் இல்லையே! துன்பம் பொருந்தும் இச் சகத்தைப் பெரிதாக விரும்பி நிற்கின்றேன். அந்தோ அந்தோ! இந்தப் பேருலகில் இமைப் பொழுதாவது இனியது உதாரமானது செய்யப்படாதது என்று சொல்லும் பொருள் ஒன்றையும் கண்டிலேன். சகத்தின் தொடர்பிலாத தன்மைகள் உண்மையிலே அதிசயமாக இருக்கின்றன.

தலைவர்களுக்குத் தலை மேல் இருப்பவர்களும் நாள்களினால் தாழ்ந்தோர்க்குத் தாழ வீழ்வர். நிலையில்லாத

இப்படிப்பட்ட செல்வத்தை உறுதியாக நினைக்கின்ற மனமே, இந் நினைப்பு எதனால்? நீங்காத பெரும் போகங்களும் பெரியோர்களும் கிளைகளோடும் தோன்றித் தோன்றி முன்பு சஞ்சலமுற்று இறந்தார்கள். இந் நாள் இங்கு இவை அனைத்தின் உறுதி என்ன?

மண்ணாடும் அவற்றை யாளும் மன்னவரும் அவர்களின் செல்வங்களும் மறைந்து போனவை நுண் மணலுக்கு நிகராகும். விண்ணாடும் அதற்கு அரசராகிய தேவேந்திரர்களும் அவர்களின் செல்வங்களும் போய் விட்டவை ஆகாயத்து மீன்களுக்கு ஒப்பாகும். எண்ணிக்கையுள்ள உலகங்களும் பிரமர்களும் அண்டங்களும் சீவகோடிகளும் நசித்தது அளவு கிடையாது. வருந்தும் மனமே! பார்க்கப்படும் அவை எங்கே? நினது வாழ்க்கை நிலை எங்கே?

ஒரு பொருளாகச் செல்லாத மாயை என்னும் இருண்ட இரவில் தேகமய மயக்கம் என்னும் பொல்லாத நீண்ட கனவாகிய சூனியத்தில் (பொய்யில்) ஆசை சிறிதளவு வைத்தே யான் இழிநிலை அடைந்தேன். நான் அடைந்த மரணங்கள் போதும் போதும், காலங்கள் யாவும் நசித்தே போகும். இறவாமல் ஒன்றாவது நன்மை பொருந்தும் அழகுள்ள காலத்தை நான் பார்த்திலேன்.

ஆதியிலாவது முடிவிலாவது இடையிலாவது நன்மையான பொருள் ஒன்றாவது பூமியில் இல்லை. உண்டான பொருள் நாசம் என்னும் அழுக்கினால் பூசப்பட்ட தன்றோ? நாள் தோறும் கடுமையான பாவத் தொழில்களையும் வேதனையான காரியங்களையும் கரையில்லாத கொடுமைகளையும் அறிவிலார். குரம்பை (சரீர)க் கூத்தால் செய்கிறார்கள்.

பாலகனாக அஞ்ஞானத்தில் அழுந்துவான். நல்ல காளைப் பருவனாய்ப் பாவையரால் சால வருந்துவான். விருத்தனாகிக் குடும்பத்தால் தளர்ந்து சாவான். மேல் இவன் எந்தக் காலத்தில் என்ன (சற் காரியம்) செய்வான்? மாயைக் கூத்து இருந்தவாறு என்னே! ஞாலம் (சகங்கள்) அனைத்தும் ஆடரங்காகவும் பொறிகள் (இந்திரியம்) மேளமாகவும் (பல வாத்தியங்களாக) மனப் பேய் நடனம் செய்யும்.

உள்ள (சத்)தின் முடி மேலே இல்லாமை (அசத்) வீற்றிருக்கும். உலகில் அறத்தின் முடியில் பொல்லாங்கு (அதருமம்) வாழ்ந்து கொண்டிருக்கும். இகழ்ச்சியற்ற இன்பத்தின் தலை மேல் துன்பங்கள் இருக்கும் என்றால் இக் குறிப்பு உள்ள எனக்குக் கொள்ளத் தகுதியவான குற்றமற்ற பொருள் எது?

கண் விழிப்பதும் இமைப்பதும் சகத்தின் தோற்றமும் ஒடுக்கமுமாக, அனேகம் பிரமர்கள் உண்டாகப் பெற்று அழிவு பெற்றிருக்கிறார்கள் என்றால் அவர்களுக்கு முன்னே அற்ப உயிராகிய நான் எம் மாத்திரம்? விசித்திரமான சம்பத்தும் மனம் வருந்தினால் (இதயம் காயில்) ஆபத்தாம்! ஒழிப்பரிய விசித்திரமான ஆபத்தும் மனம் விரும்பினால் சம்பத்தாம்!

வெப்பமுள்ள சம்சார வாழ்க்கையே துன்பங்கள் அனைத்துக்கும் பிறப்பிடமாகும். இந்தச் சகத் (சம்சாரத்)தில் அழுந்தும் உயிர்களுக்கு இன்பம் உண்டாவது எப்படி? அஞ்ஞானமர்கிய சம்சாரம் என்கின்ற மரமானது கிளை, இலை, பூ, காய், கனிகள் அளவில்லாமல் வளரும்படியாக இருக்கிறது. இதற்கு வேர் மயக்கம் செய்கின்ற இம் மனமே யாகும். இம் மனம் தான் சங்கற்பம் என்று சொல்லப்படும்.

சங்கற்ப நாசத்தால் எளிதாக மன நாசம் தானே வரும். கேடுற்ற, மனமானது இறந்தால் பிறப்பிறப்பு என்கின்ற மரமும் மாயும். ஆன்ம ரத்தினமான என்னைத் திருடுகின்ற, கள்ளனைக் கண்டேன். கண்டேன். இவன் பெயர் மனம். வளரும் இம் மனத்தினால் நெடுநாள் நொந்தேன். இன்று இவ்னைக் கொன்று மரணமுறச் செய்வேன்.

இத்தனை நாள் மனம் என்கின்ற முத்தை நான் துளைக்க வில்லை. இன்று துளைத்து அனுபவம் என்னும் நூலால் அழகாகக் கோத்து அணிந்து கொள்வேன். முழுதுணர்ந்த சித்தர்களான ஆசிரியரால் யாவையும் தெரிந்தேன். சுத்த பரமானந்தம் தோற்றுவிக்கும் நல்லறிவாம் சோதி பெற்றேன். இவன் என்னும் நான் என்னும் இவை இங்கு என்னது என்னும் பொய்யை மெதுவாக மனத்திற் கெடுத்தேன். திரும்பவும் அவற்றை மனத்திற் கொணரேன்.

எனது ஆன்ம ஞானத்தைத் தடுத்த என் பெரிய

பகையாகிய மனத்தைப் பிளந்து வெற்றி அடைந்தேன். என்னை வேதனை செய்த துயரெல்லாம் மாற்றினேன். உப சாந்த வாழ்வு அடைந்தேன். இப்படிச் சாதித்த விவேக ஞானமே உன்னைத் தொழுதேன்.

என்று சனகன் தன்னைக் கெடுத்த மாயை எல்லாம் ஒழித்துத் தானே சித்திரப் பதுமை போல் (சமாதியில்) இருந்தான்.

## சமாதி - சகசம் - உரைத்தல்

மௌனமாகச் சித்திரத்தைப் போல நெடு நேரம் சமாதியில் இருந்து சனகன் திரும்ப வராதவாறு நாச மனம் அழிக்கப்பட்டு சமாதியில் இருந்து விழித்து அமைதி-உப சாந்த- நிறை மனத்தால்- உலகியல்பைப் பார்த்தான். பின் வருமாறு சொல்லிக் கொண்டான் :

முயற்சியால் நான் அடைய வேண்டிய பொருள் யாது? கைக் கொள்ளத் தக்கது யாது? குற்றமுள்ள கற்பனை யாது? குறித்துப் பார்க்கையில் எனக்குத் தற்போது எல்லாம் சுபாவ (தூய) ஞானம் மட்டுமே,

பரிசுத்தமாய் ஆன்ம ஞான சொரூபம் ஆகிய எனது சொரூபத்தை அல்லால் வேறு பொருள் தோன்றக் கண்டிலேன். வராத பொருள்களை நான் நயவேன் (விரும்பேன்). வந்த பொருள்களைத் தள்ளேன். சதா காலமும் தன்னிலையில் இருக்கின்ற எனது அறிவுருவில் (ஆன்ம ஞான சொரூபத்தில்) நிலையாக நிற்பேன். விதிக்கப்பட்ட படி எது வருமோ அது வரக் கடவதாக என்று பிரமானந்தத்தில் அழுந்திச் சனக ராசன் ஒருமைப்பட்டான்.

## நிகழ்காலம் மட்டும்

வானில் சஞ்சரிக்கின்ற ஒளியுடைய கதிரவன், நாள்கள் முதலியவற்றை (இச்சா எத்தனம் இன்றி) நடப்பிக்கின்றது போல, அடிக்கடி வந்து, தானே உண்டாகிய தொழில்களைப் பற்றின்றிச் செய்வோம். என்று சனகராசன் எண்ணி, தீமையே நேயமாக வருகின்ற எதிர்காலத்தையும் இறந்த காலத்தையும் சிறிதளவும் சிந்திக்காமல் நிகழ் காலத்துச் செய்கையில்

முழு மனத்தால் ஒரு நொடியில் நகையோடு செய்தல் தொடங்கினான்.

சித்தர்கள் உரைத்த ஆன்ம விசாரணையால் சனகராசன் அடையத்தக்க ஆன்ம லாபத்தை அடைந்ததால் அல்லாமல் உபசாந்த மனம் வேறு ஒன்றால் வந்தது அன்று. தாமரைக் கண்ணை உடைய சீராமா, குற்றமற்றதாக, அழகாக இருக்கின்ற தன் ஆன்ம விசாரணையால் மேலாம் நிலையை அடைவதல்லால் ஆசாரியர் இன்றி ஈனர் செய்யும் கிரியையால் சிற் சொரூபம் (ஆன்ம ஞான சொரூபத்தை) அடையலாகுமா?

பூமியின் கண் உள்ளவற்றில் விருப்பு உடையவர்கள் ஆன்மாவுக்குப் புறம்பான பேறுகளை (பதப் பிராப்திகளை) விரும்புகிறார்கள். சிறப்பான நல்லறிவு வேண்டும் என்று முயல்பவர்கள், ஆன்ம லாபத்தை அடைகிறார்கள். ஆகவே அவர்கள் துன்பக் கடல் சூழ்ந்த, அச்சம் ஆகிய ஆபத்து விளையும் இடமான இந்தப் பூமியில் நச்சு மரத்தின் விதையாயிருக்கும் பேதைமையை (அஞ்ஞானத்தை)க் கெடுக்க வேண்டும்.

## ஞான சிந்தாமணி

இதயம் என்னும் சரக்கு அறையில் (பெட்டியில்) இலங்கும் சிந்தாமணியாகிய ஞானமானது கலக்கம் இல்லாத ஞானிகளுக்குச் சிந்தித்த பொருள்களைத் தரும் கற்பக விருட்சத்தைப் போல் நொடியில் நல்கும். துலங்கும் ஆன்ம விசாரணையைப் பெற்ற அறியாமை கெட்டு நல்லறிவு தோன்றப் பெற்றோரை, வச்சிர கவசம் தரித்தவர்களை அம்புகள் எதுவும் செய்யாதது போல் விருப்பு, வெறுப்பு முதலியன தாக்க மாட்டா.

பிரம சூரியனை மறைத்து அறிவினை இருளச் செய்கின்ற அகம்பாவம் என்ற மேகமானது ஞானம் என்னும் சண்டமாருதத்தால் சின்ன பின்னமாகும். (சிதறிப் போகும்). மேலான பரமபதத்தை விரும்பினால் தன் மனத்தின் கண் உள்ள இச்சைகளை முன்னம் கெடுக்க வேண்டும். உரமான புவியை உழுதால் அன்றோ விளையும் தானிய லாபத்தை அடைய முடியும்?

## 5:2 புண்ணியன், பாவனன் (ஆகியோர்) கதை

### சுருக்கம்

முன் கதையில் எளிதில் சித்த உபசாந்தி வரப்பெற்றதைக் கூறினார். இவ் ஆன்மிக அனுபவம் கொஞ்சம் வருத்தத்திலும் வரும் என்பதை அறிவிக்கும் பொருட்டுப் பல பிறவிகளில் அனுபவம் உதித்த புண்ணிய பாவனர் கதையில் நிரூபிக்கிறார்.

### கதைக் கருத்து

மோகம் என்னும் நச்சுக் கொடியானது உண்டாகி வளர்தற்குக் காரணமான, துக்கம் என்னும் பாம்பானது இருந்து அரசாட்சி செய்வதற்கு ஒரு சூழலான, தேகம் முதலியவற்றை நான் என்று பார்க்கும் அஞ்ஞானமானது ஏகமாகிய ஆன்ம ஞானம் தோன்றினால் நசிக்கும்.

இந்த உலகம் உண்மையற்றது என்பதை எப்பொழுதும் கண்டு, நுண்மையாகப் பார்க்கின்றவர்கள், சனகராசனைப் போல நுண்ணறிவால் தனித்த மெய்ப் பொருளைப் பக்குவத்தில் அறிவார்கள். அஃது அன்றித் திரவியங்களினாலும் மானிடர்களாலும் கிரியைகளாலும் வானவர்களாலும் இந்த அறிவு வரமாட்டாது.

பிறப்புக்கு அஞ்சியவர்களுக்குத் தங்களது முயற்சியே கதியாகும். நாடோறும் இவன் நான் என்கின்ற சிறுமை உணர்வு கெடுமானால் களங்கம் இல்லாத உலகு அனைத்துமான விசால ஞானம் உண்டாகும். மனம் விசாரணையை மேன்மேலும் பொருந்த அது மேலான (ஆன்ம ஞானம்) காண்புற வரும்.

பொருள்கள் மேல் பற்றும் விடுதலும் மன இயற்கை ஆகும் பொழுது அதுவே மனத்தின் உருவம் ஆக, அதுவே மகாபந்தம் அன்றி வேறில்லை. முதிர்ந்த விருப்பு வெறுப்புகளால் வரும் ஆசையையும் துன்பத்தையும் நீக்கி நிறைந்த விருப்பு வெறுப்பையும் துடைத்துச் சலியாது (அசையாது) நிற்பாய்.

வீடு பற்று இரண்டையும் நீக்கின மேலவரிடத்து நீண்ட

வாசனைகள் இல்லாமல் - மயக்கம் இன்மை, துன்பம் இன்மை, வேண்டும் தொழில் இன்மை, நீக்கும் தொழில் இன்மை, தயக்கம் இன்மை, விகற்பம் இன்மை, அச்சம் இன்மை, துவட்சி (வாட்டம்) இன்மை, பகை இன்மை, குறைவொன்றும் இன்மை, கீழ்மை யில்லாமை, கொடுமை யில்லாமை, வஞ்சகமாய்ப் பேசல் இல்லாமை - ஆகிய குணங்கள் பொருந்தி யிருக்கும்.

வாசனை என்பது வலிமையுள்ள சிந்தனை என்னும் நூலால் பிணிப்புற்றுப் பிறவிக் கடலினிடையிற் பொருந்த மயக்கம் என்னும் மீன்களைப் பிடிக்கின்ற பெரியதாகிய வலையாகும்.

வாசனை என்கின்ற இந்த வலையை அறிவு என்னும் வாளால் ஈர்ந்து (அறுத்து) மோது சூறைச் காற்றால் சிதறுகின்ற மேகத்தைப் போல் சிந்தி மனமிறந்து இருப்பாய். மரத்தைக் கோடாலியால் பகுப்பது போலக் களங்கமான மனத்தைப் பரிசுத்த மனத்தால் தீது அற மாய்த்து மேலாம் பதத்தில் திடமாக இருப்பாய்.

(சுவானுபவம் உதித்தற்கு அஞ்ஞானம் முதலிய வாசனைகளை நீக்கும். உபாயம் அறிவித்ததாம்).

போதல் வருதலும் உறங்குதல் விழித்தலும் இருப்பது நிற்பதும் ஆகிய சகத்தொழில் (உலகத் தொழில்கள்) யாவும் பொய் என்று அழுத்தமாக உள் ஆசை தீர்வாய். திடமாக அலைகின்ற மன்மானது இயல்பான வாசனையினால் ஞானத்தின் பின் செல்லுதல், மாமிச வாசனையினால் சிங்கத்தைத் தொடர்கின்ற பூனைக்கு ஒப்பாகும்.

சிங்கத்தின் வீரத்தினால் கிடைத்த ஊனைத் தின்னுகிற பூனையைப் போலத் தொடர்பாகச் செல்லுகின்ற மனமும், அறிவினால் தோன்றிய புலனுகர் பொருள்களை (விடய வஸ்துகளை)ப் பிடித்துத் கொள்ளும். காணப்பட்டவற்றை (திரிசியத்தை) நீக்கினால் சித்தம் போய் முத்தியாகும் (மன நாசம் வந்து நிருவாணம் ஆகும்)

நான் இவை என்பனவாகிய இரண்டும் இல்லை என்று எண்ணி மகா மேருவைப் போல் உறுதியாக நிற்பாய். களங்கமில்லா வானம் போலத் தூய உளத்தனாக நன்மையான

மனத்தில் ஆன்மாவும் சகமுமாய் (இருக்கின்ற) காண்பானும் காண்படு பொருளுமாய இரண்டன் நடுவில் மேலாக விளங்கிய காட்சி (ஞானம்) என்கின்ற உனது ஆன்ம வடிவை நீ விடாமல் தெரிந்து கொள்வாய்.

பொருள் அதைத் துய்ப்பவன் ஆகிய இரண்டுக்கு நடுவே பிரகாசிக்கின்ற இன்பத்தை ஆராய்ந்து அந்த இரண்டையும் நீக்கி, அவ் இரண்டின் மத்தியிலே எப்போதும் பற்றில்லாமல் இருக்கின்ற அதைப் பிடித்து அதற்குள் இருப்பாய்..

ஆசையினால் கட்டப் பட்டவர்கள் உயிர் வாழ மாட்டார்கள். கயிற்றினால் கட்டப் பட்டவர்கள் உயிர் வாழ்வார்கள். ஆதலால் ஆசைக் கட்டைச் சங்கற்ப நாசத்தால் கெடுப்பாய். நான் என்று சொல்லப்பட்ட பாவனையை நான் என்று சொல்லப் படாத ஒரு சக்தியினால் கெடுத்துக் குற்றமற்ற ஆன்ம பாவனை செய்து ஏழு பிறப்பு இல்லாத அச்சமற்ற நிலையில் மோட்சத்தை அடைவாய்,

வசிட்டர் இவ்வாறு சொல்லலும், இராமன் தொடரும் செயல்களில் எழுகின்ற நான் என்னும் பாவனையில் வேட்கையைத் தீர்ப்பாய் என்ற சொன்ன உங்கள் சொற்கள் கருதுமிடத்து மிக ஆழமானவையாகத் தோன்றுகின்றன. நெடிய அகங்காரத்தை அழிப்பதை விட. அதன் ஏதுவான உடம்பை அழித்து விடலாம். என்று நினைக்கிறேன்.

நான் என்பதைக் கெடுத்தால் வேரோடு வெட்டப்பட்ட மரம் போல உடம்பும் நசிக்கும் என்று கூறினான்.

அதற்கு வசிட்டமா முனிவர் சொல்லுவார் : வள்ளலே, இராமா, அகங்கார வாசனைகளை நீக்கும் விதம் இரண்டு என்று கற்றோர் கூறுவர். அவை முறையே தேயம் (dheyaya), ஞேயம் (Jneya) என்று சொல்லப்படும்.

## தியாகம் இரு வகை

இப்பொழுது நாம், பொருள்களுக்காக வாழ்கிறோம். பொருள்கள் நமக்காக இருக்கின்றன. இப் பொருளை அல்லாமல் நான் என்பது இல்லை. நான் இல்லாமல் இப் பொருள்கள் இல்லை என்று நிச்சயமாக நினைக்கிறோம். இந்த நிச்சயத்தை நீக்கிப் புத்தியால் ஆராய்ந்து நாமும்

பொருள்களும் வேறு வேறு என்று -

நாமும் பொருள்களுக்கு உடையோம் அல்லோம், பொருளும் நம்முடையது அல்ல என்ற தெளிவடைந்து உள்ளம் குளிர்ந்து யாவும் விளையாட்டாகச் செய்கின்ற மனத்தினாலும் மயக்கமில்லாத உறுதியாலும் வாசனையை விடுதல் தான், அருள் பொழி மேகம் போன்ற இராமா, தேயம் என்று (dheyaya-tyaga or the renunciation of what is fit to be imagined) அறிவாய்.

வாசனைகளை அழித்து எல்லாவற்றையும் சமமான நோக்கால் பார்த்து நான் என்று சொல்லப்படாத உடம்பைத் தள்ளினால் இவ்வாறான வாசனை ஒழிப்பே களங்கமில்லாத ஞேயமாம் (Kneya - tyaga or the renunciation of the known). அகங்கார வடிவான வாசனையை முற்றும் விளையாட்டாக விட்டவர்கள் மேலோர்.

தேயத் தியாகம் என்ற (முதல்) தியாகத்தைச் செய்கின்ற தீரர்கள் சீவன் முத்தர்களாம். இரண்டாவது வகையானவர்கள், கிரியைகளோடு வேரற வாசனையைக் கெடுத்து உள் ஆறி (மனம் சாந்தமடைந்து) ஞேயத் தியாகம் செய்தவர்கள்- அவர்கள் விதேக முத்தர்களாம். வெற்றியுடைய இராமா, இவை இரண்டினுடைய விடுதியும் (தியாகமும்) ஒன்றுக்கு ஒன்று சமமானவையே.

தேயத் தியாகம் சீவன் முத்தருடையது; ஞேயத் தியாகம் விதேக முத்தருடையது. இவை வேதனைத் தளைகளி லிருந்து விடுவித்துப் பிரம்மத்தைச் சேரச் செய்து தேடரும் செல்வமான மோட்சத்தை அடைவிக்கும்.

சூழ்கின்ற இன்ப துன்பங்கள்-தன்னைத் தொடர்ந்தால் ஒரு காலத்தும் அவற்றில் ஆழ்தலோ மிதத்தலோ இல்லாத மனத்தினர் சீவன் முத்தர். ஊழினால் வந்து சேரும் களிப்பு, பயம் கோபம், வறுமை, அழுக்காறு, துன்பம் ஆகியவற்றைப் பாராத மனத்தினரே சீவன் முத்தர்.

சுழுத்தி அவத்தை (நிலைமை)யைப் போலச் செயல்களில் ஆறி நின்ற (சாந்தமான) முறையில் பக்குவமான மனத்தினால் நீங்காச் சாக்கிரம் (தீர்க்க சொப்பனம்) பழகுபவர்கள் கலை நிறைந்த முழுமதி போல மேலோர் விரும்ப முழுதும்

பிரிவில்லாதவர்களே சீவன் முத்தர்கள் என்ற சொல்லத் தகுந்தவர்கள்.

புறப் பொருள்களின் மேலுள்ள கவர்ச்சி ஒழிந்து, உள்ளார்ந்த விருப்பு இருக்குமானால் அது திருஷ்ணா (trsna : thirst) எனப்படும். பொருள்களின் மேல் உள்ள, அகத்தே உள்ள இச்சை யாவும் நீங்கினால் அது முத்த (mukta : free) திருஷ்ணா எனப்படும். இந்த இந்தப் பொருள் எனக்கு இது இதுவாகும் என்று உண்டாகிற எண்ணமே-பாவனையே திருஷ்ண ஆகும். விடுக்கக் கூடாத வலுவான இந்தப் பொன் விலங்கு துவக்கு அற (தொந்தம் அற)க் கெடுக்க வேண்டும.

உள்ளது இல்லாதது (சத்து, அசத்து) எனப்பட்ட எல்லாப் பாவனைகளிலும் ஆசையை மாற்றிக் குறைவிலாப் பேருளத்தனாக, பெத்தமும் முத்தமும் ஆம் ஆசை (பந்த இச்சையும் மோட்ச இச்சையும்) ஆகிய இன்ப துன்பங்களையும் முழுமையாகத் தள்ளித் தூய நல்ல கம்பீரமாகிய ஆன்ம ஞான சொரூபத்தில் இருப்பாயாக.

இராமா, நுரையும் அலையும் இன்றிய பெருங்கடல் போல் நீ அசைவற்றிருப்பாயாக வேறு ஒன்று சொல்வேன் கேள். குற்ற மற்ற ஆய்வாளர்களுக்கு (விசாரணையுள்ளார்க்கு) நான்கு வகை நிச்சயங்கள் உள்ளன.

## நான்கு வகை நிச்சயம்

அடி முதல் தலை மட்டுமான உடம்பே நான்; தாய் தந்தையர் என்னைப் பெற்றார்கள் என்பதோர் உறுதி (நிச்சயம் - certitide). இந்தக் கருத்து உண்மை அன்று ஆகவே இந்த நிச்சயம், கன்றிய பந்தத்தை உடையதாகும்.

'நான்' என்பது, தன்னை, மற்றப் பொருள்களுக்கு வேறாக, மேலானதாக நெல்லின் வாலினும் சூட்சுமமாக இருப்பது கண்டு கொண்டால் அது இரண்டாவது நிச்சயம். அதை அடைந்தால் பொருந்திய மோட்சம் உண்டாகும். அது உத்தமர்களுக்கு உள்ளதாகும்.

சகங்கள் அனைத்தும் எனது சொரூபம், யான் அழிவில்லாதவன் என்று ஐயம் இல்லாமற் காண்பது மூன்றாவது நிச்சயம். அது குறைவற்ற மோட்சமாம். கெடுதல்

அடைகின்ற உலகும் அறிவானும் அனைத்தும் பொய். 'நாம்' ஆகாயம் போல் எப்போதும் நீங்கிலம் என்பது நான்காம் நிச்சயம். ஈது ஒப்பற்ற மோட்சமாம்.

இவற்றுள் முதல்வகை நிச்சயம் திருஷ்ணாவை உண்டாக்கும் பந்தத்தோடு இணைப்பு உடையது. (பந்த திருஷ்ணி). மற்ற மூன்றும் தூய முத்த திருஷ்ணியை உடையன. குற்றமற்ற முத்தர்களிடத்தில் பிரகாசிக்கும். இந்த மூன்றுக்குள் எல்லாம் நான் என்று பொருந்திய ஒப்பற்ற நிச்சயத்தைப் பொருந்து வனாயின் பின்பு மனமானது இன்ப துன்பங்களை அடையாது.

(முதல் நிச்சயத்துக்குப் பந்தமும் மற்ற மூன்று நிச்சயங்களுக்கு முத்தியும் பயனாம்)

எல்லாம் ஒன்று என்பதால், சூனியம் பிரகிருதி, மாயை பிரமம், அறிவொளி (சிற்சோதி) ஞானம், குறைவில்லாத புருடன், ஆன்மா, ஈசன் (Lord) சிவன் எல்லாமும் பிரமம் என்றே சொல்லலாம். பிரம்ம சக்தி (potency) படைப்பு மேற்கொள்ளும் விளையாட்டினால் எண்ணற்ற வேற்றுமைகள் சகத்தில் உண்டாகின்றன.

இந்த ஒப்பற்ற சக்தி, ஒருமையாம் பிரமத்தில் இருந்து வளர்கின்றது. இராமா, உனது என்றும் பிறரது என்றும் இறந்தது என்றும் இருப்பதென்றும் சொல்லப்பட்ட பொருள்களில், தொழில்களில் எப்போதும் இன்ப துன்பங்கள் மனத்தில் தரிக்க வேண்டாம்.

எல்லாவற்றிலும் உயர்ந்து கெடாத மேல் நிலையில் (பரம பதத்தில்) மனம் ஊன்றினோர் இன்ப துன்பங்களால் பாதிக்கப்படாதவர்களாக மறுபிறப்புத் தளைகளுக்கு உள்ளாக மாட்டார்கள். சற்குணம் உள்ள நேயர்களிடத்தும் கெடுமதியுள்ள பகைவரிடத்தும் சமத்துவமாகித் தயை தாட்சணியம் உள்ளவர்கள் பிறப்பை அடையார்கள்.

தாழ்வு மேன்மை ஆகிய இரண்டையும் அவர்கள் நினையார்கள்; விருப்பு, வெறுப்பு அடையார்கள்; செயல் செயலின்மைகளை விட்டவர்கள், செறிந்த பிறவியிற் சேரார்கள். எழில் பெற (தெய்விகமாக விளங்கி) யார்க்கும் இனியவற்றை இனிமையாகப் பேசுகின்றவர்கள்

அழிபொருள்களாகப் பூதப் பொருள் எல்லாவற்றின் குணத்தை அறிந்தவர்கள் பிறப்பு அடையார்கள்.

ஆகவே இராமா, தேய வாசனையை நீ விட்டு, பூரணமாகத் தெளிந்த பார்வை மறையாமல், சீவன் முத்தியாகிய நிலைமையில் ஆன்ம சொரூபம் அடைந்து உலகத்தின் கண் எப்போதும் விளையாடுவாயாக. பொய்யான இச்சையை விட்டுப் பற்றுதலைக் கெடுத்து வாசனையை விட்டு, உள் வெளியாய் (உள்ளே சிதாகாசமாய்)ப் புறத்திலுள்ள ஆகாரங்களைச் செய்து என்றும் வேண்டியவாறு உலகில் விளையாடுவாயாக.

உலகத்தில் புறத்தொழில்களில் தான் ஆரம்பம் முடிவுகள் உண்டேயன்றித் தனித்த மனத்தில் அவை எவ்வளவும் இல்லாமல் புறம்பே வினைகள் செய்வதாக விளையாடுவாய். தேகம் நான் என்று பகுத்த, அகம்பாவம் கெட்டு மனம் தெளிந்து வானத்தைப் போல் களங்கம் இன்றிப் பலவாய அடையாளங்கள் (இயல்புகள்) இன்றி இராமா, உலகின் கண் விளையாடுக.

கடின ஆசாரம் இன்றி, ஆசாரங்களுக்கு எளிதாகப் பின் சென்று இதமான உதாரம் உள்ளவனாகப் பலவிதமாகிய அனைத்துப் பொருள்களுக்கும் ஆதாரத்தைப் பார்த்து வேண்டிய வாறு இராமா, உலகில் விளையாடுக நுண்ணறிவுடையனாக ஆசையின்மையை உள்ளே தேக்கிப் புறத்தே ஆசைத் தொழில்கள் பூண்டவன் போல அதனால் உள்ளே குளிர்ந்து புறத்தே வெப்பம் உள்ளவனாக அனவரதமும், இராமா, உல்கில் விளையாடுக.

இவன் சுற்றன், இவன் பகைவன் இவன் நான் என்கின்ற இந்த மிகு பொய்யை, இராமா, நீ சற்றும் நினையாதே பயனின்மையைப் பற்றிக் கொள்ளும் அற்ப மனத்தருக்கு அந்த நினைப்பு உரியது.

"அறிந்தோர்க்குச் சகம் முழுதும் அகலாச் சுற்றம்". அளவற்ற பிறவி மயக்கத்தால் நீ பகை என்றும் நீ உறவு என்றும் சொல்லுவார்கள். கணந்தோறும் கவிப்புற்ற மயக்கம் இது. மெய்யான காட்சியினால் (எதார்த்த திருஷ்டியினால்) உலகெலாம் (ஒரே சமயத்தில்) பகையுமாம் உறவுமாம்.

இந்த அனுபவம் விளங்கும் பொருட்டுப் பண்டு இயைந்த கதை ஒன்று கேட்பாயாக.

**கதை**

கங்கைக் கரையில், தீர்க்க தபன் (of long continued tapas) என்ற இருடி (ரிஷி)யின் மைந்தர் புண்ணியன் (virtue) பாவனன் (purity) என்ற இருவர் இருந்தனர். அவர்கள் இணையற்ற மேரு மலையில் வாழ்ந்தார்கள். அரிய தவத்தினராயும் நான்கு வேதங்களிலும் வல்லுநராயும் இருந்தார்கள். தங்கள் தந்தையுடன் கங்கைக் கரையில் தவம் இயற்றும் காலத்தில் பயன் கருதாத் தவ வன்மையால் காலம் முதிர, புண்ணியன் என்ற பெயருள்ள புண்ணியன் போதம் (ஞானம்) பெற்றான்.

அவன் தம்பியாகிய பாவனன் அரையளவு ஞானம் பெற்றான். கதிரவன் உதிக்கு முன் அருணன் தோன்றச் செந்தாமரைப் பூவானது சதங்கை வாய் இருப்பது போல் அதிக அறியாமையும் உண்மை ஞானம் இன்மையும் காரணமாக ஊசலைப் போலத் துவண்டு நின்றான்.

அவன் தந்தை தீர்க்க தவன் புலனுகர் பொருள்களில் உள்ள ஆசைகள் யாவையும் விடுத்தான்.

காலமே காரணமாக, குடும்ப வாழ்வில் ஆசையை விட்டு, மிகு தொழில்களாம் அகங்காரப் பறவைகளுக்கு இடமாகும். கூடு போன்ற உடம்பினைக் கங்கைக் கரையில் இருக்கும் மலையினிடத்தில், சுமை ஒன்றைச் சுமப்பவன் குறித்த எல்லையில் அதனைக் கொண்டு போய்ப் போடுவது போல (உடம்பை) விட்டு ஆசை பொருந்தின பற்றுகள் ஒன்றுமின்றிப் பூவின் வாசனை ஆகாயத்தைப் பொருந்துதல் போல் பிரமானந்தத்தை அடைந்தான் தீர்க்க தவன்.

செயலற்றதும் உலகின் வேதனையற்றதும் பழமையான ஞானோதயத்து இடமாகியும் இருக்கின்ற ஆன்ம மெய்ம்மையை (சொரூபத்தை) அடைந்த சாத்துவிக முனி உடல் ஒழித்ததும் தாமரைப் பூவிலிருந்து நீங்குகின்ற வண்டைப் போல அவன் மனைவி உடல் ஒழித்தாள்.

கண்களை ஒத்த தாய் தந்தை இறப்பக் கண்டு மேற் செய்ய வேண்டிய கருமங்களை விதிப்படி செய்யும் பொருட்டுப் புண்ணியன் முயற்சி செய்தான். ஆனால்

பாவனனோ வருத்தம் என்னும் கடலில் அழுந்தி மயக்கம் அடைந்தான்.

தம்பி பாவனன் "என்னைப் பெற்ற தாயே தாயே" என்பான். "ஐயா ஐயா" என்பான். "ஐயோ ஐயோ" என்பான். ஆற்ற முடியாமல், எரியை மிதித்தவன் போல வனங்களெல்லாம் ஓடுவான். தனக்கு எதிரில் இருக்கின்ற தமையனைப் பார்த்துத் தெளியான். மிகவும் தளர்வுற்றான். தளர்ச்சியில்லாத் தமையன் 'மின்னலை ஒத்த உடம்புக்கு இறப்பு இயல்பே' என்று வேறு ஒன்றும் நினையாமல் கருமத்தை விதிப்படி செய்தான்.

மறைவழிப் படி கரும நிறைவேற்றிய பின், துன்பத்தினால் வாய் மூடாமல் அழுகின்ற தம்பியை வந்து சார்ந்து பூரண ஞானத்தை உடைய புண்ணியனானவன் பாவனனைப் பார்த்து, "மனத்தை வருத்துகின்ற துன்பத்தைக். குழந்தாய் நீ ஏன் நீக்கவில்லை? பொறுமை மிக்க நின் தந்தை நின் தாயோடும் பொருந்தியிருக்கிற இடத்தின் (பதத்தின்) சிறப்பைக் கேட்பாய். அது குறைவு நிறைவே இலது. எப்போதும் தனதாய்த், தன் மயமாய்க் குற்றமற்ற வீடு (மோட்சம்) என்னும் பெயர் உடையது.

அனைவருக்கும் அடையத் தக்க இடம் அப் பதமே ஆகும். அதுவே அறிஞர்க்கு மெய்யுருவம் (தத்துவ சொரூபம்) ஆக இருக்கும். தன்னை விட்டு நீங்காத அப் பரம பதத்தில் வாழும் தந்தைதனைப் பார்த்துத் தம்பி நீ தளருவது தகவோ (நியாயமோ)? ஆற்றின் நீரோட்டத்துக்கு அடையும் பள்ளத்தின் தொகுதி போல் பிறவிகள் தோறும் தொடர்பாய் நீங்கின, பெற்ற உனது தாய் தந்தைக்குக் கணக்கும் உண்டோ? மனைவி மக்கள் முதலிய உறவினர்க்கு ஓர் அளவும் உண்டோ?

பருவங்கள் தோறும் பெரிய வனத்தில் காய்க்கின்ற கனிகள் போலப் பிறவிகள் தோறும் பரந்த சுற்றத்தை நினைக்குங்கால் மரணம் அடைந்த அவர்களுக்கு இரங்க வேண்டுமானால் கற்ப காலம் மட்டும் கதறினாலும் ஒரு கரை உண்டாமோ? உருவம் இல்லாத அறியாமை என்னும் கானல் திடலில் தொடர்ந்து வராநின்ற வாசனை என்னும் வேனிற்காலத்தில் சுழலுகின்ற வெவ்விய கானல் வெள்ள நீரானது, சுக துக்கம் என்னும் அலைகளை யடித்துக் கொண்டு வரம்போ, தடையோ யின்றிப் புரளும்.

மனைவி முதலிய உறவும் பகை நேயமும் கோபம் ஆசையும் இழிவு உயர்வு முதலியவையே வடிவாய் எழுந்த ஞாலம் (சகம்) ஆனது பொருந்திய தனது பெயர் மாத்திரத்தால் பொலிந்து விரிகின்றதல்லால் வேறு ஒன்றால் உண்டாமோ? நல்ல உறவு என்று நினைத்தால் நல்லுறவே ஆவார்கள். நண்ணார் (பகைவர்) ஆகப் பாவித்தால் நண்ணார் ஆவர். கொல்லுகின்ற நஞ்சும் பிழைக்க வைக்கும் அமுதும் ஆகியவற்றின் குணங்கள் தங்கள் முடிவுகளைத் தந்துவிடல் போல் கட்டு உண்டாக்கும் எண்ணங்கள் (பாவனா பந்தம் : bondage giving thoughts) முற்றாக ஒரு முறை அழிந்து விட்டால் அவை தாம் மீண்டு ஒரு போதும் வருவதில்லை.

ஒன்றிலே (ஆன்மாவில்) தோன்றி அனைத்து வடிவங்களும் ஆகிய உணர்வுக்கு (அறிவுக்கு)ப் பகை என்றும் உறவு என்றும் உரைப்பது எப்படி? இல்லாமல் ஒழிகின்ற தசை உதிரம் தோல்களால் கட்டியிருக்கின்ற எலும்புப் பஞ்சரத்தில் (எலும்புக் கூடான சரீரத்தில்) இருக்கின்ற நாம் யார் என்ற விசாரிக்கின் இருந்தவன் நீயே, உன் மனத்தால் சிந்தித்துப் பார்ப்பாய். மாசற்ற பரம விழி (பிரம திருஷ்டி) யினது நெறியால் நோக்கின் அழிகின்ற துன்பமுள்ள நீ என்பதும் இல்லை நான் என்பதும் இல்லை. புண்ணியன் என்றும் பாவனன் என்றும் சொல்லப்பட்ட பெயரும் போய் ஞானம் தோன்றும்.

## பிறவி மிகப் பல

தீவுகள் தோறும் (நீ) பிறந்து சென்ற சென்மம் எண்ண முடியாது. இந்தப் பெரிய நாவலந் தீவில் முன்னம் குயிலாகப் பிறந்தாய். விலங்குகளாக மேகங்கள் மலைகள் மரங்கள் ஊர்வன பறவையினங்களுமாகிய இவற்றில் போகிய பிறப்புத் தொகுதி சொல்ல முடியாது. பொருந்திய அவற்றில் உன் உறவாக இருந்து இறந்து போனவர்களுக்கெல்லாம் நீ விசனப்படாதது என்ன? அது மட்டும் தானோ? இன்னும் அளவற்ற தேசங்களில் பிறந்த பிறவிகளைச் சொல்லக் கேட்பாயாக.

கோசலம் தெசர்ணவம் பௌண்டரம் குச்சரம் துழாரம் கோகனம் போசலம் ஏகையம் சாளுவம் ஆகிய தேசங்களில் பூபதியாக, குரங்காக, புழுவாக, மானாக, நீர்க் காக்கையாக, பறவையாக, பாம்பாக, கழுதையாக, அளவற்ற பிறவிகளை

நீ வாசனைகளினால் பிறந்த போதில் உண்டாகிய உன் உறவினர்க்கு இரங்காத தன்மை என்னே!

அளவற்ற பிறவிகள் தோறும் பிறந்தோர்க்கு எல்லாம் அன்னை தந்தையை எண்ணுமிடத்தில் அகன்ற காட்டில் நெருங்கிய மரங்கள் தருகின்ற சருகை எண்ணினதுக்கு ஒப்பாகும். துன்பம் அடைய ஞாயம் இல்லை கேள், குழந்தாய்.

தளர்வில்லாமல் பாவமும் அபாவமும் இல்லாமல் பிறப்பு இறப்பு இல்லாத உன் ஆன்ம சொரூபத்தை (Atmic Reality)த் தடையின்றி மனம் பொருந்தப் பார்ப்பாய். துன்பத்தை விட்டு அறியாமையை நீக்கி அறியில் உள்ள படியாக உனது ஆன்ம சொரூபத்தைக் காணலாம்.

## இன்பம் எய்துக

உன் உருவை (ஆன்ம சொரூபத்தை) நீ காணும் ஞானக் கண்ணில் (மெய்யறிவுப் பார்வையில்) பலவான இச்சை என்னும் படலம் உண்டாகும். அதை நீக்கி, உள்ளக் கமலத்துள், உள் மனத்தால் உன்னால் உனது சொரூபத்தை இப்படிப் பட்டது என்று பார்த்து, மயக்கமெல்லாம் இறையளவும் (சிறிதளவும்) இல்லாமல் கெடுத்து இன்பம் (நிருவாண சுகம்) எய்தி நிற்பாய், தம்பியே!.

- என்று தமையன் சொன்னான் என்று, பெருந்தகையாம் இராமனுக்கு வசிட்ட முனி சொன்னார்.

# 5:3 மாவலி கதை*

## முன்னுரை

பார்க்கப் படும் பொருள்களினின்று மனத்தை மீட்டுக் கொள்வதனால் பார்ப்போன் தன் உண்மையை - எல்லாம் தன்மயமாய் விளங்கும் அனுபவத்தை - கூறிப் பயன் நோக்காப் புண்ணியத்தால் (நிட்காம வினையால்) பொருள் நுகர் இன்பமும் (விடயானந்தம்- sensual bliss) பிரமானந்தத்திற்கு

* The story of the Great Bali.

வழியாகிறது என்பதை அறிவிக்கும் நிமித்தம் மாவலி கதையை எடுத்துக் கூறுகிறார்.

## கருத்து

தன் தமையன் புண்ணியன் போதிக்க ஞானம் பொலிந்த பாவனனின் உள்ளமானது வைகறைப் பொழுதைக் கண்ட ஞாலம் (சகம்) போல விளங்கித் தோன்றியது. திட ஞானம் உடைய இருவரும் (அண்ணன் தம்பியர்) சித்தர்களாய் விவேக ஞானத்தினது எண்ணிய கரையை-ஆன்ம ஞானத்தை - அடைந்து, (முன் சொல்லிய) வனத்தில் வசித்தார்கள்.

தங்களுக்கு வேண்டிய காலம் எல்லாம் விநோதமாக விளையாடி வெகு காலம் செல்ல உடம்பை ஒழித்த வீடு (விதேக முத்தி) அடைந்து தூண்டும் நெய்யும் திரியும் இல்லாத சுடர்கள் போல் உப சாந்தம் அடைந்தார்கள். மரணம் அடைகின்ற சீவர்கள் அனைவர்க்கும் மரபு, இந்த மரபு போலவாகும்.

(இவ்விருவரும் சீவன் முத்தராயிருந்து விதேக முத்தி அடைந்தனர் என்பதாம்)

அளவற்ற பிறப்பு அடைந்தவர்களுக்கு அகிலமும் உறவாயிருக்கும் என்றால் பகைத்தலும் விரும்புதலும் வேண்டுவது என்ன? ஆகையினால் மிகுந்த ஆசையின் பாரத்தைப் பெருக வளர்க்கக் கூடாது. மனத்தில் ஆசையை வளர்த்தால் சிந்தை என்னும் அக்கினிக்கு ஆசையானது விறகாகும்.

தீர மிக்க இராமா, ஆசை என்னும் விறகு மாண்டால் சிந்தை என்னும் அக்கினி மாளும். இது உண்மையாகும். தேயத் தியாகமாகிய நெடுந்தேர் ஏறி யாவரும் போற்றும் உதாரமான (கருணைப்) பார்வையினால்-ஆன்மிகக் கண்ணால்- வேட்கை யால் வாடும் அற்பமான ஞாலத்தை (சகத்தை) நோக்கிக் குறைவில்லாமல் இருப்பாய்.

இராமா, அழுக்கில்லாத, ஒரு மயக்கமும் இல்லாததாக, நோய்கள் அனைத்தும் இல்லாததாக இருக்கின்ற மெய்யதான பிரமமான நிலை நிச்சயமாகும். ஐயம் இன்றி இந்த நிலை அடைந்தால் அறிவிலரேனும் மயக்கத்தை அடையார்கள். இவ்வாறு வாழக் கடவாய்.

(விடய இச்சையின் நீக்கத்தில் பிரம நிச்சயம் உதிக்கும் என்பதாம்)

நல்ல அறிவும் நல்ல விவேகமும் என்கின்ற இரண்டு நட்பினால் அல்லல் தீர்ந்திடும். (குருவான) ஒருவரை அடைந்தாலும் பொருந்துகின்ற தனது திண்மையினால் அன்றிச் சொல்லப்படும் பல பொருள்கள் உறவுகளையும் துடக்கு (தொடர்பு) அறக் கெடுத்தாலல்லாமல் துயர் எல்லாம் போக மாட்டா.

வைராக்கியத்தாலும் ஞான சாத்திரங்களினாலும் பெருந்தன்மை முதலிய உயர் குணங்களாலும் அரிதின் முயன்று மனத்தை ஆன்ம வாழ்வு அடையச் செய்தால் துயர்கள் நீங்கும். மூன்று உலகங்களில் உண்டான செல்வங்களும் தொகுத்து இலாபத்தைக் கொடுத்தாலும் கைவல்லியத்தை (விடுதலையை) அடைகின்ற மனத்துக்கு ஒப்பு என்று சொல்ல மாட்டார்கள்.

தன் தாளில் இருக்கின்ற செருப்பானது உலகெலாம் தோலால் மூடும் தன்மையைப் போல் மனம் நிறையுமானால் (பூரணமானால்) வையமானது அமுதமாக நிறையும். ஆசையின் மையால் நிறைந்த மனமானது ஆசையின் மூழ்காது. எப்போதும் ஆசையினால் நிறைந்த மனமானது எப்போதும் குறை தீராது.

அகத்திய முனிவர் கடல் நீரை எல்லாம் எளிதாக உறிஞ்சிக் குடித்தது போல், ஆசை யற்ற மனத்தோடு எளிதாகத் தூய எண்ணங்கள் தோன்றும்; ஒப்பிட்டால் பூரண சந்திரனும் அவ்வளவு பிரகாசமானது அன்று; தாமரை மலர் மேல் இருக்கும் சுடர் ஒளி முகம் கொண்ட இலக்குமியாலும் இத் தகு ஆசையற்ற மனம் போல் ஒரு வரத்தைத் தன் அடியார்க்குத் தர முடியாது.

மதியை மறைக்கும் மேகம் போலவும் வெண்மையான இடத்தில் தீற்றிய சுண்ணச் சாந்தைக் கெடுக்கும் மை போலவும், நல்ல நெஞ்சைக் கெடுக்கும் ஆசைப் பேயானது அழகை அழிக்கும். அடைந்த ஆசைகள் அனைத்தையும் கெடுத்து வலிய பிறப்பு அச்சம் போக்கி, முதிர்ந்த மனத்தின் ஆசைக் கட்டானது நாசமானால் மோட்சம் வேறு உளதோ?

## மாவலி கதை

இத் தன்மை கூடாவிடில், இராகவா, மாவலி என்ன, நன்மையினால் புத்தியினால் ஞானத்தையே அடைவாய். அத் தன்மையதே நன்மை என்று சொல்லவும் அப்படிப் பட்டது எது என்று மாமுனியைப் பார்த்து இராமனும் கேட்டான்.

இப்படிக் கேட்ட வள்ளல் இராமனுக்கு அருந்தவ வசிட்டர் விடை கூறுவார்.

தனது தோள்களால் உலகெலாம் நடுங்கும் படி வென்றவன், ஈசுவரன் விஷ்ணு முதலிய யாவரும் தாழும்படி பெருமை யுள்ளவன், பாதாள உலகத்தை அரசு செய்து வந்த இணையற்ற (அசுர) ராசன்.

மாவலி (மகாபலிச் சக்கரவர்த்தி) என்னும் பெயர் உடையவன். மேன்மையான விரோசனனுடைய புத்திரன், வலிமையுள்ள பத்துக் கோடி வருடம் அரசனாக இருந்தவன். காவல் மிக்கதும், மகாமேருவின் முடியில் இருக்கிற இரத்தினங்களால் பதித்த, மேவுதற்கு அரிய பிரகாசம் பொருந்திய பலகணிகளை உடைய மேல் வீடு அடைந்தான்.

## அரசை வெறுத்தல்

ஒரு நாள் தனியே இருந்தவன், பின் வருமாறு எண்ணினான். மிகுந்த போகங்களை வெறுத்துச் சம்சாரத்தை நினைத்தான்: "சமானமற்ற மூன்று உலகங்களிலும் உள்ள செல்வங்களை வெகு காலமாய் அனுபவிக்கக் கொடுக்கின்ற நமது அரசாங்கத்தால் என்ன பயன்?"

அடைந்த போதினில் இனியவாய் எவ்விடத்தினாலும் அற்ப நேரத்தில் நீங்குகின்ற இச் செல்வத்தினது இன்பத்தைச் சொல்லுமிடத்தில் அடையப் பார்க்கின்ற சுகமும் நேற்றுப் போல் இன்றைக்கும் செய்ததைச் செய்வதே அல்லாமல் வேறு செயல்களைப் பார்த்திலம்.

## உண்டதே உண்டு

உண்ட இன்பமே மீளவும் உண்ணப் படுகின்றது; ஒரு நாள் கண்ட காட்சியே மீளவும் காணப்படுகிறது.

மகிழ்ச்சியாகக் கொண்ட அலங்காரமே மீளவும் தரிக்கப் படுகின்றது; என்றால் மேன்மையானவர்கள் வெறுத்து வெட்கப் படாமற் போவார்களோ?

புசிக்கின்ற அளவும் இன்பம் என்று சொல்லுவதையே திரும்பத் திரும்பப் புசித்து அறிவு திருந்தாத புன் சிறுவர்களைப் போலத் செயலறியாது வருத்தப் படுகிறோம். நாள், பக்கம் (பட்சம்), மாதம், ஆண்டு, யுகங்கள் முன் பொருந்தி வந்ததே யன்றிப் புதிதாக வேறு ஒன்றும் வாராது.

## நித்தியம் எது?

செய்யத் தக்கன (கடமை) எல்லாமும் செய்தும் இச் செய்கையால் என் வாழ்வை எவ்வாறு (உய்வித்து) உயர்த்தி இருக்கின்றன? செயலற்ற நிலையை அடைந்து ஐயமில்லாத அந்த ஒரு பொருளானது ஐயப்பாடற நான் அடைவது எதனால்? மயக்கமுள்ள (விடய) போகத்திலிருந்து விடுபட்டு அப் பொருளானது மேலே வரும் வழி எது?

(எல்லாம் நிலையற்ற பொருள் என்று அறிந்து நிலையான பொருளை விசாரிக்கத் தொடங்கினதாம்.

அழிவற்றதாகியும் பொருள்களுக்கு (விடயங்களுக்கு) அயலாகியும் இருக்கின்ற அப் பொருளைச் சேர்கின்ற வழி எது என்று சிந்திக்கும் பொருட்டு மனத்தோடு ஒன்றை நினைந்து கண்கள் மலரப் புருவத்தை நெறித்து வியந்து ஒரு நொடியில் கண்டு கொண்டோம் என்று சொல்லத் தொடங்கினான்.

## மனனம்

தனது உள்ளத்திற் பொருந்த நினைத்ததைத் தானே சொல்லினன். எல்லாம் உணர்ந்த முதன்மையான என் அரிய பிதாவாகிய விரோசனனை முன்னம் இங்கு யான் கேட்டேன். இப்படியே அன்னவன் சொன்னான் என்று மாவலி யானவன் இவற்றை எல்லாம் சொல்லுவான் :

"என் தந்தையே, துன்பமும் இன்பமும் என்ற சொல்லப் படுவனவாகிய அனைத்தின் மயக்கங்கள் . அனைத்தும் மடிந்ததோர் இடம் எது? மனத்தின் வெய்ய மோகம் தீர்

இடம் எது? வேட்கைகள் எல்லாம் பற்றற விடுபட்ட இடம் யாது? கருணையால் உரைப்பாயாக.

ஆசையற்றதாய், இணைப்புகள் அனைத்தும் விடுபடும் (அமைதியான) இடம் எது? மிகுந்த பேரானந்த அழகுடைய தாய் விரிந்திருக்கின்ற இடம் எது? பராபரத்தைத் தெரிந்து உணர்ந்திருக்கின்ற நீங்கள் என் மனத்தை அறுத்துக் கொண்டிருக்கின்ற துன்பத்தை விடுத்து இணைப்புகள் எல்லாம் நீங்குதற்குச் சொல்லுக என்று கேட்டேன்.

## பிரமம் - அரசு - அமைச்சு

எந்தை அப்பொழுது உரை செய்வான் :

மகனே, கேள். முடிவில்லாததாக, மிகவும் பரந்ததாக மட்டின்றி அகன்றதாக, அழகுள்ளதாக இருக்கின்ற ஒரு தேசம் உண்டு. அண்டத்தின் கூட்டங்கள் வந்து உதித்து விளங்கி இறப்பதற்கு அதுவே இடமாக விளங்கும்.

அப்படிப் பட்ட தேசத்தில் ஐம்பெரும் பூதமும் இல்லை, நீண்ட மலைகளும் இல்லை. நீண்ட வனமும் இல்லை. நீண்ட தீர்த்தங்கள் இல்லை. தூய தேவர்கள் முதலாகிய தொல்லுயிர்கள் இல்லை. பெருஞ்சுடர் என்னும் அரசன் ஒருவனே இருக்கிறான்.

முழுதும் காண்பவன் (சர்வஞ்ஞன்) முழுதும் செறிபவன், முதல்வன் (சர்வ காரணன்) குற்றமற்ற சாந்தன், நிறைந்து மௌனமாயிருக்கிற பண்புடையோன், தவறு இல்லாத இவ் அரசனால் அமைத்த மந்திரியின் வசமாகத் தொழில்கள் யாவற்றையும் தானே நடத்துவிப்பான்.

பொருந்திய மந்திரி நினைத்தால் நிமிடத்தில் இல்லது உள்ளதாகும். உள்ளதும் இல்லதாகும். இந்த மந்திரிக்கு ஒன்றாகிலும் அனுபவிக்க வல்லமை இல்லை. ஒன்றையும் அறிந்திலன். அரசனை விடாமல் நடக்கின்ற குணத்தினால் யாவற்றையும் செய்வான்.

(பிரமத்தை உருவகப் படுத்தித் தொகுத்துச் சொன்னது என்பதாம்.)

இந்த மந்திரியானவன் இராசாவின் சந்நிதியில்

யாவற்றையும் நடத்த அந்த மன்னனானவன் எப்போதும் தனிமையாகவே இருப்பான். என்று அருளிச் செய்த என் தந்தையை நான் மகிழ்ந்து அறிவினால் முன் சொல்லப்பட்ட விதங்கள் அனைத்தையும் புகழ்ந்து வினவினேன்.

மிக்க பரப்புடையதாக ஆதியும் வியாதியும் இல்லாது (without mental disease) இருக்கின்ற நிறை ஒளியான அத் தேசம் எப்படிப்பட்டது அதை அடைகின்ற திறவி (காரணம் : means) எது? அது எதனால் கிடைக்கும்? அத் தேசத்து இறவில்லாத அம் மன்னன் யார்? மந்திரி எவன்?

(இத் தேசம் முதலியவற்றை வெல்லப் பகுத்துச் சொல்லும் படி கேட்டது என்பதாம்)

புவனம் யாவற்றையும் விளையாட்டாக என் அடர் புயத்தால் அவ் வரசன் அமைச்சனோடும் வெல்ல முடியாமல் வலிமையுண்டாயிருக்கின்றவன் யார்? சொல்லி யருள்க? என்று நான் கேட்டேன். அதற்கு என் தந்தை சொல்வார் :

வேகத்தை உடைய மிகுந்த வலிமை பொருந்திய மந்திரியினது கடுமையை யார் தான் தாண்ட வல்லவர்?

தேவரும், அசுரரும் அளவற்ற கோடிகள் ஒன்றாய்க் கூடி மேவினாலும் வென்றோரல்லர். சூலம் சக்கரம் முதலாகச் சொல்லப்பட்ட பொருந்துதற்கு அரிய ஆயுதங்கள் அனைத்தையும் அவன் மேல் விடுத்தால் மிகவும் அரிதான கல்லில் மோதிய பூவைப் போல நுனியானது கெடும்.

கெடுதற்கு அரிய பலம் உள்ள அவ் அமைச்சன் அவ் அரசனால் எளிதாக வென்றால் அவனுக்கு வணங்குவான். இல்லாவிடில் குளிர்ந்த மகா மேருவை அசைத்தாலும் இவனை அசைக்கக் கூடாததாம். ஒளி பொருந்திய அனுபவ யுக்தியை உடைய அறிவினால் அல்லாமல் ஒருங்கு வெல்லப்படான்.

அனுபவ யுக்தியை உடைய அறிவினால் அல்லாமல் அந்த அமைச்சனைப் பொருந்தினால் வேக நாகம் போல் எரித்திடுவான். அரசனோடும் மந்திரியானவன் தனியரசாட்சி செய்கின்ற அந்தத் தேசமும் அதிலுள்ள எல்லாமும் உன் துன்பமறும் பொருட்டுக் கேட்பாயாக என்று பிரித்து இதைச் சொன்னான்.

முன்னமே யாம் சொல்லிய தேயமானது ஓர் முடிவற்ற

மோட்சமாகும். மன்னன் என்ற சொல்லியது மாசிலாமணி என விளங்கும், தன்னில் வேறுபடாத ஆத்தும தத்துவமே ஆகும். அப்படிப்பட்ட அரசன் படைத்த அமைச்சன் மனம் ஆகும்.

புலனுகர் பொருள்கள் (விடயங்கள்) அனைத்தையும் ஒருமிக்கக் கெடுத்து, நல்ல வயிராக்கியத்தை உடைமையாகக் கொள்வதே மேலான யுத்தி என்ற சொன்னோம். தடையற்ற மனமானது நிராசையால் வெல்லப்பட்ட தன்மையானது போரியல் மத யானையைத் தொழுவத்துள் அகப்படுத்த தன்மையாம்.

## நாற் கூறு

ஞான நூலைக் கற்றறியாதவர்கள் மனத்தை நாற் கூறு எனப் பிரித்து, அடைந்த புலனுகர் போகங்களில் இரண்டு பங்கும், ஞான சாத்திர வழியில் ஒரு பங்கும், அனுக்கிரகம் பெற்ற ஆசிரியர் ஆராதனையில் ஒரு பங்கும் ஆகச் செலுத்தினால் நிறைந்த அஞ்ஞான இருள் போய் விவேகமாம் சுடர் வந்து தோன்றும்.

சிறிது அறிந்தவர்கள் மனத்தை நாற்கூறு செய்து, பொறி வசத்து (செல்லுகின்ற போகங்களில்) ஒரு பங்கும், ஆசிரியர் ஆராதனையில், இரண்டு பங்கும், அறிவு நூற் பொருளை (ஞான சத்திரங்களை) மனனம் செய்வதில் ஒரு பங்கும் ஆகச் செய்தால், செவ்வையாக விவேகத்தினால் ஒன்று (பரதத்துவம்) உணர் ஞானமே நிறையும்.

ஞானம் உற்றவர்கள் மனத்தை நான்கு பங்காக நிறுத்தி, அயிக்கிய (சொரூபத்தை) அறிவிக்கும் ஞான சாத்திரங்களிலும் நிராசையிலும் சுவானுபவத்திலும் மகானாகிய சற்குரு ஆராதனையின் வழியினும் செலுத்தில் குற்ற மற்றதா யிருக்கின்ற நல்ல மோட்சமானது எளிதாகவே வந்து இடைக்கும்.

(மனத்தை நாற்கூறு என்றது அதன் விருத்தியை - வேலையை).

மிகுந்த அறிவினாலும் விசாரணையினாலும் மெய்ம்மை உணர்வும் (ஆன்ம தரிசனமும்) நிராசையும் (பற்று விடுத்தலும்) நீ ஒருமிக்க எப்போதும் கைக் கொள்வாயாக. நிலையான

நிராசையால் தகுந்த ஆன்ம விசாரணையும் அந்த ஆன்ம விசாரணையால் ஒழிவில்லாத நிராசையும் ஒன்றுக்கு ஒன்று தொகுப்பாக நிறைந்த கடலும் தொடர்பான மேகமும் அமைவது போலாம்.

நாட்டின் இயல்பு (ஆசாரம்) தவறாமல் நட்டோர்க்கு உறவினர்க்கு உரித்தான நல்ல பொருள்கள் ஈட்டி, முன்பு அப் பொருளினால் இனிமையான (சாத்துவிக) குணத்தில் உயர்ந்தோரைச் சேர்ந்து அவர்களால் நிராசையினை (வயிராக்கியத்தை) அடைந்து அந்த வயிராக்கியத்தினால் ஆன்ம விசாரணையைச் செய்து, அந்த விசாரணையினால் உண்மை ஞானத்தைத் தெளிவுற்றால் முத்தி சித்திக்கும் (மோட்சம் உண்டாகும்).

## தெய்வ சகாயம்

இப்படி என்று முன்னமே என் தந்தை சொன்னார். தெய்வ சகாயத்தினால் ஒன்றையும் விடாமல் இப்பொழுது அறிந்தேன். உணர்வு (ஞானம்) பெற்றேன். போகத்தில் இருந்த இச்சையை இப்போது நீக்கி விராகம் (பற்றறுதி : நிராசை) என்கிற செல்வத்தினால் நிறைந்து அமைதி (உபசாந்தம்) என்கிற அமிர்தத்தினால் குளிர்ந்த சுகம் பெற்றேன்.

ஆகா, ஆகா! இவ் அனுபவத்தை நெடுநாள் அறியாதவனானேன். இப்போது அறிந்த மகிழ்ச்சியை என்ன என்று சொல்லுவேன். எல்லா நினைவுகளும் உபசாந்தமாய், இன்ப துன்பங்களில் நொந்தோர் வருந்தாமலிருக்கும் இடம் இது தான். ஆன்ம வாழ்வை அடைந்தோர் பொருந்துகின்ற பதம் இதுவே; உபசாந்த மாட்சிமை இது தான்.

இப்படி என்று சொல்லி, நானார் என் உருவம் எது என்று விசாரித்து நான் விளங்குமாறு, தன்னை உணர்ந்த நம் குருவாகிய சுக்கிராசாரியாரை வணங்கி விசாரித்து உண்மையை உன்னும் பொழுது அஞ்ஞானம் கெடும் என்று நினைக்க வேண்டும் என்று கண்களைக் குவித்துப் பூரண அன்பினால் தியானித்தான்.

## சுக்கிரன் வருகை

மெய்யான சச்சிதானந்த வெளியே சொரூபமாயிருக்கின்ற

சுக்கிராசாரியார் ஆன்ம வாழ்வை அடையாநின்ற மாவலி முன்னே தோன்ற அவ் அரசனும் மகிழ்ச்சியோடு வணங்கிக் கையில் நிறைந்த மணிகளாலும் உயர்மலர்களாலும் காலில் அருச்சித்து, (மாவலி) சொல்லுவான்,

'ஐயா, தேவரீர் அருளானது என்னைத் தூண்ட அடியேன் சொல்லுவதைக் கேட்டு அனுக்கிரகம் செய்க.

இவ் விடத்திலுள்ளது என்ன, அப்பால் இருக்கிறது என்ன? அளவு சொல்லப்பட்டது என்ன? நெருங்கிய அளவில்லாதது என்ன? பேசுகின்ற நானார்? கேட்கின்ற நீ யார்? இந்த நிலைபெற்ற இவ் வுலகம் யாது? மயக்கம் தீரும்படி உரைத் தருள்க என்று கேட்க அவன் கேட்ட எல்லாம் தெரியும்படி பகுத்து அந்த மாவலிக்குச் சுக்கிராசாரியார் நன்றாக அறிவித்தார்.

வளரும் கற்பக மரத்தை உடைய தேவ லோகத்துக்கு விரைவோடும் செல்ல வந்தேன். சுருங்கச் சொல்கிறேன். தோற்றமாக இங்கு உள்ளதும் ஞானமே. ஒருங்கு அப்புறத்து உள்ள இடங்களும் ஞானமே. எல்லை யுள்ளதும் ஞானமே. எல்லை யின்றி நெருங்குற்றதும் ஞானமே. சொல்லுகிற நானும் ஞானமே, கேட்கின்ற நீயும் ஞானமே. உலகம் யாவும் நிறை ஞானமே.

இந் நிலையே சுருக்கமாம். இச் சித்தாந்தத்தை மனத்தில் தரித்துக் கொண்டு இவ் வகைக்கு ஏற்ற அறிவினால் உனது சொரூபத்தை நீயே சிந்திப்பாய். திரிவின்றி (மாறாது) உணர்ந்து பார்ப்பாயாகில் அதனால் முடிவான பரமபதத்தை அடையக் கடவாய். ஒப்பற்ற அரிய தவத்தினரான எழுவரும் (சத்த ரிஷிகளும்) புதியதொரு தெய்வ காரியத்தில் (divine mission or into a new state) புகுந்தார். நாமும் போவோம்.

## எல்லாம் ஞானம்

இவ்வாறு சொல்லி வெள்ளி (சுக்கிரன்) சென்றார். அனைத்து அறிவுமாகிய சகத்தைப் பார்த்து நினைத்து, ஒவ்வும் ஒவ்வும், எனக்குச் சுக்கிராசாரியர் சொல்லியது. எல்லாம் உண்மையதே. முதன்மையான பூமியும் ஞானமே. உலக மூன்றும் ஞானமே. எனது சொரூபமும் ஞானமே.

நல்ல நான்கு திக்குகளும் ஞானமே. நாட்டுகின்ற கடமைகளும் ஞானமே.

காணப்படும் பொருளும் காட்சியும் ஒழிந்து வெறும் களங்கமற்ற வடிவாய் விளங்குகின்ற உதயமாய் எப்பொழுதும் பொலியும் பரமப் பொருளானேன். கட்டுப் படுத்துகின்ற விடயம் இல்லாத அறிவே வடிவாய். ஒரே காலத்தில் எங்கும் விரிக்கும் நிறைவாய், உபசாந்த வெளியாக (ஞான ஆகாசமாக) அறிவாயும் இருக்கிற மிகு பொருள் நான்.

ஓங்காநின்ற அறிவின் பொருளான ஓங்காரத்தை (ஓம்-பிரணவ சொரூபம்) மனத்தில் நினைந்து அறிதுயிலான தியான நிலையினனாக, தொடர் சங்கற்பங்களின்று விடுபட்டுச் செயல்கள் மூவகை ஆசைகள் (மனைவி-மக்கள்-சொத்து ஆகியன) ஐயம், மனனம், அறிவு, பொருள்கள் இவற்றைத் தாங்கும் ஆதாரம் (ஞாதா) ஆகிய அனைத்தும் நீங்கத் தனிச் சித்திரம் போல் நெடிது சமாதியில் இருந்தான்.

காற்றில்லாத இடத்துள்ள விளக்கு ஒளி போல், கலங்காதிருந்த மாவலி, விருப்பு, வெறுப்பு நீங்கி, மிகவும் பூரணமாய்ச் சிந்தை என்கின்ற களங்கம் இல்லாமல் தோன்றும் 'சத்' ஆகச் சுடர்விட்டுப் பிரகாசித்தான். வலிமையுள்ள மேகங்கள் இல்லாத இலை யுதிர் காலத்தில் (சரத் காலத்தில் - **autumnal season**) மிகவும் தெளிந்த ஆகாயம் போன்று இருந்தான்.

அவ் விடத்து அந்த மாவலி சமாதியிலிருக்க அவனது பணியில் இருப்போர் அவனைத் தேடி அரண்மனை மேன்மாடம் அடைந்தார்கள். அவன் அங்கே நிருவிகற்ப சமாதியில் இருப்பது கண்டார்கள். நெடு நேரம் கழித்துக் கண் விழித்துத் தன் அரச கடமைகளை மமதை தீர்ந்த சிந்தையனாய்,

பற்றற்ற மனத்தினால் யாவற்றையும் செய்தான். வளமிக்க காலத்தும் எதிர்மறையான காலத்தும் குற்றமற்ற கருத்தினால் ஒருமைப் பாடாக, சுக துக்கங்களில் எவ்வளவேனும் மிதவாமலும் அமிழாமலும் சமமான பார்வையுடன் தானாக விளங்கினான்.

ஒழியாமல் அவன் உள்ளத்து எழுந்த எண்ணங்கள் நல்லனவும் கெட்டனவும் பல கோடி உண்டாயின.

உள்ளனவும் இல்லனவுமான பொருள்கள் பல கோடி அவன் முன் வந்தன. அவன் அமைதியடைந்து யாவற்றையும் ஒரு மையத்தில் கட்டுப் படுத்தினான்.

அவ்வாறே நீயும், செய்வாய். பரத்திலும் இகத்திலும் உள்ள ஆசைகளில் பதிகின்ற மனத்தைத் தன் இதயாம்பரத்தில் (இதயத்துள்) வைப்பாய்.

எங்கே எங்கே மனம் ஓடிக் குழந்தைகளைப் போல இவ் வுலக இன்பங்களில் வீழ்ந்து அழுந்தும், அங்கே யங்கே நின்று (அதனை) எழுப்பி அகண்ட அறிவில் (பகுப்பற்ற அறிவில்) அடையச் செய்வாய். குறிப்பாக இவ்வாறு சாதித்து (சாதனை செய்து) மனம் என்னும் மதர்த்த யானையைக் கொடிய துன்பம் அறும்படி கட்டி விசாரணையினால் வீடு (மோட்சம்) அடைவாய்.

(மன இச்சையை நீக்கி ஞானம் பெறுவாய் என்பதாம்)



## 5:4 பிரகலாதன் கதை

### சுருக்கம்

முன் கதை இச்சைத் தியாக பலத்தினால் உண்டான விசாரத்தால் சட அரசாங்கம் சித் அரசாங்கம் ஆன அனுபவம் கூறியது.

இந்தக் கதை, ஈசுவரன் அருளாலும் உயர் ஆன்மிக நிலை அடையப் பெறலாம் என்ற கோட்பாட்டை விளக்குகிறது.

### கதை

இன்னும் ஒரு கதை கேட்பாய். பிரகலாதன் என்னும் பெயர் உடையவன் தனது உணர்வால் மெய்ஞ்ஞானத் தத்துவத்தை (சொரூபத்தை) அடைந்தான். அதைச் சொல்லுவோம்.

இரணியன் என்னும் பெயர் உடைய அசுரர் (தானவர்) வேந்தன் மரணம் அடைந்த அளவில் துன்ப மிகுந்த அவன் மைந்தன் மனம் நடுக்க முற்று இவை எண்ணினான்.

என் தந்தை முதலிய தானவர்கள் என் குலத்திலுள்ளவர்கள் அளவற்றவர்கள். பொன் மேருவும் அணு என்னும் படி உடல்நிலை பெரிதாக உடையவர்கள். தாமரை யிடமாகப் பிறந்த பிரமாவின் அதிகாரத்தை மாற்ற வல்லவர்கள். கொடுக்க வல்லவர்கள், தரிக்கும் வளம் பொருந்திய துளசிமாலை அணிந்த விஷ்ணு என்னும் கனலில் இலவம் பஞ்சு கெடுதல் போல் போய் ஒழிந்தார்கள்.

## உபாயம்

அவர்களுக்கு ஒப்பான பெரிய தானவர்கள் ஊழிப் பெருங்காற்றால் அழியும் சிறு சிறு மலைகளைப் போல இறந்தவர்கள், நெருங்கிய பொடிமணலைப் போல அளவில்லாதவர்கள். இக் காலம் அவனுக்கு (திருமாலுக்கு) அஞ்சாதார் ஒருவரும் இல்லை. எமக்குப் பகையாகிய மின்னார் நேமி (சக்கர)ப் படையானை (விஷ்ணுவை) வெல்வதற்கு உபாயம் இது ஒன்றே.

(முன்னுள்ள யாவும் நிலையற்றுப் போனது காரணமாக சித்த சுத்தி உண்டானதால் நிலையுதலை (நிச்சயத்தை) அடைய விவேகம் உதித்தது என்பதாம்).

எப்படி நினைத்தாலும் இதற்கு வேறாக மேலான நெறியில்லை. அலைகளை உடைய பாற்கடல் உறைவோன் (திருமால்) அடைக்கலம் அன்றி வேறு அடைக்கலம் இல்லை. மனமானது இந்தக் கணம் தொடங்கி நாராயணன் அடிகளைச் சேரக் கடவது. பத்தி உடையனாகத் தியானத்தால் நான் அவனே ஆகிப் பிரியாதிருக்கக் கடவன்.

நயந்த எல்லாமும் எளிதில் கொடுக்கின்ற "நாராயணாய நம" என்கின்ற உயர்ந்த திரு மந்திரமானது என் மனத்தில் ஆகாயத்தில் நிறையுங் காற்றைப் போல், விட்டு நீங்காது உள்ளே உறையுமாக. அரியைப் பேணிப் பூசிப்போர் இயைந்த அரி (விஷ்ணுவே) தாமாக வந்த ஆராதனையைச் செய்யின் (when they meditate upon themselves as Vishnu) முத்தி லாபமாம். அல்லாவிடின் இல்லை.

## உடல் திருமால் வடிவமே

அந்த நெறியால் விஷ்ணு சொரூபமே நானாய்,

*விஷ்ணுவை ஆராதனை செய்வன். இந்த உடல் மாதவன் (விஷ்ணு) வடிவாம். இந்த வடிவில் பிராணவாயுவின் வடிவமாய்க் கட்டுப் படுவோன் பராபரனாகிய இவ் விஷ்ணுவே. பிராண வாயுவின் முன் செல்லுதலால் இரண்டாம் விஷ்ணுவாகிப் புறம்பில் வசிப்பான்.*

*(மூர்த்தியைத் தியானிக்கு முறைமையை உணர்ந்ததாம்)*

*அவ்வாறான இந்த விஷ்ணுவை எல்லா உபசாரப் பொருள்களையும் தவறாத மனத்தினால் உளதாக்கி (கற்பித்து) எப்போதும் ஆராதனையைச் செய்வேன் என்று இவ்வாறு எண்ணிப் பூசா திரவியமான பாரங்கள் அனைத்தையும் எடுத்துத் தாங்குகிற மனத்தினால் சிவந்த இரத்தின பாத்திரம், தூபம் தீபம் வாசனைப் பொருள்கள் எல்லாம் நிறைத்து.*

*மணிப்பூண்களும் பீதாம்பரமும் வாடாத (சொன்ன :* golden) *மலர்களும் நல்ல அடிசில்களும் ஆகிய எண்ணிக்கை யற்ற பூசைப் பொருள்கள் அனைத்தையும் மனத்தினால் பாவித்து ஆராதனை செய்து தணிவில்லாத அன்பினால் முன்னே கொடுத்த புறம்பிலுள்ள திரண்ட திரவியங்களினால் பாம்பணைப் பள்ளி உடைய திருமாலை அகத்தில் பூசித்தது போலே அன்புற்றுப் புறத்தும் (தேவக் கிரகத்தும்) ஆராதனை செய்தான்.*

## அனைவரும் திருமால்

*அருச்சித்த படி அந்தக் கணம் தொடங்கி அகண்ட வடிவாகிய பரம் பொருளாம் - பிரமப் பொருளாம் - திருமாலின் அடிகளை ஆராதனை செய்தான். அவனை (பிரகலாதனைப் போல வாளினை உடைய அவுணர்களும் தீய குணம் விட்டு எல்லோரும் திருமாலுக்கு அடிமைத் திறம் பூண்டார்கள். பொருந்திய அரசனின் குணம் அல்லவா விரிந்த உயிர்களின் குணங்கள்!*

*(பிரகலாதன் முதலிய யாவரும் மூர்த்தியை உபாசித்து அம் மூர்த்தி வடிவம் ஆனார்கள் என்பதாம்)*

*திதி புத்திரர்களாகிய அவுணர்களும் அவர்க்கு அரசராகிய பிரகலாதனும் செங்கண் மால் (திருமால்) மேல் இருக்கின்ற சினம் தீர்ந்து புதிதாகிய பக்தியில் அடிமை புகுந்தார் என்று*

தேவேந்திரனும் தேவர்களும் கேட்டலும் துணுக்கமும் (அச்சமும்) வியப்பும் அடைந்து அதி பாதகர்கள் எம் பெருமானுக்கு அன்பானது என்ன என்று சந்தேகித்தார்கள்.

## தேவர் வினா

திருப்பாற் கடலில் கண் வளரும் திருமாலின் முன்னே சென்று அணுகி விருப்பத்தால் தோத்திரம் செய்து, தேவேந்திரன் முதலிய தேவர்கள், மேக மேனியனை (விஷ்ணுவை)ப் பார்த்து "நெருப்பாம் தன்மை உடைய அசுரர் எல்லாம் உன்னைப் பாவித்து உனது உருவமாயிருப்பார் களானால் இதை வஞ்சகம் என்று நினைத்தோம். இது என்ன?

கொடிய கொலை செய்யும் வல்லமையுள்ள அவுணர்கள் குணங்கள் எங்கே, பெறுதற்கு அரிய, முடிவதான பிறப்பு எங்கே? முகுந்தன் (திருமால்) பத்தியைப் பெறுவது எங்கே? கடிய தீயோர் சற்குணங்களைக் கொண்டார்கள் என்று சொல்லுவது கதை அல்லாமல், நெடிய மாலே, நின் பத்தி நீசருக்கெல்லாம் நேருமோ (கிடைக்குமோ)?"

## பிரகலாதன் ஞானக் கண்

என்று சொல்லிய தேவர்களுக்கு எம் பெருமான் விஷ்ணு "தேவர்களே, அச்சப் படாதிருங்கள். வென்றி பயிலும் பிரகலாதனாவன் மீண்டும் பிறவாப் பிறப்பு அடைந்தான். கொலை செய்கின்ற துன்பம் நீங்கி மெய்ஞ்ஞானக் கண்ணால் (தத்துவ திருஷ்டியினால்) மோட்சத்தை அடைவன். ஆகையால் இதனில் ஒன்றும் வஞ்சம் என்ற அறியத் தக்கதில்லை.

நல்லோர் பொல்லாங்கைப் பொருந்தினாற் கேடு ஆகும். தீயோர் நன்மையைப் பொருந்தினால் நன்மையே ஆகும். எல்லாரும் போகலாம்" என அருளி,

## தேவர் அசுரர் உறவு

எம்மான் விஷ்ணு அவ்விடத்து மறைதலும் பேரலை சூழ்ந்திருக்கும் அழகிய பாற்கடலிலிருந்து விண்ணுலகத்தை

அடைந்து தேவர்களெல்லாம் பகைவர் என்று சொல்லப்பட்ட தானவருடன் குற்றமற்ற உறவு ஆனார்கள்.

எலும்பு குளிரும் பரபத்தியினால் இமைப் போதும் ஒழியாமல் எப்போதும் அன்பு கூர நெடுமாலை, அசுரர் வேந்தன் பிரகலாதன் ஆராதனை செய்தான். வலிமையிற் சுழலுகின்ற திரிகரணங்களும் தவறாத பூசாபலத்தினால் முதன்மையான விவேகமும் ஆனந்த முதிர்வும் வயிராக்கிய (விராக)மும் உண்டாய் வளர்ந்தன.

நான்கு சாதனம் முதலிய குணங்கள் மிகவும் உண்டாகி, இவன் மனம் ஆசையான போகங்களில் வருந்தும் பற்றுகளின் நீங்கின. குளிர்ந்த முத்தானது முத்தோடு சேரில் பற்றுகள் உண்டாகுமோ? ஆதலால் போகத்தில் அழுந்தாது மனம் அமைதி அடைந்தது.

பூரண (பூன்ற) வடிவையும் தரிசியாமல் போகத்துள்ளும் அழுந்தாமல், தொங்கும் ஊசல் அலைவது போல நல்லோனான பிரகலாதனுடைய மனமானது திரிவதனை (சுழலுவதை) மூன்றுலகத்துக்கும் சாட்சியாகிய திருமால் திருவுளத்தில் அறிந்து அறிவான குணத்தினை உடையவன் ஆராதிக்கும் தனி மாமனையில் (பூசாக் கிரகத்தில்) வந்து சேர்ந்தான்.

## நேரில் திருமால்

மும் மூர்த்தியாக நின்ற முதன்மையான காரணமானது (திருமால்) வந்தடைந்த விதத்தைப் பிரகலாதன் அறிந்து தேவ தேவனாகிய விஷ்ணுவை முன்னே செய்ததிலும் இரட்டித்து ஆராதனை செய்து யாவரும் காண்பதற்கு அரிய எம்மான் எதிர்ந்தனன் (பிரசன்னம் ஆனார்) என்று ஆகின்ற படி அன்பால் அசுரேசன் (பிரகலாதன்) அவனைத் துதித்தான்.

"அண்டம் என்கின்ற ஒப்பற்ற வீட்டில் அரிதான பொருள் சேர்ந்திருக்கின்ற சரக்கு அறையே (பண்டாரமே)! சூரியனைப் போல் உதயம் அத்தமனம் இல்லாமல் பிரகாசிக்கின்ற தற்பரமே (பிரமமே)! கண்ட உயிர்கள் அனைத்திற்கும் கருணைக் கண்ணாகிய வான்பொருளே! இலக்குமிக்கு நாயகனே! போற்றி போற்றி மிகப் போற்றி!

மேலோனாகிச் சகம் (உலகத்தை) படைக்கும் விளையாட்டுடைய ஞான வித்தகனே, பதினான்கு உலகத்திலும் சாராத உயர்ந்த நற்பொருளே, ஆலிலையின் கண் உள்ளவனாய்க் கண் வளர்ந்த ஐயா, மெய்யா, அருள் வடிவே, பூலோகங்களுக்கு நாயகமே, போற்றி, போற்றி, மிகவும் போற்றி!

துன்ப மிகுந்த அவுணர்கள் என்கின்ற கிளைத்த தாமரைப் பூவிற்கு நெடும்பனி ஆனவரே, வேத நெறிச் செல் அமரர் எனும் விரி தாமரைக்கு வெய்யோன் ஆனவரே, வேற்றுமையைக் கெடுத்தவர்களின் உள்ளம் என்கின்ற பெருந்தாமரைப் பூவிற்கு வண்டானவரே",

என்று சொல்லிய துதி பலவும் பிரகலாதன் சொல்ல, மனம் களித்தருளி "அன்ப, திரும்பவும் பிறவா வரம் கேள்" என்று கருணையின் முதல்வனான விஷ்ணுவானவர் சொல்ல, "அனைவர் இதய கமலங்களிலும் வசிக்கின்ற முதற் பொருளே, துன்பமில்லா உயர் பதம் யாது அதுவே அருள்வாய்" எனச் சொன்னான்.

## அருளல்

"மனத்திலுள்ள மயக்கமெலாம் போய்த் தெளிவான பிரமானந்தத்தை அடைந்து சுத்த பிரமத்தில் இளைப்பாற முடிவான ஆன்ம விசாரம் தோன்றுக" என்று அந்தப் பதுமம் (கையாகிய தாமரையை) சிரசின் மேல் வைத்து அனுக்கிரகம் செய்து அமலனாகிய திருமால் எழுந்தருள அவன் தோத்திரத்தினால் மிகவும் வணங்கி மலர் தூவி விவேகிகளுக்கு மிக்கவனான பிரகலாதன் வணங்கினான்.

## ஆன்ம ஆய்வு

குளிர்ச்சி பொருந்திய நீண்டசமுத்திரத்தில் அலையைப் போலப் புருடோத்தமன் மறைந்ததன் பின்பு, "இனிய பதுமாசனத் திலிருந்து இறைவன் துதிகளை ஏத்திய பின் பிறவியைக் கெடுக்கின்ற ஒப்பற்ற சுவாமியானவர் பிறவாத ஆன்ம விசாரணையைக் கொடுத்து இரட்சித்தான்." 'நாம் ஆர்' என்று மிகவும் 'உள்ளே நாடுவோம்' என்று சிந்திப்பான்.

முன்னமே எவனாயிருந்த யான் இந்தப் புவி

ஆடம்பரத்தில் (உடம்பில்) நீங்காமலிருந்தும் நின்றும் ஓடியும் அழுதும் சிரித்தும் மகிழ்ந்தும் அயர்ந்தேனாகிய யான் எத் தன்மையன்? பலவாகிய உலகம் நான் அல்லேன், மலைகளும் கற்களும் புல்லும் மண்ணும் மரங்களுமாகியும் புறம்பாகியும் சடமாகியும் இருக்கின்ற இந்தச் சகத்தை நான் என்னத் தகுமோ?

இல்லா (அசத்) இடத்தில் உண்டானதாகியும் மூடம் என்பதாகியும் (பிராண) வாயுவால் இயங்குவதாகியும் செல்லுகின்ற சில நாளில் சிதைந்து விடுவதாயும் இருக்கின்ற சடமான உடல் நான் ஆவேனோ? நிலையில்லாததாகியும் சூனியத்தில் உண்டானதாகியும் ஆகாரம் இல்லாததாகியும் அறிவில்லாததாகியும் அற்ப உணர்வில் செவிக்கு உணவாயும் இருக்கின்ற பொன்றும் சத்தம் (விடயம்) நான் ஆகுமோ?

தோலினால் அல்லாமல் அறியக் கூடாததாகியும் (தனித்து) தோற்றம் இல்லாமல் கணநேரத்தில் நசித்து, (வியாபக) ஞானத்தினால் அறிந்து (தனக்கு) அறிவில்லாமலும் இருக்கிற ஊறு (ஸ்பரிச விடயம்) நான் ஆவனா?

காற்றில்லாமல் அசைந்து, சட உருவமாகியும் ஆசை மிகுந்ததாகியும் கணத்தில் இறக்கின்றதாகியும் நாவிற்குப் புசிப்பாகியும் பதார்த்தங்களில் உண்டானதாகியும் இருக்கின்ற சடமாம் சுவை (விடயம்) நான் ஆவனோ?

கணத்தில் இறக்கின்ற சகத்திலும் பார்வையிலும் புணர்ந்தும் புணராத, காண்பானிடத்து இறக்கின்ற சடமான உருவ (விடயம்) நான் ஆவனோ?

வளைவான மூக்கு ஆகும் அறிவில்லாமையினால் குறிக்கப் படுவதாகியும் தனக்கு அறிவில்லாததாகியும் வாசனையில் அற்ப முறைமைகளைப் பொருந்தினதாயும் இருக்கின்ற சடமான கந்தம் (விடயம்) நான் ஆமோ?

எனது (மமகாரம்) அற்று எண்ணம் (சங்கற்பம்) எல்லாம் விட்டு இணைப்பில்லாமல் ஐந்து பொறி மயல் விட்டு மாசற்ற ஞானம் ஆகியும் செயலின்றி அறிகின்ற பொருள் (விடயம்) நீங்கிய ஞான மாத்திரமாகியும் கனமான உள்ளிலும் புறம்பிலும் நிட்களமாகியும் உண்டாம் (சத்தா) மாத்திரமாகியும் பிறப்பிறப்பு இல்லாததாகியும் இருக்கின்ற எனது சொரூபத்தைப் பிரகாசிக்கக் கண்டேன். இது சத்தியம்.

## என்னை அறிந்தேன்

ஆகா, இப்போது என்னை அறிந்தேன். உள்ளபடி அறியு நெறியில் நீங்கா வேற்றுமை கெட்டு அறிவுக்குப் பிரகாசமான ஆன்ம சொரூபம் இது தானோ, சலனமின்றி எங்கும் இருக்கின்ற நானாகிய தத்துவ ஞானத்தில் உலகங்கள் அனைத்தும் பொருந்தாநின்ற, சூரியன் முதல் கடம் (pot) வரை பிரகாசித்தது.

உள்ளே இருக்கின்ற ஒளியால் அக்கினிப் பொறிகள் ஒளிர்வது போல ஐம்பொறியும் தெள்ளியறியும் என்னால் மிகுந்த விசித்திரமாகிப் பிரகாசித்தன. தள்ளப்படாத அயன் முதலான தனிமையான கற்ப முடிவில் உயிர் அனைத்தும் வெட்ட வெளியான அப் பிரளய காலத்திலும் எனது சொரூபமே திரும்பாமற் பிரகாசிக்கும்.

இவன் என்றும் நான் என்றும் மனத்திற் பற்றுகின்ற நினைப்பு எங்கே? அளவில்லாமல் இருக்கின்ற சகங்கள் அனைத்தும் மறைந்து ஒளிரும் போத வடிவாம் எனக்குக் கவரும் மனப் பாவனை நினைக்குமிடத்து உண்டோ? முடிவில்லாத ஆனந்தமுடைய சமானம் இல்லாத உபசாந்த உணர்வாம் எனது கண்ணே (பார்வையே) உலகு எங்கிலுமாம்.

நோக்கப்பட்ட நோக்கு எல்லாம் நுண்மை அறிவாகிய பார்வை ஒன்றேயாம். ஆக்கப்பட்ட உயிர் அனைத்தும் அகமாகியும் அறிவறியா அறிவாகியும் தாக்குதற்கு வேறு ஒன்று இல்லாத தனித் தத்துவமாகியும் (பிரத்தியகாத்மாவாகியும்) இருக்கின்ற என்னை யன்றி நீக்கப்பட்டது இல்லாத எம் பொருட்டு வணங்கிப் புகழுதும்.

மிகவும் நொய்யதாய், சமமாகி, விகாரம் இல்லாததாய், அதீதமாய், இறவு நிகழ்வு எதிர்வு என்று எண்ணும் மூன்று காலமும் இல்லாததாய் வேறாக நினைக்கின்ற நினைவில்லாமல், பேதமற்ற அறிவால் மாட்சிமையான பலவகைச் சக்தி அனைத்தும் நேரே உண்டாக்கப்பட்டன.

ஒன்றிலும் தாக்கு அற்று (பற்றற்று) ஞானத்திற்குச் சமமே அல்லாமல் (வேறு) காணப்பட்டதில்லை. வாக்குக்கு எட்டாத படியினால் வார்த்தைகளினால் சமமான ஆன்மா தோன்ற மாட்டாது. நோக்கற்கு அரிதாகியும் பொய்ப் பொருள் போல் நொய்தாகியும் இருக்கின்ற கெடாத நிராசைதனை

நிறைத்தால் சம பாவனையானது (equal vision of all) அலையில்லாத சமுத்திரத்தைப் போல மிஞ்சும்.

செயலும் செயலின்மையும் ஆகி மயங்குகின்ற தொழில்களில் சேர்ந்த அறிவானது வலையில் அகப்பட்ட பறவையைப் போலக் கட்டுப்படும். ஆகையினால் விருப்பு வெறுப்பு ஆகிய இரண்டினாலும் வருகின்ற தொந்தமான மயக்கத்தினால் உயிர்களெல்லாம் நிலப் புழுப் போல் ஒன்றும் நீங்காமல் ஆகும்.

மிகவும் தெளிவாக, மன்னுயிர்க்கெல்லாம் நெஞ்சத்து உறைபவனே நெடுங்காலத்தின் பின் உன்னை அடையப் பெற்றேன். இந்தக் குறைவிலாப் பேற்றை யார் பெற்றார்கள்? சுருதி குரு வாக்கியங்களால் ஆராய்வு பெற்றாய். வேற்றுமைகள் அனைத்தும் நீக்கப் பெற்றாய். சச்சிதானந்த சொரூபமாய் பிரகாசிக்கின்றாய். யாது ஆனாயோ அதுவாக நின்ற உன்னை மிகவும் தோத்திரம் செய்வோம்.

நானே நீயாகியும், நீயே நானாகியும் ஞான சொரூபமாகியும் முடிவில்லாது தானேயாகியும் அண்டத்தில் உள்ள தேவர்களுக்குத் தேவனாயும் இருக்கிற பரம தத்துவமான (பரமாத்மாவான) இறைவனே! உன்னை வணங்குகின்றேன். மேகங்களில் மறையாத நிறை மதி போல, ஈனமான நினைவுகளின் மறைபடாத ஒளி உருவே, உன்னை வந்தனம் செய்வேன்.

நினைவு என்கிற ஆவரணம் (மறைப்பு) ஒன்றும் இல்லாத வெளியாகி (சிதாகாயமாய்) அத் தன்மையதா யிருக்கின்ற ஆனந்த சொரூபத்தில் தானாகப் பிரகாசித்துத் தனது வசமாகிய என் உருவை நான் வணங்குவேன். அசையாது இருந்தும் நடந்தும் சாந்தம் அடைந்தும் அந்தத் தொழில் இல்லாததாம். சகல தொழில்களைச் செய்தும் அந்தப் பற்றில்லாததாம்.

தளிர்களை அசைக்கும் காற்றைப் போல, மனம் முதலாக, நடக்கின்ற அந்தக் கரணங்களை (lower mind) இந்த ஞானாத்மாவானவன் அசைப்பான். வல்லமை உடைய பாகர் நடத்துகின்ற குதிரைக் கூட்டங்களைப் போலத் தன்னுடைய தாகிய துன்பம் பொருந்தப் பொறி எல்லாம் எப்பொழுதும் அவனே தாங்கும்.

இவனே (தேகேந்திரியங்களால்) தேடப்படுகின்றவன். இவனே வாக்கினால் துதிக்கப் படுகின்றவன். இவனே மனத்தினால் தியானிக்கப்படுவன். இவனால் மரண மயக்கங்கள் நீங்கின. இவனே எளிதில் அடையத் தக்கவன். இவன் யாவர் இருதய கமல மத்தியில் இருக்கின்ற இசை வண்டாம்.

விருப்பமுற்ற போகங்களில் விருப்பும் வெறுப்பும் எனக்கு இல்லை. எது வரத் தக்கதோ அது வரக்கடவது. எது போகத் தக்கதோ அது போகக் கடவது. பாவ மிகுந்த இந்த அஞ்ஞானம் என்னும் பகைவனால் விவேகம் என்னும் வருத்தமற்ற பொருளெல்லாம் நீங்கினேன். ஞானத்தினால் அந்தப் பொருள்களைப் பெற்றேன்.

(பொருளெல்லாம் என்பது, சமாதியின் கண் நவ நவமாய் விளங்காநின்ற ஆனந்தம் எனக் கொள்க)

சாத்திரங்களின் வருந்திய விவேகமுள்ள மனத்தால், சம்சாரத்தில் அழுந்திய மனத்தைக் கெடுத்துத் துன்பம் செய்கின்ற அகப் பாவம் தீர்ந்து, நினைவால் நினைவு போய் (அத்துவித தியானத்தினால் துவித பாவனை விட்டு) அசைவற்ற நிலையில் ஒப்பற்ற கேவலமாயிருந்தேன்: வினையான நினைவு அற்று அகம்பாவம் நீங்கிப் பொருந்தாநின்ற மனம் போய், ஒரு செயலுமில்லாமல் தனக்குத் தானே சமானமான கேவலமாகிய பரிபூரணமான ஞானாத்மாவில் எனது சொரூபம் இருக்கும்.

## அகம்பாவம் நீங்கி அயிக்கியம் ஆனோம்

ஆசை என்கின்ற கட்டு அறுத்து காயம் (உடம்பு) என்னும் கூண்டு அகன்று, இறப்பை அடைகின்ற அகம்பாவம் என்னும் தனிப் பறவையானது எங்கே பறந்து போயிற்றோ? குற்றமற்ற நீயே நானாகும் நானே நீயாகும் என்கின்ற ஒன்றிரண்டாகக் கூறும் நியதியினால் திரும்பவும் ஒன்றாகி மேலான நீயே நானாகவும் நானே நீயாகவும் அயிக்கியம் ஆனோம்.

## ஆன்ம வாழ்த்து

ஒழிவிலாத உலகின் சீவரெல்லாம் உண்டாயிருந்தும் நீயில்லாமற் போனால் கண்ணில்லாதவர்களுக்குப் பெரிதான

அழகு மிகுந்த பெண்களைப் போலப் பிரகாசிக்காது. வழுவில் தேவே உனக்கு வெற்றி! 'சாந்தி மன்னும் இடமே உனக்கு வெற்றி! வேதங்கள் அனைத்திற்கும் அதீதமானதே வெற்றி! வேதங்கள் உண்டான இடமே வெற்றி!

(விசாரத்தில் உதித்த சுவானுபூதியை மனனம் செய்ததை நிதித்தியில் காட்சிப்பட்டுத் துதித்தது என்பதாம்)

பிறக்கும் முதலே (உண்டான காரணமே) உனக்கு வெற்றி! என்றும் பிறவா முதலே, உனக்கு வெற்றி! எந்நாளும் இறக்கும் முதலே வெற்றி! என்றும் இறவா முதலே உனக்கு வெற்றி! என்று இவ்வாறு சிறக்கும் மனத்தால் சிந்தித்து. இரணியனின் அழகிய புத்திரன் பரவிய பேதமற்ற மேலான நிருவிகற்ப சமாதியின் ஆனந்தத்தை அடைந்தான்.

## சமாதி அனுபவம்

நிருவிகற்ப சமாதியில் பிரகாசிக்கின்ற சித்திரத்தைப் போல், நிலைபெற்று ஐயாயிர வருடங்கள் செல்ல, மாறா ஒரு பார்வையில் நிற்ப, மாணிக்கங்கள் சூழ்ந்திருக்கின்ற பாதாள உலகத்தில் வேந்தனில்லாமல் அவுணர்கள் அனைவரும், கருடன் முதலான புள்ளினம் கவரக் கலங்குகின்ற தடாகத்து மீன்கள் கூட்டத்துக்கு ஒப்பானார்.

(சுவானுபூதி மாத்திரமாய் விளங்கினான் என்பதாம்)

## திருமால் சகநீதியை நினைத்தல்

இப்படியான காலத்தில் அனைத்து உலகங்களினது நீதிகள் யாவையும் காவல் புரியும் திருநெடுமால் திருப்பாற் கடலில் அறிதுயில் செய்து துளிக்கின்ற மழையை உடைய கார்காலத்தில் செய்யும் நித்திரை நீங்கி, ஒரு காலை இரட்சிப்புள்ள திருவுள்ளத்தில் உலகத்தின் நடக்கையைச் சிந்தித்தார்.

வேற்றுமையில்லாத சாந்திபதத்தைப் பிரகலாதன் அடைந்திருக்க, வேதன் (பிரமன்) படைப்பானவை அழிவுற்றன. கொடிய வாளை உடைய அசுரர்கள் இல்லாததனால் குற்றமுள்ள தானவர்கள் இல்லை என்று

போர் அற்றுத் தேவர்கள் அனைவரும் மிகவும் உபசாந்தியராகி ஒப்பற்ற மோட்சம் அடைவார்கள்.

அமரர்கள் உபசாந்தி அடைந்தால் பூமியிற் சிவந்த தீயை (முன்னிட்டுச் செய்கின்ற) யாகங்களும் தவங்களும் அனைத்தும் போவதாகிப், பயன் எல்லாம் பொருந்தாமல் எல்லாம் நசிக்கும். முயன்று செய்யப்படும் யாகாதி கிரியைகள் எல்லாம் ஒழிந்தால் பூமி ஒடுங்கும். கேவலத்தில் (தனிமையில்) பூமி அடங்கினால் கிளரும் சிருட்டி அற்றிடும்.

இப்படிப் பட்ட சிருட்டி இல்லாமல் சூரிய சந்திரர்களோடும் யாவும் இறந்தால் பின்பு நாமும் இந்த உருவத்தை விட்டுப் பேதமில்லா (தற்) பதத்தை அடைவோம். நியமித்த காலத்தை விட்டு மத்தியில் பழமையான ஞாலம் எல்லாம் இறக்கில் நினைக்க, நன்மையைக் கண்டிலம். இதற்குத் திறமான உபாயத்தை அறிந்தனம்.

தானவர்கள் உய்க. அவர்கள் உய்ந்தால் சமர் உண்டாம். சமர் (யுத்தம்) உண்டானால் யாகமும் தவசும் உண்டாகும். அவை உண்டானால் ஆனதோர் (ஒப்பற்ற) படைப்பு (சிருஷ்டி) உண்டாகும். அவை அல்லாவிடின் சிருஷ்டியும் கெடும். குறைவற்ற அசுரேந்திரனாகிய (பிரகலாதன்) இவ் வுடலொடும் ஊழிக் காலம் வாழக் கடவன்.

பரமேசுவரனால் பாலிக்கின்ற தெய்வ நீதியானது நிலை (ஸ்திரம்) பொருந்தும்படி இவ்வாறு செய்ய வேண்டும். என்று சிந்தித்த செங்கண் மாயன், அரவணைப் பாயல் நீங்கி (சத்திய) பிரமலோகத்தைப் போன்றதான பெரிதான பாதாள உலகத்தில் அசுரர்க்கரசனான பிரகலாதனது அருகு (சமீபம்) அடைந்தார்.

## திருமால் தோன்றல்

கருட வாகனத்து உறைபவனும் வெண் சாமரம் வீசும் செல்வத் திருமடந்தையான இலக்குமி வாழ்கின்ற வலப்பக்கத்தை உடையவனும் பஞ்சாயுதங்கள் நிறைந்த (ஐம்படை செறிந்த) இருபுறத்தை உடையவனும் தேவர்களும் முனிவர்களும் வணங்க அருளும் நாயகன் ஆன விஷ்ணு பிரகலாதனை 'அறிவாய்' என்று அருளி,

வலம்புரி (பாஞ்ச சன்னிய)த் தொனியை எழுப்பினார். மாதிரம் (ஆகாயம்) பிளக்கும் படியாகவும் நிலம் பிளக்கும் படியாகவும் நெடுந்திசை பிளக்கும் படியாகவும் ஓங்கிய, அதிராநின்ற பேரொலியினால் நன்மை உண்டாக்குகின்ற தற்பதத்தில் கலந்த நல்லோன் (பிரகலாதன்) மெல்ல மெல்ல அறிவுற்றான்.

## சமாதி நீங்கல்

பிராண (சைதன்னிய) சக்தியானது. பிரம ரந்திரத்தினின்றும்★ பிரிந்து புராதனப் படி நாடிகளால் எங்கும் பொருந்திக் கலத்தலை யுற்ற ஒன்பது துவாரங்களிலும் பொருந்தப் பராபரத்தை அறிந்த பிரகலாதனது அறிவு உண்டாயிற்று.

அறிவு (சைதன்னிய-உணர்வு) தோன்றி உள்ளில் பிராணன் என்னும் கண்ணாடியின் சாயையாக (பிரதிபிம்பமாக)ப் பிரதிபலித்துப் பொருள்களை (விடய வஸ்துக்களை)ப் பார்த்தது. அவ் அறிவானது வேறான விடயத்தில் பிரிவற்ற முகமானது கண்ணாடியில் இரண்டாதலை அடைந்தது போல் மனத் தன்மை அடைந்து,

அற்பமாக மனம் முளைத்த மாத்திரத்தில் அரும்பு அவிழ்ந்த நீலோற்பலங்கள் போல அழகிய கண்கள் மெல்ல மலர்வுற்றன. (விழித்தன) நரம்புகளிலும், பொருந்திய பொறிகளிலும் உணர்வுகள் நிறைய நல்ல பிராண வாயுவும் அபான வாயுவும் எங்கும் நடந்தன.

அமைதியான தென்றற் காற்றில் அகப்பட்ட தாமரைப் பூவைப் போலப், பிரகலாதன் அசைந்தான். இமை நேரத்தினுள் மனம் தடித்து எழுந்தது. கண்ணும் மனமும் பிராணனும் உடம்பும் பிரகாசிக்கப் பொறுமை மிக்க பிரகலாதன் அருள்வடிவான திருமால் காணப் பிரகாசித்தான்.

பரந்து (விகசிதமாய்) கண்கள் பார்த்தன. மனமும் பூரணமாக நிறைந்தது. அப்பொழுது அப் பிரகலாதனை நெடுமால் சுரந்த அன்புடன் நோக்கி அருள் செய்வார்.

---

★ Brahmarandhra is the Brahman orifice through which liberation is reached.

"தூயோய், தேவந்திரன் துதிக்கின்ற உனது செல்வத்தை விரும்பிப் பார்ப்பாய்.

(சமாதியினின்று திரும்பினவனைச் சகசத்தில் சர்வம் பிரம்ம மயமாய் விளங்கும் நிரதிசயானந்தமான உனது செல்வத்தைப் பார் என்று அனுக்கிரகம் செய்தார் என்பதாம்)

## சக நிட்டையை அருளல்

உடலை நோக்குவாய், காலமல்லாத காலத்தில் உனது உடலை விட்டுவிட நினைப்பது என்ன? பற்றுதலும் விடுதலுமாகிய சங்கற்பம் வளராத உனக்கு அபாவமும் பாவமும் உடலில் தொடர்ந்தால் குறைவு என்ன? சமாதியை விட்டு எழுந்திருப்பாய் தூயோய்! (சீவன் முத்தி பதத்தில்) இருப்பாய்.

சீவன் முத்தனாகிய நீ இந்த உடலோடும் நீதியைக் காக்கின்றவனாய்ச் சம்சார பாரம் இல்லாமல் கற்பகாலம் அளவும் இருக்கக் கடவாய். நெருப்பு எரிக்க, பன்னிரு சூரியர் எரிக்க உலகம் அனைத்தும் கெடாமலிருக்க வீணாக நீ மரணம் அடைவானேன்?

வளரும் ஆசையாகிய கயிற்றால் நன்கு கட்டுப் பட்டு, பருக்கின்ற அந்தக் கரணமானது அந்தப் பாச வழியிற் சென்று மெலிந்து சம்சாரத்தைச் சுமக்கின்ற தொழிலினால் மனமானது மிகவும் சஞ்சலம் ஆனவர்களுக்கு அல்லவா தீமை பொருந்திய மரணமானது உலகத்தின் கண் சிறந்திருப்பது?

அகம்பாவத்தை நீக்கி, ஒரு பற்றில்லாமல் சகலமும் சுகத்தைக் கொடுக்கின்ற சமத்துவமானவர்கள் ஆயுளே சுகமாம். மிகுந்த ஆசையும் சினமும் இன்றி உள்ளே குளிர்கின்ற அறிவினால் உலகங்களுக்குச் சாட்சியானவர்களுடைய ஆயுளே சிறப்பாம்.

பற்றுகின்றவனும் பற்றுகின்ற பொருளும் (விடயங்களும்) ஆகிய இவ் விரண்டும் சொல்லுகின்ற பந்தமாம். அது அறுபட்ட போது உபசாந்தம் உண்டாகும். அவ் உபசாந்த நிலையாக அடைந்த போது மோட்சம் என்னும் பெயராம். அந்த நிலைமை நீ அடைந்த படியால் வெற்றியுள்ள வீர சிங்காதனத்து விளங்க இருப்பாயாக.

ஒலிக்கும் சங்கின் ஓசையால் ஆரவாரித்து வந்த தேவர்கள் மங்கலத் தொழிலைச் செய்து துதிக்க, விரைவில் இன்று நானே உனக்கு மகா முடியைச் சூட்டுவேன். ஊழியின் அளவு நீ அரசாட்சி செய்யக் கடவாய் என்ற அருளினார்.

## முடி சூட்டல்

மங்கல தீர்த்தங்களைக் கொண்டு வருக என்ற சொல்லி மஞ்சனம் ஆட்டி, சங்கு சக்கரம் தரித்த கைகளால் தானே தேவர்கள் குழாங்கள் தோத்திரம் செய்யப் பொன் முடி சூட்டி அழகிய கண்களை உடைய விஷ்ணுவானவர் அசுரேசனான பிரகலாதனுக்கு இவற்றைச் சொன்னார்.

"அசைத்தற்கு அரிய மகா மேருவும் பூமியும் சூரியனும் சந்திரனும் ஆகிய இவர்கள் உள்ள நாளெலாம் அரசு செய்து உயர்" என்று அருளி, பொய்யாகிய மாயையின் சிருட்டி ஒன்று மறைதலைப் போல் கண நேரத்தில் மிகுந்த தேவர்கள் கூட்டத்தோடும் விண்டு (திருமால்) மறைந்தார்.

## ஆன்மாவில் கரைந்த மனம் பிறந்தது எப்படி?

இப்படி என்று சொல்லிய வசிட்ட முனியை இராமன் பார்த்து அப்படிப்பட்ட தானவர்க்கு அரசனாய் வீடு உற்ற (மோட்சம் அடைந்த) அறிஞன். தனது உள்ளம் மெய்யான பிரமத்தில் தன் மயமான பின்பு, மாலின் சங்கின் ஓசையால் பிறந்தது எந்த விதம்?

என்று வினவலும், இராமனுக்கு, அருந்தவனான வசிட்டர் உரைப்பார். அக்கினியால் வறுக்கப்பட்ட விதையாம் என்ற சொல்லும் படி சுத்த வாசனையானது சம்சார பந்தம் இல்லாத சீவன் முத்தர் அனைவருக்கும் இருதயத்தின் கண் பிறப்பு என்னும் முளையானது திரும்ப இல்லாததாகவே இருக்கும்.

பரிசுத்தம் ஆகியும் பிரமம் ஆகியும் உண்டாதல், மிகுந்த உதாரம் ஆகியும் சுத்தமான சாத்துவிகக் குணத்தைப் பொருந்தி விட்டு விடாமற் கலந்ததாகியும் பரிசுத்தமான ஆத்துமத் தியான மயம் ஆகியும் ஒரு தொடக்கம் இல்லாததாகியும் இருக்கின்ற சுத்த வாதனையானது

எப்போதும் சுழுத்தி வாதனையைப் போலச் (like vasanas during susupti) சீவன் முத்தர்களிடத்தில் இருக்கும்

ஆயிர வருடம் ஆனாலும் உடம்பு இருந்ததானால் உள்ளே மேவி இருக்கின்றதாகிய அச் சுத்த வாதனையானது மெல்லென ஒரு பக்கத்தில் இருந்து, தேயலது ஆகி (சீரணத்தை அடையாததாய்)த் தோன்றும். மிகுந்த அச் சுத்த வாசனையினால் தூய நற் சீவன் முத்தர் மனம் உணர்ச்சியைத் தொடரும் ( It is through these pure vasanas that Jivan muktas are awakened to an external perception of objects) என்று வசிட்ட முனி கூறினார்.

## 5:5 காதி காதை*

### சுருக்கம்

முன் கதையில் உபாசனை மூர்த்தி அருளால் உண்டான விசாரத்தால் சுவானுபூதி பிரத்தியட்சமாய், தன்னைத் தவிரச் சகம் இல்லை என்று அறிந்ததை அறிவித்து, இவ் ஆன்ம அனுபவம் உண்டாதற்கு இடரான மித்தையாம் மாயையைத் தரிசித்து அதை நீக்க வேண்டும் என்பதை அறிவிக்கு நிமித்தம் காதி காதையை நிரூபிக்கிறார்.

### மாயையின் விசித்திரம் அறிவித்தல்

பிறப்பு இறப்பு என்னும் பெயருடைய இந்த மாயையினது பெருமையை முடிவுண்டாகச் சொல்ல முடியாது. மிகவும் பெரிதாகிய தனது மனத்தை வென்றால் அது மாளும் அல்லது மற்றொரு வகையாலும் அகற்ற முடியாது. சிறப்புடைய வலிய (சகத்) மாயையின் மிகுதியிலிருக்கின்ற அதிசயம் தோன்றும்படி உனக்குச் சொல்லும் கதையை மறதியற்ற சித்தத்தை உடையவனாய்க் கேட்பாயாக -

என்று மனுகுல நாயகனுக்கு (இராமனுக்கு), வசிட்ட முனி சொல்வார்.

---

* The story of Gadhi

## காதி தவம் : திருமால் பிரசன்னம்

மண்ணுலகில் கோசலம் என்னும் தேசத்தில் மறையவர் கோன் (பிராமண சிரேஷ்டன்) காதி என்ற பெயர் உடையவன் ஒரு காரியத்தை மனத்தில் நினைத்து உறவினரை விட்டு நீங்கி ஒரு வனத்திற் புகுந்து ஒரு தடாக நீரின் நடுவில் பொருந்தி அழகிய கழுத்தளவு முழுக நின்று நற்றவம் செய்து எட்டுத் திங்கள் சென்ற பின், பெருமை பொருந்திய அருளால் மாயவன் (விஷ்ணு) அவன் முன் தோன்றி உனது கருத்து என்ன, தருகிறோம் என்று சொல்லவும்.

## மாயையைத் தரிசிக்க வேண்டல்

தடாக நீரினின்றும் கரையில் வந்து காதி என்கின்ற தவத்தை உடைய பிராமணன் கை தொழுது, 'உலகம் என்னும் மண்டலத்தில் அளவற்ற ஆன்மாக்களுடைய இதயத் தாமரையில் நீங்காதிருக்கின்ற வண்டே, அச்சுதா! அனந்தா!' என்று அன்பால் போற்றி, சலனம் இல்லாத் தற்பரத்தில் (பிரமத்தில்) கலந்திருந்து பிறப்பு இறப்பின் வடிவத்தினால் உலகங்களாகிச் சஞ்சலப் படாமல் நின்ற மிகுந்த அதிசயத்தைச் செய்வதாயிருக்கிற நீ படைத்த மாயையைக் காண அருள் செய்வாய் என்று கேட்டான்.

## மாயையைத் தரிசித்து அதை நீக்குவாய் என்று அருளி ஏகுதல்

அந்தணன் வேண்டிக் கொண்ட அளவில் 'அப்படியே மாயையைக் காணக் கடவாய்; கண்டால் அகற்றுவாய்' என்று அருளித் திருமாலானவர், கந்தருவ நகரம் போல் மறையவும், கருணை வடிவான அவரைத் தரிசித்த களிப்பினால் அக மகிழ்ச்சி அடைந்த காதியானவன். அவ் வனத்தில் தவத்துடன் சில நாள் இருந்து தானே ஒரு நாள் சிந்தனையில் அரி (மகாவிஷ்ணு) உரைத்த வாக்கியத்தைச் சிந்தித்துத், தேனுள்ள தாமரைப் பூக்கள் நிறைந்த தடாகத்தில் மூழ்கச் சென்றான்.

## மாயையைத் தரிசித்தல்

நீரில் மூழ்கி அந் நீரில் செய்யத் தகும் விதிக்கு உரிய

வேத மந்திரங்களையும் தியானங்களையும் காதி மறந்து விட்டான். உறவினர் சூழ்ந்த தன் வீட்டில் தன்னை நோயால் இறந்தவனாகக் கண்டான்.

இனத்தோர் எல்லாம் இரு புறத்தும் மிகவும் மொய்த்துக் கொண்டு கதறினார்கள். அவன் தேவி (மனைவி) காற்கடையில் விழுந்து அலறினாள். புத்திர வாஞ்சை உடைய அவன் அன்னை தனம் பருகத் தருவனள் போல் அணைத்துக் கொண்டு நெருப்பை மிதித்தவள் போலப் பதைபதைத்துத் தளரக் கண்டான்.

அப்படி ஆன சமயத்தில் (அதற்கு) அடுத்த காரியங்களைச் செய்து, அழுகின்ற சுற்றத்தார் அக்கினியை மூட்ட உடம்பெல்லாம் சாம்பர் ஆகி, மயானத்தில் பொருந்தப் பார்த்தான்.

குளத்தில் இருக்கின்ற காதி தன் மனத்தினுள் குற்றம் பொருந்திய வருத்த மிகுந்த புத்தியினால் குற்றமற்ற தன்னிடத்தில் தன்னால் உண்டாகப் பார்த்த மயக்கம் பொருந்திய கிரியைகள் மேல் நடக்கின்ற யாவையும், இராகவா, கேள் என முனிவன் சொல்லத் தொடங்கினான்.

இந்தப் பூமியில் ஊண தேசத்தில் ஒரு நகரத்தின் முடிவில் இருக்கின்ற நீசர் என்கிற - நாய் தின்போர் - குலத்தில், மை போற் கரிய ஒரு பெண்ணின் வயிற்றில் ஒரு கருப்பமாய் வருத்த முற்று வளர்ந்து பிறக்கும் பருவம் வந்த பொழுது கைக் குழ்ந்தையாகப் பிறந்து, வளர்வுற்று, வெந்து போன கரிக் கட்டை போல, நிறத்தை உடைய ஆண் மகனாய் இழிவில் தனக்குத் தானே சமானமாக, நாய் தின்போர் வமிசத்திற் பிறந்த ஒரு நீசப் பெண்ணைக் கலியாணம் செய்து ஒருமையானான்.

மலைகளிலும் வனங்களிலும் முதலிய எவ்விடத்திலும் மனமும் உயிரும் போல ஒத்து வாழும் நாளில் பூமியின் மேல் தன் குலம் விளங்கப் பிள்ளைகளைப் பெற்றான். சில நாளில் மூப்பு வந்தடைந்து நரை மிக உண்டாகவும் தழையாற் செய்யும் நல்ல வீடு தூரத்தில் கட்டி வாசம் செய்தான். குற்றம் அற்ற மாதவர் போல அவ்விடத்தில் வசிக்கின்ற நாளில் தன் புத்திரர்க்கு மூப்பு வந்து பொருந்திற்று.

மனைவிக்கும் புத்திரர்களுக்கும் தனக்கும் ஒருமித்து மூப்பு வந்ததைப் பார்த்து வருத்தப்படும் காலத்தில் தன்னை நீங்கலாக அனைவரையும் காலன் மாய்க்க, வாய்விட்டலறித் தனிமையை ஆற்ற முடியாமல் நினைவு அழிந்து ஓர் ஆசையும் இல்லாதவனாய், அளவற்ற தேசங்களில் வெகு காலம் சுழல்கின்றவன் கீரம் என்கிற, நீதியையுடைய நாட்டில் தரிக்கப் பட்ட முடியை உடைய அரசனது பட்டணத்திற் புகுந்தான். விண்ணுலகத்தில் பொன்மயமான வீதியைப் போல் இருக்கிற ஒரு தெருவிற் போனான். போகும் போதில்,

'இந் நகரத்து அரசன் மரணம் அடைந்தான்; உலகம் காக்க வேறு ஓர் அரசனை எடுத்துக் கொண்டு வா' என்று சொல்லிச் செம்பொன் நிறைமணியால் அலங்கரித்து விடுத்த பட்டத்து யானையானது அரசன் யார் என்று தேடிக் கொண்டு நேரே வர, கறுத்த உருவத்தோடு இருக்கிற இந்த நீசன் யானையைக் கண்டான். இவனை அந்த யானை பார்க்கவும் துதிக்கையினால் மத்தகத்தில் (கழுத்தில்) ஏற்றிக் கொண்டு சென்றது. அந்தக் காட்சி சூரியனோடும் செல்கிற உதய மலைக்கு ஒப்பானது; பல்லியம் (வாத்தியம்) சூழ்ந்தது சமுத்திரத்துக்கு ஒப்பு ஆனது.

எட்டுத் திக்குகளும் 'சய, சய' என்று இறைஞ்ச வந்தவனை. இவனே அரசன் என்று அழகையுடைய பெண்கள் அலங்கரித் தார்கள். பண்டை அமைச்சரும் சேனைத் தலைவரும் பணியைத் தலைமேற் கொண்டார்கள். தரணி பாலனாகி, பூமி எங்கும் செங்கோல் செலுத்தி மரபினால் கவலன் என்கிற வளப்பம் உள்ள பேர் பெற்றுக், கோவைப் பழம் போன்ற அதரத்தை உடைய மாதர்கள் விரும்பக் கீர தேசத்தில் சுடர் மணிச் சிங்காதன மேல் விளக்கத்தின் மிகுந்திருந்தான்.

எட்டு வருடம் உயர் கவலன் என்ற பெயருடைய, நாய் தின்னும், நீசன் நரபதியாக வாழ்ந்து ஆன பிற்பாடு, ஒரு நாள் தனித்தவனாக உடம்பிலுள்ள ஆபரணங்களை எல்லாம் நீக்கித் தானே காலின் நடந்து உயர் மனையின் புற முற்றத்தில் (தெருப் புறத்தில்) நீச வேடத்தோடும் உலவும் சமயத்தில் ஆங்குக் கரிய நிறத்தையுடையவர்கள் வீணாகானத்தை நிறைக்கின்ற கையை உடையவர்கள் - நாய் தின்னும் சண்டாளர்கள் - எதிரே வந்தார்கள்.

யாழ் உடைய கடைமகர்க்குள் நின்றும் ஒப்பற்ற கரிய நிறத்தையும் சிவந்த கண்களையும் உடைய மிகவும் மூப்புள்ளவன் வந்து, விளக்கமுள்ள நல்ல கீர நாட்டுக்கு அதிபதியானவனைப் பார்த்த மாத்திரத்தில் ஆசையோடும் கடஞ்சன் என்கின்ற பழைய பெயரைச் சொல்லி, பழைய உறவாயிருக்கிற நீ எங்கே போனாய்? வாசம் செய்வது எவ்விடம்? சூழ்ந்திருக்கிற நல்ல ஊழினால் இப்பொழுது பார்த்தேன் என்று இவன் வமிசத்தின் தொடர்பெல்லாம் உள்ளபடி தெளியச் சொன்னான்.

தனது நீசத் தன்மையைச் சொன்ன அந்த நீசனை, கவலன் என்னும் மன்னனானவன் இகழ்ந்து பெருஞ் சத்தத்துடன் அதட்டி, அவ்விடத்தினின்றும் சீக்கிரமாக அந்தப்புரத்துக்குச் செல்லுதலும் இவற்றை எல்லாம் கனங்குழையாரான அரச மாதர் பலகணி வாசலினின்றும் நேரடியாகக் கண்டார்கள். அதிசயத்தினால் அவ்விடத்து இருந்த மந்திரி முதலியவர்கள் நின்ற இடத்திலே கண்டு, 'பூபதியாம் இவன் கடஞ்சன் ஆகிய புலையனாம்; மேல் என்ன செய்யத் தக்கது' என்று திடுக்குற்று ஏங்கி இடர் உற்றார்கள். இவ் அரசன் கலங்காமல் மனத்திற் சிந்தித்து,

அவற்றை எல்லாம் அறியான் போல் மறைத்துக் கொண்டு முன்னைப் போல் சிம்மாசனத்தில் இருக்கவும் அவ்விடத்து அவ் வரசனை முன்னம் நெருக்கமாகிய மாதரும் அமைச்சரும் மற்றுள்ளவர்களும் தொடத் தகாத சவத்தைப் போல், பாராதவராய் அவ்விடம் விட்டு நீங்காமல் இருந்தார்கள். அந்தச் சனங்களோடு கூடியிருந்தும் வேற்றுமையாகி இவன் தனியே இருந்த குணத்தைச் சொல்லில், அறிவு நிறைந்த வித்தையும் திரவியமும் எதுவும் இல்லாமல் புற நாட்டில் பொருந்திய வழி நடப்பவனைப் போலுமாம்.

அந்தத் தருணத்தில் யாவரும், புலையன் ஆகிய நாய் தின்பவனால் வெகு நாள் பாதகமே அடைதலானோம். பாவம் போய் இனிமேல் ஒரு சாந்தியினும் உய்ய மாட்டோம். புனிதமாம்படி அக்கினியிற் பிரவேசம் செய்வோம் என்று தீயில் விழ நிச்சயித்து அந் நகரோர் எல்லாம் குழந்தைகள் முதலாக முதியோர் முடிய சேரக் கூடி, சண்பகப் பூவில் மொய்க்கின்ற வண்டுகள் போல் எரியில் வீழ்ந்தனர். அரசனாகிய சண்டாளன் கடஞ்சன் மிகவும் நொந்தான்.

நல்லினம் சேர்ந்ததனால் சித்தம் தெளிந்து நன்மை உண்டான, நாய்தின் நீசராசன், சிந்திப்பான். கீழ்மையான நம் தொடர்ச்சியினால் (தொடர்பால்) இத் தேயத்தில் உள்ளவர்கள் கீழ்மக்கள் ஆகி அனல் புகுந்து பொன்றி (நாசம்)ப் போனார்கள். அல்லலுடன் இனியிருந்து என்ன என்று சிந்தித்து ஆவி விடத் துணிந்து அனலில் தளிர் போல் சிவந்த எரியானது கடஞ்சன் உடலில் எரிக்க, நீரில் முழுகியிருக்கிற காதியின் உடலானது பதைபதைத்தது.

மகா மாயையினின்று நீங்கித் தெளிந்த காதியானவன் வருகின்ற முகுர்த்தம் (கடிகை-24 நிமிடம்) நான்கில் மயக்கம் நீங்கி 'நாமார்? என்ன பார்த்தோம்?' என்று எல்லாம் உளத்தில் நினைத்து நீரினின்றும் கரையேறி 'ஆச்சரியம், ஆச்சரியம், இப்படி யல்லவோ உயிர்களெல்லாம் காட்டினுள் இருக்கிற சினப்புலி போல் தாவிச் சென்று குற்றம் மிகுந்த மயக்கில் மன மயங்கித் துவள்கின்றார் என்று நினைந்து துன்பம் நீங்கினான்.

## காதிமுனி கண்ட சாக்கிர சொப்பனம் தீர்க்க, சொப்பனமாய் அறிவிக்கு நிமித்தம் வந்த அதிதியை வினாவுதல்

அந்த நினைவோடும் சில நாள் தள்ளித் தனது இடத்தில் இருந்தான். அவ்விடத்தில் ஓர் அதிதி வர மிக்க மகிழ்வுடன் தேனும் பழங்களும் விரும்பி உண்ண வைத்து, சூரியன் மறையும் சந்தியா காலத்தில் தங்கள் நியமங்களைச் செய்து, தகைமையாலான சயனங்கள் செய்து இருவரும் தத்துவ நூற் கதைகள் பேசுகின்ற சமயத்தில் கூடச் சயனித்திருக்கிற அதிதியைக் காதி முனியானவர் பார்த்து. 'உத்தம முனியே, உன் உடல் உலர்ந்து தளர்வடைந்தது என்ன; கூறுவாய்' என்று கேட்ட காதி முனிக்கு அதிதி சொல்லுவார் :

இப் பூ மண்டலத்தில் வட திக்கில் செல்வம் குலாவும் புகழ் உடைய கீரம் என்கின்ற (Literally, the country of Kira or Kashmir) தேயத்தில் அன்புள்ளவர்கள் விரும்ப நான் ஒரு மாதம் இருந்தேன். சிரமம் தீர யான் வசிக்கின்ற ஊரில், ஒருவன் என்னிடத்தில் வந்து சொல்லுவான்.

இந் நாட்டு அரசனாய், இந்த ஊர் மாறுபட்டுப்

போகாமல் எட்டு வருடம் இவ்விடத்து ஒருவன் அரச போகம் அனுபவித்துப் பின்பு அவனது நாய் தின் மரபு தெரிய,

அவ் அரசன் அக்கினியிற் பிரவேசித்து இறந்தான். அவ் விடத்தில் அந்தணர் அனல் புகுந்து இறந்தார்கள். எத் தன்மை என்று சொல்லுவேன் என்றலும் அதை யான் கேட்டு, சொல்லிய தேசத்தை விட்டுப் போய் மிகுந்த அலைகளை உடைய தேவ தீர்த்தமான (கடவுட் புனலான) பிரயாகை (Prayaga) என்னும் நதி தீரத்தில் அப் பாவத்தை நீக்கும் பொருட்டு, தனக்குத் தானே சமானமான வேத விதியினால் சாந்திகள் (penances) செய்து சாந்தராயண விரதம்★ செய்து இளைத்தேன்.

இவ்வாறு அதிதி சொல்லவும், காதி முனி 'நமது சரித்திரம் இது' என்று தன் தனிமையான மனத்தில் ஆச்சரியம் மிகுந்து தனக்குள்ள புலைச் சரித்திரமாய் முன் விளங்கிய இயல்பைக் காண விரும்பி, முன்னுள்ள தேசங்களை நீங்கிப் போய் ஊண மண்டலத்தில் (Lit. the country of Huna-s) புகுந்து தான் பிறந்து வாசம் செய்த இடங்கள் அனைத்தையும் பார்த்தான்.

முன்பு தான் (சமாதியிற்) பார்த்த வண்ணம் எல்லாம் கண்டு, நெருங்கிய சடைமுடியை மிகவும் அசைத்து, சிந்தை வியந்து நான்முகனது பலவிதத் தொழிலைப் பார்த்து மேல் நடந்தான். அந்த நன்மையுள்ள ஊண மண்டலத்தைக் கடந்து அழகு விளங்கிய கீர நாடு அணுகி வந்து தான் முன் செய்தன எல்லாம் குறைவில்லாமற் கண்டு கேட்டறிந்தான்.

விஷ்ணு எமக்குத் தெரிவித்த மகா மாயை இது தானா? புதுமையான இதை அறிவினால் நன்கு அறிந்தோம் என்று நினைத்துச் சீக்கிரமாக அத் தேசத்திலிருந்து நீங்கிப் பெரிய மலைச் சார்பில் வந்து ஒப்பற்ற தவத்தை உடையவன் ஆக

★ **Candarayana Vrata** : This is an observance in which beginning with fifteen morsels of food on a full moon day, a person reduces them one by one till he reaches the new moon day when he increases it one by one daily.

ஓர் உள்ளங்கைத் தீர்த்தம் புசிப்பு ஆகி, விஷ்ணு மகிழ்கிற அரிய தவத்தைச் செய்தான்.

ஒரு வருடம் சென்ற மாத்திரத்தில் அம் மலையினது பக்கத்தில் அரிய தவத்தை உடைய காதியின் ஆச்சிரமத்தில் நெடுமால் ஆனவர் நீல முகில் எனப் பிரத்தியட்சமாகி (தோன்றி) மிகுந்த தவத்தையுடைய காதி முனியைப் பார்த்து, இவ் வண்ணமாக நிறைந்த எமது மாயையின் பெருமையை இயல்புறக் கண்டாய். இனிமேல் வேண்டுவது என்ன? மலையிற் செய்கின்ற மெய்யான தவம் எதன் பொருட்டு? என்று கேட்க.

துதித்து இறைஞ்சித் தொழுது, கரிய உயர்வுள்ள மேகத்தைப் பார்த்துப் பூரித்த சாதகப் பறவையைப் போல மகிழ்ச்சியை உடைய காதி முனிவன், அழகிய கருணைக் கண்ணனான திருமாலை நோக்கி, 'விதித்து நீ காட்டிய வினை இருள் மாயை இப்படிப் பட்டது என விளங்கக் கண்டேன். வரையறுத்து அறிந்த அம் மாயையினது மருமம் நான் அறியேன் மயக்கம் மெய்யானது என்ன' என்று கேட்டான்.

## மாயையின் அந்தரங்கத்தை உரைத்தல்

திருமால் அதற்கு உரைப்பார் :

'அந்தணா! இந்த மண் முதலிய யாவும் மனத்தினிடத்திற் பொருந்த இருப்பதே அல்லாமல் புறம்பில் இருப்பது ஒரு காலத்திலும் இல்லாததாம். காரணம் (மூலம்) இல்லாத கனவும் மயக்கமும் மதமும் முதலாகிய நெறிகளில் யாரும் ஒழுங்காகப் பார்த்து அனுபவிக்கின்றார்கள். சிந்தையுள் இருப்பது சகம்.

(மயக்கத்தில் தோன்றிய பிரபஞ்சம் சத்தியமாகத் தோற்றினதை அறிவிக்கும் நிமித்தம் மித்தையான மனமே பிரபஞ்சமாம் என்று அறிவித்ததாம்)

(Vishnu replied : ...this earth and other things of the universe have for their substratum the mind and do not exist at any time apart from the mind. Almost all persons in this world, in this

universe of dreams delusion and egoism, look upon it as real and enjoy it. It is only in Chitta (the flitting mind) that the universe rests)

அளவின்றிப் பரந்திருக்கிற சகக் கூட்டங்கள் அனைத்தும் தளர்வில்லாமல் அமர்ந்திருப்பதற்கு இடனான மனத்தினால் இந்த நாய்ப் புலைத் தன்மை வெளிப் படுத்தினால் இதில் வியப்பு என்ன? மிகுதியான பத்திபாச்சலின் (reflection : பிரதிபா மாத்திரத்தின்) வசத்தினால் கடையான புலைத்தன்மை தெரிந்துளதாம். முன்பு தொடர்ந்து வந்த அதிதியும் அந்த வண்ணமே மயக்கம் அனைத்தையும் பார்த்தான்.

கண்ட அப்படியே நாய்ப் புலைத் தன்மை காக தாலீய சம்பந்தத்தினால்★, ஊண மண்டலத்தும் கீர மண்டலத்தும் உள்ளவர்களுடைய மனத்திலும் பத்திபாய்ந்துள்ளது (பிரதி பலித்தது: reflected); எண்ணுகின்ற இரண்டு பத்திபாச்சலும் ஏக காலத்தில் அளவற்ற பெயர்களுக்கும் முன் தோன்றும். சொல்லப்பட்ட மனத்தன்மையானது காக தாலீய ஞாயத்தைப்★ போல் அதிசயமான நடையாம் (விசித்திர கதியாம்).

ஒரு சொப்பனத்தை (கனவை) அப்படித் தான் அளவற்ற மனிதர்கள் தனித் தனியே பார்ப்பார்கள். கைவசமான ஒரு விளையாட்டினால் குழந்தைகள் பலர் களிப்பார்கள். சொல்லிய கடஞ்சனாகிய அந்த நீசனானவன் ஊண மண்டலத்திலுள்ள அழகிய வீட்டில் தவறாமல் அக் குறிப்பினால் (prepared for him by the mind) அப்படித் தானே முன்னே பிறந்திருந்தான்.

அக் காரணத்தினால் உறவினர் அனைவரும் மரணம் அடைய அயலான நாட்டை அடைந்தான். வெண்குடை நிழலைச் செய்ய, கீர மண்டலத்தில் தலைவனாய்ப் பின்பு

---

★ Just as the cause of the fall of ripe fruits is wrongly attributed to a crow which perches upon the tree at the time of their fall. so the universe is thought to be real though is merely the creation of the mind.

கனல் புக்கான். உத்தமமான உன் மனத்தில் வீணாக நினைக்கின்ற சம்பந்தத்தால் நீசன் இயல்பானது அப்படியாகப் பத்தி பாய்ந்துள்ளது. (It was only the ideation of your supreme mind thinking about the Nica's life that brought about the reflection which afterwards assumed a reality).

'இவன்' என்றும் 'அவன்' என்றும் 'நான்' என்றும் 'இது' என்றும் 'எனது' என்றும் சிந்திக்கின்ற அறிவில்லாதோர் இடரின் மூழ்குவர். பூமி முதலிய அனைத்தும் 'யாம்' என்கின்ற உண்மையை அறிந்தோர் துன்புற்றுத் தளரார். பூமியில் நிறைந்த பொருள்களில் வேற்றுமையுள்ள மனத்தினால் பாவனையோடு புத்தியில் பொருத்தமாகி அதில் ஆசையை அடையார். தத்துவ ஞானத்தை அறிந்தோர் அஞ்ஞான மயக்கில் வருத்தம் உறார்.

ஞானமானது பூரணம் அடையாததால் மனத்தில் பொருந்திய மயக்கத்தைப் பார்த்து இழிவு என்று தள்ள அறிந்தாயில்லை. இதனால் இம் மயக்கத்தில், கணத்தில் (நொடிப் பொழுதில்) நீ மிக அமிழ்ந்தனை

'இந்த நெடிய மோகத் திகிரிக்கு மானதம் தானே அச்சதாம்' (இந்த மிகுந்த மோகம் என்னும் சக்கரத்துக்கு மனமே அச்சு ஆகும்) அம் மனத்தை விவேக வல்லமையால் கெடுக்கில் அம் மாயை வருத்த மாட்டாது.

(மாயை வடிவான மனத்தைக் கெடுக்கில் அஃது கெடும் என்பதாம்.

நீ எழுந்திருந்து மலைக் குகையினிடத்தில் பத்து வருடம் தவம் மிகச் செய்தால், முழுதுமாய், முடிவொன்று இல்லா மெய்யறிவு முதிரக் கடவாய் என்று (அருளி) பின்பு, திருமாலானவர் வணங்குதற்கு உரிய (முற்கூறிய) தோற்றமாம் வடிவம், தான் எழுந்த இடத்திலே மறைந்து போகத், துன்பம் பொருந்திய மயக்கங்கள் விடுபட்டுக் குற்றமற்ற காதி முனியானவன் கற்பனைகள் (delusions) அனைத்தையும் கெடுத்து அருந்தவம் புரிந்தான்.

பத்து வருடத்தில் ஞான பூரணனாகக் காதி முனியானவன் வாழ்ந்தனன். பின்பு தன்னதான ஒப்பில்லாத சற்பாவம் (state of sat) அடைந்து மேலானவனாகப், பொருந்திய

அச்சமும் துன்பமும் நீங்கி, அனுபவிக்கின்ற போகத்தில் இச்சையில்லாமல் உள்ளபடியில் எப்போதும் ஆனந்த சொரூபம் ஆகிய சீவன் முத்தியை அடைந்தவனாக ஆறி (விஸ்ராந்தி : quiescent state அடைந்து) உவாமதி என்ன (பூரண சந்திரனைப் போல) உளம் நிறைந்தான்.

பயம்எனும் பேய்தனை அடித்தோம் - பொய்ம்மைப்
பாம்பைப் பிளந்துயிரைக் குடித்தோம்
வியனுலகு அனைத்தையும் அமுதென நுகரும்
வேத வாழ்வினைக் கைப் பிடித்தோம்

- **மகாகவி பாரதியார்**